நிக்கோலோ மாக்கியவெல்லி

எழுதிய

# ராஜ தந்திரம்



# the PRINCE



இந்நூல் முதலில் வெளியான ஆண்டு 1513

தினமணி
வெளியீடு : 42

பதிப்பாசிரியர் :
ஏ. என். சிவராமன்

# ராஜ தந்திரம்

## நிக்கோலோ மக்கியவெல்லி

எழுதிய

**" ப்ரின்ஸ் "**

என்னும் நூலின் மொழிபெயர்ப்பு.

(A translation of Niccolo Machiavelli's
" Il Principe ")

" துளசி " மொழிபெயர்த்தது.

**தினமணி காரியாலயம்**
**100,** மவுண்ட் ரோடு
சென்னை
*1946*

# பொருள் அடக்கம்

# பதிப்புரை

மக்கியவெல்லி எழுதிய "பிரின்ஸ்" என்ற நூல் மேனாடுகளில் மிகவும் பிரசித்திபெற்றது. இந்தியர்களாகிய நாம் மக்கியவெல்லியை இத்தாலிய தேசத்து சாணக்கியன் என்று சொல்லலாம்.

நந்த வம்சத்தை ஒழித்து மௌரிய வம்சத்தை ஸ்தாபிக்க உதவி செய்தவன் சாணக்கியன். 2200 வருஷங்களுக்கு முன் வாழ்ந்தவர். சந்திரகுப்த மன்னரின் குருவாகவும் மந்திரியாகவும் சேவை செய்தவர். ஒரு மன்னன், தன் ஆட்சியை ஸ்திரப்படுத்திக்கொள்ளவும், பிரஜைகள் தனக்கெதிராக கிளம்பாமல் தடுக்கவும், பக்கத்து நாட்டு மன்னர்கள் தன் நாட்டை படையெடுக்காமல் பகைவரை தடுக்கவும் வெல்லவும் எந்த முறைகளை கையாளவேண்டும்; என்ன உபாயங்களை அனுஷ்டிக்க வேண்டும்; நாட்டில் பிரஜைகளிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்; வரி முறைகள் எவ்வாறிருக்க வேண்டும் என்பதையெல்லாம் பற்றி சாணக்கியன் "அர்த்த சாஸ்திரத்தில்" அந்தக்காலத்திலிருந்த நிலைமைக்கேற்ற வகையில், பல புத்திமதிகளையும் திட்டங்களையும் எழுதிவைத்துள்ளார். அதுபோலவே, மக்கியவெல்லியும் 15-16-ஆவது நூற்றாண்டில் ஐரோப்பாவின் நிலைமைக்கேற்றவாறு மன்னருக்கு உபதேசமாக ஒரு நூல் எழுதினார்.

இந்த உபதேசங்களின் போக்கு அந்தக் காலத்துக்கேற்ற முறையில் அமைந்திருப்பினும் அதிலுள்ள பல அம்சங்கள் மனித சுபாவத்தையும் மனோதத்துவ ஆராய்ச்சியையும் பற்றியவையாதலின் எந்தக்காலத்துக்கும் பொருத்தமுள்ளவையே.

இந்தியாவில் "சாணக்கியம்" என்பது தர்மத்துக்கும் நியாயத்துக்கும் முரணான "சுயநலச் சூழ்ச்சி" என்ற அர்த்தத்தில் உபயோகிக்கப்படுவதுண்டு. அதுபோலவே மேனாடுகளில் "மக்கியவெல்லியிஸம்" என்ற வார்த்தையும இவ்வாறு தீயகருத்தில் உபயோகிக்கப்படுவதுண்டு. ஆனால்

இவ்வாறு அதை வெறுத்துத் தள்ளுவது பொருத்தமல்ல என்பதை இவ்விருவரது நூல்களிலும் பல இடங்களில் காணலாம்.

மக்கியவெல்லி இந்த நூலை எழுதிய காலத்தில் இத்தாலி பல சிறு ராஜ்ஜியங்களாக சின்னாபின்னப்பட்டுக் கிடந்தது. இந்த நாடுகளிடையே போட்டியும் பொறாமையும் இருந்தது. சில சிற்றரசர்கள் கொடுங்கோலர்களாக இருந்தனர். சில சிற்றரசர்கள் எவ்வித லக்ஷியமுமில்லாமல் இருந்தனர். சிலர் சபலசித்தர்களாக இருந்தனர். வெளிநாட்டார்கள் பலர் இந்த சிற்றரசர்களிடையே போட்டியை வளர்த்து தம் செல்வாக்கை வளர்த்துக்கொள்ள முடிந்தது. அந்த நிலைமையில் நாட்டின் அரசியலில் ஸ்திரத் தன்மையும் மக்களின் வாழ்க்கையில் முன்னேற்றமும் ஏற்படும்படி செய்வதுதான் முக்கியப் பிரச்னையாக இருந்தது. இதுவே மக்கியவெல்லி எழுதின நூலின் முக்கிய நோக்கம்.

இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இந்த நூலை நாம் படிக்க வேண்டும். சாணக்கியன் எழுதிய அர்த்த சாஸ்திரமும் இதேபோன்றதுதான்.

அர்த்த சாஸ்திரத்தில் ராஜதந்திரத்தைப்பற்றி பொதுப் படையான கருத்துக்கள் மட்டுமின்றி நிர்வாக நுணுக்கங்கள் பற்றிய விவரங்களும் இருக்கின்றன. மக்கிய வெல்லியின் அந்த நிர்வாக விவரங்கள் சொல்லப்படவில்லை.

மக்கியவெல்லி எழுதிய புத்தகத்துக்கு இத்தாலியில் "இல் பிரின்ஸிப்" என்று பெயர். இதை அப்படியே மொழி பெயர்ப்பதாயின் "மன்னவன்" என்றுதான் மொழி பெயர்க்க வேண்டும். ஆனால் அவ்வாறு மொழிபெயர்ப்பது புத்தகத்தின் உட்பொருளுக்கு சரியான தலைப்பாக அமையாது என்று கருதியே மொழிபெயர்ப்பாசிரியை "ராஜ தந்திரம்" என்று மொழிபெயர்த்திருக்கிறார்.

இந்த தமிழ்ப்பதிப்பில், 25-ஆவது பக்கத்திலிருந்து 147-ஆவது பக்கம் முடிய உள்ளதுதான் மக்கியவெல்லியின் "ராஜ தந்திர"த்தின் மொழிபெயர்ப்பு. அந்த நூலாசிரியரின் காலத்து இத்தாலிய தேசத்து சரித்திரத்தையும் நூலாசிரியரின் பல அபிப்பிராயங்களையும்பற்றி மொழிபெயர்ப்

பாசிரியை ஸ்ரீமதி "துளசி" எழுதியுள்ள முன்னுரை "ராஜதந்திரத்தின்" கருத்தை புரிந்துகொள்வதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

நூலில் வரும் பல பெயர்களையும், அவை சம்பந்தமான சரித்திர வரலாறுகளையும் விளக்கி, புத்தகத்தின் இறுதியில் "குறிப்புகள்" இருக்கின்றன. இதை வாசகர்கள் ஒரு பெரிய உதவியாக மதிப்பார்கள் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

இந்த பதிப்பின் 20-ஆவது பக்கத்தில் (Meitche) என்ற பெயரை (Neitche) நீட்ஸ் என்று வாசகர்கள் திருத்திப் படித்துக்கொள்வார்களாக.

பதிப்பாசிரியர் முன்னுரை யென்பது மதிப்புரையோ, பாராட்டுரையோ அல்ல. ஆயினும் ஒன்றுமட்டும் சொல்வதற்கு வாசகர்கள் அனுமதிக்க வேண்டும். தேசத்தின் அரசியலில் பெரிய மாறுதல்கள் ஏற்படவிருக்கும் இந்த காலத்தில், அரசியல் கட்சிப் பிளவுகளும் சமுதாயப் பிளவுகளும் சமாளிக்கப்பட வேண்டிய இக்காலத்தில், நிகழ்ச்சிகளை நன்கு மதிப்பிட்டு கவனிப்பதற்கு இந்த நூல் மிகவும் பயன்படும் என்று கருதுகிறோம். ஒரு தேசத்தில் உள்நாட்டு நிர்வாகம் எவ்வளவு முக்கியமோ, அதேபோல "வெளிநாட்டுறவு" பற்றிய கொள்கைகளும் மிகவும் முக்கியம். அவ்விஷயத்தில் "ராஜதந்திரம்" மிகவும் தேவையாக இருக்கும்.

மக்கியவெல்லியின் "ராஜதந்திரம்" தமிழில் வர வேண்டுமென்று இந்தப் பதிப்பாசிரியரிடம் அடிக்கடி கூறிக் கொண்டிருந்தவர் காலஞ்சென்ற ஸ்ரீ. என். டி. வரதாச்சாரி ("காசி") என்ற உத்தம தேச பக்தர். அவர் நல்ல சட்ட நிபுணர்; காலஞ்சென்ற ஸ்ரீ. எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரின் நண்பராயும் சீடராயும் இருந்தவர். இந்த மொழிபெயர்ப்பை தயாரித்ததில் அவரும் பங்குகொண்டுள்ளார் என்று நான் சொல்லவேண்டும்.

"தினமணி" காரியாலயம்,
24—8—'46.

ஏ. என். சிவராமன்.

# ராஜ தந்திரம் (The Prince)

## முன்னுரை

அரசியல் சரித்திரத்தில் நிக்கோலோ மக்கியவெல்லி (Niccolo Machiavelli)யின் ஸ்தானம் மிக முக்கியமானது. அவன் ஒரு புது யுகத்தின் பிரதிநிதியாயும் சிறந்த சரித்திர ஆசிரியனாகவும் விளங்குகிறான். அவன் இத்தாலி தேசத்தில் பிளாரன்ஸ் (Florence) நகரத்தில் கி. பி. 1469-ம் வருஷம் பிறந்தான். 1527-ம் ஆண்டில் நடு வயதிலேயே மரணமடைந்தான்.

இத்தாலி அவன் வாழ்நாளிலும் அதன் பிறகு பல நூற்றாண்டுகள் கூடப் பல சுதந்திர நகரங்களைக் கொண்ட ராஜ்யங்களாகப் பிளவுபட்டிருந்தது. வெனிஸ் (Venice) பிளாரன்ஸ், போன்ற சில நகரங்கள் குடியரசுகளாகவும், வேறு சில நகரங்கள், ஏதேச்சாதிகாரிகளால் ஆளப்பட்டு வருபவையாயும் இருந்தன. மற்றும் சில மாகாணங்களில் குடியரசும் முடியரசும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன. இந்த ராஜ்யங்களெல்லாம் ஒன்றுக்கொன்று சதா சண்டையிட்டுக்கொண்டும், ஆனால் அன்னியர் தாக்குதலைச் சமாளிக்கச் சக்தியற்றவையாயும் இருந்தன. அவற்றினிடையே போட்டியும் போராசையும் மிதமிஞ்சியிருந்தனவாயினும், கூடவே அருங்கலைகளும் இலக்கியமும் வியக்கத்தக்க விதமாக வளர்ந்து வந்தன. அந்த ராஜ்யங்கள் தங்கள் யுத்தங்களைப் பிறதேசத்தினரைக் கொண்டமைத்த கூலிப் படைகளைக் கொண்டே நடத்தி வந்தன.

இத்தாலியின் நடுநாயகம் போன்ற ரோமாபுரியைத் தலை நகராகக் கொண்டு சர்ச், அதாவது (போப்மார்கள்) பரிபாலனவர்கள் (Popes) சில பிரதேசங்களில் தங்கள் நேர்முகமான அதிகாரத்தைச் செலுத்திக்கொண்டிருந்த

தானது, கலவரங்களை இன்னும் அதிகமாக்கியது. உள் நாட்டில் வேற்றுமைகள் பெருகிவிடவே ஐரோப்பாவின் மற்ற பாகங்களிலிருந்த பெரிய ராஜ்யங்கள் அதன்மீது நாட்டம் வைக்கலாயின. ஜெர்மன் சக்ரவர்த்தியும், பிரான்ஸ், ஸ்பெயின் மன்னர்களும் இத்தாலியின்மீது படை யெடுத்தனர். பல தடவைகளில் இவர்களை இத்தாலியின் பல்வேறு ராஜ்யங்களும் அரசியல் கக்ஷியினருமே தங்கள் உதவிக்கழைத்தனர். தங்கள் லௌகீக சக்தியை விருத்தி செய்து கொள்வதற்காக முக்கியமாகப் போப்மார் அடிக்கடி ஸ்பெயினுடைய சகாயத்தைக் கோரினார்கள்.

கி. பி. 1492-ம் ஆண்டில் பிளாரன்ஸில் பிரசித்தி பெற்ற லொரென்ஸோ டி மெடிசி (Lorenzo de Medici) யின் மரணத்துடன் வெனிஸ், பிளாரன்ஸ், மிலன் (Milan) நேபிள்ஸ் (Naples) ரோமாஞா (Romagna) ரோம் (Rome) முதலிய ராஜ்யங்களைக் கொஞ்சநஞ்சம் பிணைத்திருந்த ஒற்றுமையும் போய்விட்டது. அம்மாகாணங்களில் அது வரை என்றும் கண்டிராத போட்டியும் பகைமையும் தாண்டவமாடின. அந்த நிலைமை பிரான்ஸ் மன்னன் எட்டாவது சார்ல (Charles VIII)ஸுக்கு அனுகூலமாக விருக்கவே, அவன் 1494-ம் வருஷம் இத்தாலியை ஆக்கிரமித்தான். பைஸா (Pisa)வும் பிளாரன்ஸும் எளிதில் வீழ்ந்தன. பிறகு பிரஞ்சு சைனியம் முழுபலத்துடன் ரோமாபுரியை எதிர்த்து வெற்றி கொண்டது. 1495-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 22-ந் தேதி நேபிள்ஸ் சார்லஸுக்குப் பணிந்தது. அதன் பின் மற்ற மாகாணங்களும் சார்லஸுடைய ஆட்சிக்குத் தலைவணங்கச் சம்மதித்தன.

மக்கியவெல்லி இந்தப் படையெடுப்பையும், இதன் மூலமாக ஐரோப்பாவின் பெரிய சக்திகளின் பேராசைக்கு இத்தாலி பலியாக வேண்டியிருப்பதையும் கண்டு மனம் நொந்தான். கலைகளிலும் இலக்கியத்திலும் ஈடின்றி விளங்கிக் கவிஞர்களையும், தத்துவ ஞானிகளையும் உலகுக்கீந்த இத்தாலியின் பெருமைக்கு அழிவுகாலம்

  

வந்துவிட்டது என்றெண்ணித் தேசபக்தனான அவன் கடுந்துயருற்றான். தன் சொந்த நகரமான பிளாரன்ஸ் மட்டுமின்றி இத்தாலி முழுவதுமே மறுபடியும் சுதந்திரமடைந்து உலகத்தாரின் நன்மதிப்பைப் பெறவேண்டுமென்று துடித்தான். இத்தாலி ஐக்கிய நாடாகி இராததுதான் இந்த வீழ்ச்சிக்குக் காரணம் என்று அறிந்தான்.

புராதன ரோமர்களின் மஹிமையையும் கீர்த்தியையும் நினைத்து, அதனுடன் தற்காலத்தில் இத்தாலியருடைய ஸ்திதியையும் ஒப்பிட்டுப்பார்த்து மக்கியவெல்லி ஏங்கினான். ரோமர்களுடைய அழியர்க்கீர்த்திக்கு அவர்களுடைய விடா முயற்சி, ஆண்மை, விசால நோக்கம், மற்றவரை அடக்கியாளும் திறமை, எல்லாவற்றிற்கும் மேலாக இணையற்ற தேச பக்தி, தியாகம், முதலிய குணங்கள் காரணமாயிருந்தன. இக்குணங்களுக்கெல்லாம் ஆதாரம் மதம் சரியான நிலையில் இருந்தது தான் என்று ரோமர்களுடைய திருஷ்டாந்தத்தால் தெரிந்தது. தற்சமயம் இத்தாலியருக்குச் சரியான மதம் இல்லாமலிருந்தது. அவர்கள் கிறிஸ்தவ மதத்தின் தர்மங்களை மறந்து வெளிப்பகட்டுக்களை மாத்திரம் விடாமலிருந்தனர். போப்மார்களால் சர்ச் பாழாக்கப்பட்டிருந்தது. தேசத்தில் ஒற்றுமை யில்லாமல் போனதற்குப் போப்மார்களுடைய ராஜீயக்கொள்கைகளே காரணம். அவர்களுடைய கொள்கைகள் தேச பக்தியையும் வீரத்தையும் வளர்ப்பவையாயிருக்கவில்லை. அக்காலத்து இத்தாலிய அரசியல் நிலைமையில் மற்றொரு குறைபாடு சர்மர்ன்யர்களுக்கும் பிரபுக்களுக்குமிடையில் இருந்த மனக்கசப்பாகும்.

மக்கியவெல்லி இருபத்தைந்து வயதில் பொதுவாழ்வில் பிரவேசித்து பிளாரன்ஸ் குடியரசில் பல பொறுப்புள்ள உத்தியோகங்களை வகித்தான். அவன் *உள்நாட்டு விவகாரங்களோடும் யுத்த இலாகாவோடும் சம்பந்தம் பெற்ற பதவி ஒன்றையும் (Secretary to the second Chancery) வகிக்க நேர்ந்தது. *1512*-ம் வருஷம வரையில்

அப்பதவியில் இருந்தான். ஆனால் தேசத்தில் நடந்த எந்த சம்பவத்திலும் அவனுடைய செல்வாக்குக் காணப் படவில்லை.

அவனுடைய உத்தியோக சம்பந்தமான கடிதங்களை மட்டும் வைத்துக் கொண்டிருந்தால் உலகம் அவனை அறிந்தே இருக்காது. நூலாசிரியன் என்ற முறையில் தான் அவன் உலக சரித்திரத்தில் ஒரு உன்னத ஸ்தானத்தைப் பெறுகின்றான். பிற்காலத்தினரின் கவனத்துக்கும் பாத்திரமாகிறான். ஐரோப்பாவில் பழைய ராஜிய ஒழுங்கு முறைகள் குலைந்து, புதிய புதிய பிரச்னைகள் கண்ணிமைக்கும் வேகத்தில் கிளம்பிக் கொண்டிருக்கும் சங்கடமான சமயத்தில், நிகழ்ச்சிகளின் காரணங்களை தர்க்க ரீதியாக விளக்கி, தேசிய வாழ்வில் மாறுதல்கள் ஏற்படுகிற போக்கிலிருந்து இனி வரப்போகும் நிலைமையை ஊகித்தறிந்து, அதற்குத் தக்கவாறு அரசியல் விதிகளை வகுத்தான். இயற்கையாகவே மிகுந்த அறிவாளியாகையால் இப்புதிய துறையில் வெற்றிபெற்றான். அவனுடைய கருத்துக்கள் அவனுடைய காலத்தைவிட மிகவும் முன்னேற்றமுடையவை. அவை பின் தலைமுறைகளைச் சேர்ந்த அரசியல் அறிஞர்களுடைய கருத்துக்களுடன் ஒப்பிடப்படக்கூடியவை. ஏற்கெனவே அமுலில் இருக்கும் மத்திய காலத்து வழக்கு முறைகளையே நலமென நினைத்த அவனுடைய சம காலத்து எழுத்தாளர்களுக்கும் அவனுக்கும் பொதுவான சம்பந்தம் அதிகமாக இல்லை. அவன் கவனித்திருக்கக் கூடிய பிரதேசம் சிறியதுதான் என்றாலும், அவன் புத்தியால் அறிந்த உலகம் மிகப்பெரியது. லொம்பார்டி (Lombardy) மத்திய இத்தாலி, இவற்றின் குறுகிய பரப்பிலிருந்து விசாலமான உலகத்தில் பிரவேசித்து உயர்ந்த விடத்திலிருந்து புவி முழுவதையும் அகக் கண்ணால் காண்கிறான்.

கி. பி. 1513ம் வருஷத்தில் ஓய்வில் இருக்கும் சமயத்தில், மக்கியவெல்லி தனக்கு அழியாப் புகழைத் தரப் போகும் நூல்களை எழுதவாரம்பித்தான். அவன்

வாழக்கையின் சரித்திரத் தொடர்புடைய சூழ்நிலையையும், அந்த நூல்கள் எழுதப்பட்ட சந்தர்ப்பங்களையும் நினைத்துப் பார்த்தாலன்றி அவற்றின் கருத்துகள் விளங்குவது கஷ்டம். பல்வாண்டுகளாக மக்கியவெல்லி தன் காலத்தைப்பற்றி அதிகமாகக் கவனிக்காமல் படிப்பவர்களால் புகழ்ந்து பேசப்பட்டும் குறைகூறப்பட்டும் வந்திருக்கிறான். அவனைப் போல் பிறழ உணரப்பட்ட நூலாசிரியனே கிடையாதெனலாம். வீண்வாதம் புரிவோரும் சர்ச்சிற்குப் பரிந்து பேசுவோரும், அவனைத் தாக்குபவர்களில் பிரதானமானவர்கள். மக்கியவெல்லியின் சித்தாந்தங்கள் அர்த்த புஷ்டி யுள்ளவை. அவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து முழு மதிப்பையும் அறிந்து கொள்வதற்கு முயற்சி தேவையாக இருக்கிறது. அவை அரசியல் துறையில் மாத்திரமே யின்றிச் சமூக வாழ்வில் மனிதனுடைய சாமான்ய நடவடிக்கைகளில் கூடப் பழைய ஒழுங்குகளை மாற்றிப் புதிய அமைப்பைப் புகுத்துவனவாக விருக்கின்றன. அந்நூல்களிலுள்ள தத்துவங்களைக் கொண்டு மதம், நீதி, அரசியல், முதலியவற்றை மதிப்பிட்டு அவற்றின் முடிவுகளை அலசிப் பார்ப்பதிலேயே லயித்துப் போன விமர்சகர்கள் அக்கிரந்தங்களின் இலக்கிய மேன்மை, அவை எழுதப்பட்ட காலம், சந்தர்ப்பங்கள், எல்லாவற்றையும் அலக்ஷியம் செய்து விட்டனர். படிப்படியாக, ஒரு நூற்றாண்டுக்கு மேலாகவே அரசியல் சூழ்ச்சிகளுக்கும் குற்றங்களுக்கும் "மக்கியவெல்லித் தனம்" (Machiavellism) என்ற பெயர் வழங்கவாரம்பித்து விட்டது. அவனுடைய புத்தகங்களைத் தாக்கியும், பழித்தும் பலர் பலவிதமாக எழுதியுள்ள விமர்சனங்களைப் பாராட்டாமல் ஆராய்ச்சி செய்தால்தான் அவற்றைக் குறித்துப் பக்ஷபாதமற்ற முடிவுக்கு வரக்கூடும். அவனுடைய புத்தகங்களிலும் அவனுடைய சம காலத்து எழுத்தாளர்களுடைய கட்டுரைகளிலுமே அதற்கு வேண்டிய விஷயங்கள் அகப்படுகின்றன.

மக்கியவெல்லியின் சித்தாந்தங்கள் அனைத்தும் அவனுடைய எந்த ஒரே புத்தகத்திலும் விரிவாகக் கூறப் பட்டிருக்க வில்லை. பல வேறு சமயங்களில் எழுதப் பெற்ற நூல்களிலுள்ள கருத்துக் களையெல்லாம் திரட்டி ஒப்பிட்டுப் பார்த்தால்தான் அவற்றின் பொதுவான தத்துவங்கள் எவை என்பது தெரியும். சில தத்துவங் கள் முழுமையும் புதிதாக விராமல் ரோமிலிருந்தும் கிரீஸி லிருந்தும் கிடைத்த அறிவுச் செல்வத்தின் சின்னமாயும், ஆனால் புதிய பொருளை விளக்கு முறையில் கூறப்பட்ட வையாயும் இருக்கின்றன. அவனுடைய சம காலத்த வரிற் சிலரும் அதே கொள்கைகளை வெளியிட்டிருக்கிறார் கள். அவற்றிற் சில சாதாரணமான பிரச்னைகளைத் தாற்காலிகமாகச் சமாளிப்பதற்காக் கூறப் பட்டவை. அவை பொதுவானவையல்ல. மற்றவையோவெனில் எந்தக் காலத்திலும், எந்த ஜாதியினரும் குற்றமற்றவை யென்றும் சகஜமான நீதியென்றும் மதிக்கக்கூடியவை. அவன் தன் சித்தாந்தங்களைச் சமயா சமயம் தெரியாமல் வற்புறுத்தும் நோக்குமுடையவனல்ல. அவனுடைய அபிப்பிராயங்கள் எவையும் கடுமையும் கட்டாயமும் உடையவையல்ல. சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி மாற்றிக் கொள்ள இடந்தருபவைதாம். அவன் புத்தகங்களிற் சில, ராஜ நீதி (Politics) தர்ம சாஸ்திரம் (Ethics) இவற் றைக் குறித்து எழுதப்பட்டவை. சில, சாதாரணமான நிலைமைகளையும், தாற்காலிகமான கஷ்ட நஷ்டங் களையும் நிர்வகிப்பதற்காக எழுதப் பட்டவை. தன் காலத்து நிகழ்ச்சிகளின் வெற்றி தோல்விகளுடைய திருஷ்டாந்தங்களை எடுத்துக் காண்பித்துச் சரித்தி ரத்தின் பொதுப்பட்ட உண்மைகளையும், ராஜாங்க முறை களையும் அவற்றில் விவரித்திருக்கிறான். அவனுடைய "லிவியைப் பற்றிய குறிப்புகள்" (Discourses on Livy) என்ற புத்தகம் சித்தாந்தங்களையும் சாஸ்திரிய உண்மை களையும் அடிப்படையாய்க் கொண்டது. அவனுடைய நூல்களிலெல்லாம் மிகப் பிரசித்தி பெற்ற "ப்ரின்ஸ்" (The Prince) இத்தாலியின் தாற்காலிகமான பிரச்னை களையே பிரதானமாகக் கொண்டு எழுதப்பட்டது.

## I. மனித சுபாவத்தைப் பற்றி மக்கியவெல்லியின் கருத்து.

மக்கியவெல்லியின் சித்தாந்தங்களுக்குள் வெகு வலிவானது மனித சுபாவமே கேவலமானது என்பதாகும். மனிதன் பிறவியிலேயே கெட்டவன், வற்புறுத்தப்பட்டாலன்றி நல்லவழியிற் செல்லமாட்டான் என்பது ராஜ நீதியில் அவனுடைய மூலசித்தாந்தம். மனிதனை அவனிஷ்டம்போல் விட்டுவிட்டால் உலகமே தலைகீழாய்ப் போய்விடும், மனிதன் தீமை புரிவதுதான் சகஜம். ஆகையால் ராஜாங்கத்தை அமைப்பவர்கள் அவனைக் கொடியவன் என்று வைத்துக்கொண்டுதான் சட்டங்களை இயற்றவேண்டும். சமயம் கிடைத்தால் அவன் தன் கெட்ட தன்மையை வெளிக்காட்டி விடுவான்; அவனை ஒரு கட்டுப்பாட்டில் வைத்தால்தான் ஒழுங்காக இருப்பான். என்ற அபிப்பிராயத்தைச் சரித்திர மேற்கோள்களுடன் கூறுகிறான்.

இதனுடன்கூடவே அவனுடைய இன்னொரு சித்தாந்தம் பிறரைப்போல் நடக்க முயல்வது மனிதவியற்கை என்பது. "மனிதன் தானாகவே புதிதாக ஒரு முறையை அவலம்பிப்பதைவிடத் தனக்கு முன்னால் ஒருவர் காட்டிய வழியிற் செல்வதையே விரும்புகிறான், இனிமேல் நடக்கப்போவதை அறிய வேண்டுவோர், இதற்கு முன் என்ன நடந்தது என்பதை ஆலோசிக்க வேண்டும். ஏனெனில் சென்ற காலத்துக்கும் வருங்காலத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. மனிதர்களுடைய பிறவி உணர்ச்சிகள் எப்போதும் ஒரேவிதமாயிருப்பதால் அவர்களுடைய காரியங்களும் ஏறக்குறைய ஒரே விதமான பலனைத்தான் கொடுக்கும். எல்லாத் தேசங்களிலும் மக்கள், தொன்றுதொட்டு இருந்துவரும் ருசிகளையும் மனப்பான்மையயுமே கொண்டவர்களாயிருக்கிறார்கள்" என்று ஓரிடத்தில் எழுதுகிறான்.

## II. சட்டத்தின் அவசியம்.

மனிதன் சுபாவத்தில் ஒழுங்கில்லாதவனுகையால் அவனைக் கட்டுக்குள் வைப்பதற்கு ஒரு அரசாங்கம் வேண்டியிருக்கிறது. ஆகையால் சட்டதிட்டங்களும் அவசியமாக விருக்கின்றன. மனிதனுடைய உரிமைகள், கடமைகள், தர்மங்கள், எல்லாமே சட்டத்தினுடைய சிருஷ்டிகள்தாம். ராஜாங்கங்களும் ராஜ்யங்களும் நீடித்து நிற்பது சட்டங்களுடைய மேன்மையைப் பொறுத்திருக்கிறது. தன் குடிகளுடைய பழமையான சட்டங்களை மீறவாரம்பிக்கும் ராஜா தன் ஆட்சியின் காலத்துக்கு முடிவு வந்துவிட்டதென்றறிய வேண்டும்.

சட்டங்கள் பிரயோகிக்கப்படும் முறைகளைப் பற்றித் தீர்மானிக்கச் சாதாரண மனிதனுக்கு அதிகாரம் கிடையாதென்பது மக்கியவெல்லியின் துணிபு. "மனிதன் சென்ற காலத்தைக் கௌரவித்து நிகழ்காலத்தில் அடங்கி வாழவேண்டும். நல்ல அரசன் வேண்டுமென்று ஆசைபபட வேண்டியதுதான். ஆனல் அரசன் எப்படிப் பட்டவனுயிருந்தாலும் சகித்துக்கொள்ளவேண்டும்." ஒரு குடியரசு, அல்லது முடியரசு க்ஷேமத்துடனிருக்கவேண்டுமானல் அவற்றின் தலைவர்கள் தாங்கள் உயிருள்ளவரையில் நன்ருக ஆண்டுவருவது மட்டும்போதாது. அவர்கள் ஏற்படுத்தும் சட்டங்கள், அவர்களுடைய காலத்துக்குப் பிற்பாடும் உறுதியுடன் நின்று நன்ருக நிர்வகிக்கப் படுமாறு அமைக்கப் பட்டிருக்கவேண்டும். அதிகாரம் ஸ்திரமானதா யில்லாவிட்டால், சட்டங்கள் பலவீனப் பட்டுவிடும்; சமூகத்தின் கெடுதிகளை ஒழிக்கவல்லவையா யிருக்கமாட்டா.

## III. மதத்தைப்பற்றி மக்கியவெல்லியின் அபிப்பிராயம்.

சட்டத்தின் பலத்தை மட்டும் நம்பியிருத்தல் தவறு. ஒரு சாம்ராஜ்யத்தின் சக்திக்கு வெறும் சட்டங்கள் மட்டும் இருப்பது போதாது. அவற்றின் கடுமையைக் குறைத்து மனிதனுடைய மனதையும் அடக்குவதற்கு

ஏதாவது ஒரு சாதனம் வேண்டுமானகையால் சர்ச்சும் ராஜாங்கமும் சேர்ந்து ராஜியத்தையும் மத நம்பிக்கைக்களையும் குழப்பாமல், தேசிய வழக்கங்களையும், மனோ தர்மங்களையும் உருப்படுத்தவேண்டும் என்பது மக்கிய வெல்லியின் கருத்து. ஒரு அரசன் தன் பிரஜைகளுடைய மத விசுவாசத்தை வளர்க்கவேண்டும். அவ்வாறு செய்வதால் ஜனங்கள் தெய்வத்துக்குப் பயந்தவர்களாய் நன்னடத்தை, ஒற்றுமை, முதலிய குணங்களைப் பெறுவார்கள்; அவர்களைச் சட்டங்களுக்குக் கீழ்ப்படியச் செய்வது எளிதாகவிருக்கும். அரசியல் வாதிகள் மதத்தின் உண்மைகளையும் மதிப்பையும் பற்றி யோசிக்க வேண்டியதில்லை; சில சமயம அரசன் தனக்கே நம்பிக்கையில்லாத மதத்துக்கு ஆதரவளிக்க வேண்டிவரும். அவன் தன் காரியங்களில் மத நம்பிக்கைகள் குறுக்கிடாதபடி மட்டும் பார்த்துக்கொள்ளவேண்டும். மக்கள் மதத்தையும் சட்டத்தையும் அவமதிக்கத் தொடங்கிவிட்டால் ராஜ்யம் அழிந்துவிடும். அம்மாதிரி ஆபத்தான சமயங்களில் விபரீதமான கிரிசைகளைப் பிரயோகிப்பது நியாயமாகும். ஒரு ராஜ்யத்தின் ஆயுளைக் கொஞ்சகாலம் நீடிக்கச் செய்வதற்காகக்கூட அதனுடைய வியாதியுற்ற அங்கங்களை வெட்டிவிடத்தயங்கலாகாது.

இவை மக்கிய வெல்லியின் பொதுவான கொள்கைகள். இவை எந்தக் கால தேசவர்த்தமானங்களுக்கும் பொருத்தமாயிருப்பவை. அவன் தன் நாட்டின் தாற்காலிகமான பிரச்னைகளுக்காக வகுத்த விதிகள் தம குறுகிய எல்லையைக் கடந்து ராஜிய ஸ்தாபனங்களுக்கெல்லாம் பொதுவான நிதிகளாய் மாறிவிட்டதைக் காண்கிறோம். மனிதவியற்கையை நன்றாக அறிந்து சரித்திர ஞானம் பூரணமாய்ப் பெற்றவனாகையால் சென்ற சம்பவங்களை எதிர்காலத்துக்கு வழி காட்டியாகக் கொள்ளலானான். பழைய முறைகளைப் புறக்கணித்து அரசியலுக்குப் புதிய அர்த்தத்தைக் கற்பித்தான். ரோமாபுரியின் பழைய மாதிரிகள் பின் பற்றத் தக்கவை என்று போதித்தான். பழைய ரோமர்களுடைய உப

தேசங்கள், செயல்கள், லக்ஷியங்கள், முதலியவை தன் காலத்தவரும் அனுசரிக்கத் தக்கவை என்று அவன் அடிக்கடி கூறினான்.

தர்ம சாஸ்திரத்தின் சில விதிகளைப் பற்றி அவனுக்கு தீர்மான அபிப்பிராயங்கள் உண்டு. தர்மம் நீதி என்று நம்மால் மதிக்கப்படுபவற்றைக் குறித்து அவன் தன் எண்ணங்களை வெளியிட்டிருக்கிறான். நன்மை, தீமைகளின் ஸ்வரூபத்தையும் விளக்க முயன்றிருக்கிறான். மனிதன் கெட்டவன், நன்னடத்தை இயற்கைக்கு விரோதம் என்றபின் அவனை நேர் வழியிற் செலுத்துவதெங்ஙனம் என்ற கேள்வி எழுகின்றது. "பட்டினியும் ஏழ்மையும் மனிதனை உழைப்பாளியாக்குகின்றன. சட்டங்கள் அவனை நல்லவனாக்குகின்றன" என்ற பதில் தான் பொருத்தமாயிருக்கிறது. நல்லறம் என்பது அவன் அபிப்பிராயப்படி சில கோட்பாடுகளையே குறிக்கிறது. சட்டம் என்பதில்லாவிட்டால் எந்தக் காரியத்தையும் நியாய விரோதம் என்று சொல்ல முடியாது. இதை ஒப்புக்கொண்ட பிறகு சரியான காரியம் எது என்ற சந்தேகம் உண்டாகிறது. "பெரும்பாலருக்கு நன்மையாயிருப்பதும், பெரும்பான்மையோருக்குத் திருப்தி யளிப்பதாயிருப்பதுந்தான் சரியான காரியம்" என்றான். அக்கொள்கைக்கும் நவீன காலத்திய கொள்கைகளுக்கும் அதிசயமான ஒற்றுமை இருப்பது கண்கூடு. அவன் குறிக்கும் நற்குணங்களில் மத விசுவாசத்தை முக்கியமாகக் கூறுகிறான். பக்திமானென்று பெயரெடுப்பது ஒவ்வொருவருக்கும் அவசியமானது. அந்தப் பெயர் இல்லாவிட்டால் ஜயம் கிடைக்காது. மதவிசுவாசமுடையவன்போல் நடிக்கவாவது வேண்டும் என்கிறான்.

தர்மத்தின் இயற்கையும் நியாயமான செய்கை என்பதும் நிர்ணயிக்கப்பட்ட பின்னர் மனிதன் தன் காரியங்களைத் தன்னிஷ்டப்படி செய்யமுடிகிறதா என்று பார்க்கவேண்டும். அவன் செயல்களில் அதிர்ஷ்டம் குறுக்கிடுகிறது. மக்கியவெல்லியின் கிரந்தங்களிலெல்

லாம் அதிர்ஷ்டம் ஒரு தேவியாக உருவகப்படுத்தப்பட்டு அடிக்கடி குறிப்பிடப் படுகிறது. மனிதனுடைய ஸ்வாதீனம் என்ற பொருள் சஞ்சலமே உருக்கொண்ட அதிர்ஷ்ட தேவதையின் லீலைகளுடன் கலந்து நிற்கிறது. "நமது காரியங்களிற் பாதியை விதி செலுத்துகிறது. ஆனால் மற்றப் பாதியை நாமே நடத்திக்கொள்ள அதிர்ஷ்டம் இடந்தருகிறது" என்று "ப்ரின்"ஸில் எழுதுகிறான்.

இக்கொள்கைகளை வைத்துக்கொண்டு சில பொதுவான தர்மங்களையும் முறைகளையும் கூறுகிறான். சந்தர்ப்பங்களை எதிர்த்து வெற்றி கொள்வதற்கேற்ற முறைகள் இத்தாலியருக்குத் தேவையாக விருந்தன. சந்தர்ப்பத்துக்கு அனுகூலமானபடி குணங்களை மாற்றிக்கொள்வது வெற்றிக்கு இன்றியமையாதது. சமயோசிதம்போல் தன் வழிகளை மாற்றிக் காரிய சித்திக்காக, தான் சிறந்ததென மதிக்கும் லக்ஷ்யங்களைக்கூடக் கைவிடத் துணிந்தவனுக்குத்தான் ஜயம் கிடைக்கும். மனிதனுடைய குணங்கள் ஒரே மாதிரியாயும் சந்தர்ப்பங்கள் மாறிக்கொண்டிருப்பதாலுந்தான் உலகத்தில் தோல்விகள் நிறைந்திருக்கின்றன. மனிதனுடைய கொள்கைகளைவிடச் சந்தர்ப்பங்கள் வலிவுள்ளவை. இத்தாலியர் சமயத்துக்குத் தக்கபடி தங்கள் நடவடிக்கைகளை மாற்றிக்கொள்ளவில்லை என்று மக்கியவெல்லி குற்றங் கூறுகிறான்.

ஒரு அரசன் இவ்வுலகம் தன்னால் சிருஷ்டிக்கப்பட்டதல்ல வென்பதையும் அதில் நடக்கும் காரியங்களுக்குத் தான் உத்தரவாதியல்ல வென்பதையும் உணர்ந்து கொள்ளவேண்டும். அவன் எந்த விதிக்கும் கீழ்ப்படிய வேண்டியதில்லை. குரூரம், பொய்மை, மதமின்மை, முதலியவை அவசியமாயின் அவற்றை அனுசரிக்க அவன் முன் பின் பார்க்கக்கூடாது. தனி மனிதர்களைப் பாதிக்கும் சட்டங்கள் ராஜாங்கங்களுக்குக் கிடையா. அரசியலில் தர்மம் கவனிக்கப்படவேண்டியதில்லை என்கிறான்.

கி. பி. 1513-ம் வருஷத்தில் மக்கியவெல்லி மிகுந்த ஹீனமான ஸ்திதியில் இருந்தான். தன் சொந்த நகர

மக்களுக்குத் தொண்டு புரிவதற்காவது ஏதாவதொரு வேலை கிடைக்காதா என்று ஏக்கமுற்றான். அப்பொழுது தான் இலக்கியத்தில் ஈடுபட்டான். "ப்ரின்ஸ்" அப்போது எழுதப்பட்டதுதான். "ப்ரின்ஸ்" மெடிஸி வம்சத்தைச் சேர்ந்தவனும் அர்பினோ (Urbino) சிற்றரசனுமான லொரென்ஸோவுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. அவன் தனக்கு உத்தியோகம் தரக்கூடும் என்று மக்கியவெல்லி நினைத்ததுமன்றி, இத்தாலியின் விடுதலைக்கும் அவனை நம்புகிறான்.

அவன், பிளாரன்டின் சரித்திரங்கள், (Florentine Histories) யுத்த தந்திரம் (Art of War) முதலிய சில புத்தகங்கள் எழுதியிருந்தாலும் "ப்ரின்ஸ்"தான் அவன் எழுதியவற்றுள் அதிகப் புகழ் பெற்றது.

## IV. "ப்ரின்"லின் ஆராய்ச்சி

"ப்ரின்ஸ்" மக்கியவெல்லியின் அறிவும் அனுபவமும் மக்களுக்களித்த இணையற்ற பரிசாகும். இத்தாலியின் பிரச்னைகள்தாம் இந்நூலுக்காதாரம். இத்தாலி ஒரே அரசனால் ஆளப்பட்டால்தான் பிரான்ஸ், ஸ்பெயின், முதலிய நாடுகளைப்போல் ஒற்றுமை அடையக் கூடும் என்று அவன் கருதினான். பிளவுண்டாக்கும் போப்மார், உபயோகமற்ற போர் வீரர், மக்களின் பரஸ்பர விரோதமான அக்கரைகள் இவற்றை வைத்துக் கொண்டு தேசிய ஒற்றுமையை ஏற்படுத்த முடியாமலிருந்தது. அன்னியர் அதிகாரத்தை ஒழித்துவிட்டால் ஒற்றுமை நிலவக்கூடும் என்றெண்ணினான். ஆனால் இத்தாலியரின் ஒற்றுமை என்ற மக்கியவெல்லியின் கனவு, காவர் (Cavour) மஸினி (Mazzini) காரிபால்டி (Garibaldi) விக்டர் இம்மானுவேல் அரசன் (King Victor Immanuel) இவர்களுடைய காலத்தில்தான் நனவாயிற்று.

"ப்ரின்ஸ்" பலவிதங்களில் முக்கியமான நூலென்று மதிக்கப்படுகிறது. ராஜ நீதியில் முதன் முதல் பரீக்ஷார்த்தமான முறைகளையும், தர்க்க ரீதியான வாதங்

களையும் புகுத்தியவன் மக்கியவெல்லிதான். அதற்கு முற்பட்ட அரசியல் நூல்கள் மத்தியகாலத்துச் சர்ச் (Medieval Church)சின் கொள்கைகளையே அனுசரித்தவையாயிருந்தன. டாண்டே (Dante)யின் காலத்திலும் அதற்குப் பிறகு வெகுநாள்வரையில்கூடச் சர்ச்சின் கொள்கைக்ளை எதிர்க்க ஒருவரும் துணிந்ததில்லை. மத விஷயங்களிற்போலவே அரசியலிலும் தனி மனிதர்களின் ஆராய்ச்சிகளும் முடிவுகளும் சர்ச்சினுல் அனுமதிக்கப் படவில்லை. அந்த முடிவுகள் எவ்வளவு தெளிவானவையாயிருந்தாலும் சரி, சர்ச்சின் அனுமானங்களுக்கு விரோதமானவையாயின் ஒப்புக்கொள்ளப் படவில்லை. மத்தியகாலத்து அரசியல் தத்துவங்கள் நடைமுறையில் சாத்தியமில்லாத நியாயங்களையும், கடமைகள், தர்மங்கள் முதலியனவற்றையும் அடிப்படையாகக்கொண்டிருந்தன. மக்கியவெல்லி அந்த அஸ்திவாரத்தைத் தகர்த்தெறிந்து அரசியலைச் சர்ச்சின் பிடிப்பினின்றும் மீட்டான். அது முதல் மத்தியகாலத்து அரசியலின் போக்கை நிர்ணயித்துக்கொண்டிருந்த அனுமானங்கள் மதிப்பற்றுப் போயின. எல்லாவற்றிற்கும் காரணமும், சரித்திர ஆதாரமும் காண்பிக்க வேண்டியதாயிற்று. காரியங்களுக்குக் காரணங்களைக் கற்பித்துக் கூறாமல் கண்டறிந்து கூற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மக்கியவெல்லியின் தர்க்கரீதியான கொள்கைகள் மறுக்க முடியாதவையாயிருக்கவே, ராஜநீதியில் மட்டுமாவது சர்ச் தன் கட்டுப்பாட்டைத் தளர்த்திவிட வேண்டிவந்தது.

"ப்ரின்"ஸில் ஒரு புதிய அரசனுடைய பலத்தை விருத்தியாக்கும் வழிகளை விவரிப்பதன் மூலம் ராஜநீதிக்கே புதிய அர்த்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இத்தாலியின் விடுதலைதான் மக்கிய வெல்லியின் நோக்கம என்றாலும் இத்தாலியின் கஷ்டங்களை நிவர்த்திப்பதற்காக அவன் அப்பொழுது எடுத்துரைத்த சாதனங்கள் தம் குறுகிய எல்லையைக் கடந்து பொதுவான அரசியல் விதிகளாக மாறிவிட்டன. மனித வாழ்க்கையில் ஒரேவிதமான நிகழ்ச்சிகள் திரும்பத் திரும்ப வந்து

கொண்டிருப்பதால், அவ்விதிகள் பிற்காலங்களில் ஏற்படக் கூடிய சங்கடங்களை எதிர்ப்பதற்கு ஏறக்குறைய ஏற்றவையாகவே இருக்கின்றன.

மக்கிய வெல்லி குடியரசை ஆதரிப்பவன்; ஆயினும் இத்தாலி அப்போதிருந்த நிலைமையில் ஒரு சர்வாதிகாரியின் ஆட்சிதான் தேவை என்று மதித்தான். நிரந்தரமான முடியரசாட்சியை அவன் ஆதரித்தானு என்பது சந்தேகம். முடியரசு நீடிப்பதால் அரசாங்கம் கேடுற்று விடும் என்பது அவன் நம்பிக்கை. மக்களுடைய ராஜ்யம் வரக்கூடும் என்றுதான் அவன் எண்ணினான். "ஜனங்களுடைய வாக்கு கடவுளுடைய வாக்கைப் பிரதிபலிக்கிறது" என்ற கருத்துடையவன். பொதுமக்கள் முதலில் ஒன்றும் தெரியாதவர்களாயிருந்தாலும் காலப் போக்கில் உண்மையை அறிந்து கொள்வார்களென்று ஸிஸிரோ (Cicero)வைப் போல் அவனும் நம்பினான். ஆனால் அவன் செய்யப்பட வேண்டுமென்று விரும்பிய மாறுதல்கள் ஸ்வேச்சாதிகாரியான ஒரு ராஜாவால் செய்யப்படக் கூடியவையே யன்றி ஒரு குடியரசு ஏற்று நடத்தக் கூடியவையாயிருக்கவில்லை. இத்தாலியர் மிகவும் வீழ்ச்சியடைந்திருந்தனர். இல்வாழ்விலும் பொது வாழ்க்கையிலும் அவர்களுடைய நடத்தைகள் மோசமாகவிருந்தன. ரோமாபுரியின் பழைய லக்ஷியங்களை வைத்துக்கொண்டு ஒரு புது யுகத்தை ஏற்படுத்துவதற்கு அவன் ராஜாங்கத்தின் சக்தியை நம்பினான். "ராஜாங்கம சட்டமியற்றுவோர் கையில் மெழுகு போன்றது. அவர்கள் எந்த உருவத்தையும் அதில் அமைக்கக்கூடும்" என்றான்.

குடியரசாகட்டும், முடியரசாகட்டும், ஆரம்பத்தில் தனி மனிதனால் ஏற்று நடத்தப்பட்டாலொழிய நல்ல நிர்வாகத்தையும் சீர் திருத்தங்களையும் பெறுவது கஷ்டம். ஆகவே தன் சொந்த லாபத்தை நாடாமல் தன் தேசத்தின் நலனையே பெரிதாகக்கொண்டு அரசாங்கத்தை அமைக்க வேண்டும். புத்திமான் எல்லா அதிகாரத்தையும் தான் ஒருவனே கைக்கொள்ளக் கடுமை

  

யாக முயலவேண்டும். ஒரு சாம்ராஜ்யத்தையோ மக்களின் அரசையோ ஸ்தாபிப்பதற்காக அவன் செய்ய நேரும் விபரீதமான செய்கைகளுக்காக அவன் அறிவாளிகளால் குற்றங் கூறப்பட மாட்டான். ஒரு ஏகதேச்சாதிகாரி வேண்டுமென்று அவன் நினைத்ததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. நேபிள்ஸ், ரோம, ரோமாஞு, லொம்பார்டி, முதலியவை பழைய பிரபுவம்சங்களுடைய சந்ததியரால் நிறைந்திருந்தன. அவர்கள் கொடியவர்களாயும் ஜனங்களுக்கு உசிதமானவற்றையெல்லாம் எதிர்ப்பவர்களாகவும் இருந்தனர். அவர்களை அடக்குவது ஒரு பலமிருந்த அரசனுல்தான் முடியும். மூலாதாரமான சீர்திருத்தங்களை ஒரு சர்வாதிகாரியைப் போல் குடியரசினுல் உடனே நிறைவேற்றிவிட முடியாது. குடியரசில் அபிப்பிராய பேதங்கள் அதிகமாகையால் விரைவில் ஒரு தீர்மானத்துக்கு வருவது சாத்தியமாயிராது. குடியரசின் முறைகள், உடனே ஏற்படவேண்டிய மாறுதல்களுக்குத் தக்கவையல்ல.

இக்காரணங்களினுல் இத்தாலியை "முரடர்"களான அன்னியரிடமிருந்து விடுவிப்பதற்கு மக்கியவெல்லி ஒரு ராஜாவை வேண்டுகிறுன். "தேசத்துக்கு புத்துயிரளிக்கும் வேலையை சேனுபலம் மிகுந்துள்ள ஒரு ஸ்வேச்சாதிகாரியிடம்தான் ஒப்புவிக்கக்கூடும். அவன் கையாளுமுறைகள் எவ்வகையாயிருக்கவேண்டுமென்பதை விவரிக்கிறுன். பழைய ஸ்தாபனங்களையும் சட்டங்களையும் அநுசரித்த புதிய அரசாங்கத்தையே விரும்புகிறுன். அரசனுடைய எந்த முயற்சிக்கும் ஜனங்களுடைய ஆதரவைச் சம்பாதிப்பது முக்கியம். அது எவ்வளவு கஷ்டமாயிருந்தாலும் சரி தயங்கக்கூடாது. ஏனெனில் பொதுமக்களுடைய ஆதரவு சிறிதளவேனும் இல்லாவிட்டால், ஜயம் கிடைப்பதருமை. அரசாங்கத்தில் மாறுதல்களையும் செய்து மக்கள் அன்பையும் ஒருங்கே பெறுவதெப்படி என்று தோன்றும். ஜனங்களை ஏமாற்றுவதெளிது. சுதந்திரத்தின் சாயலைமட்டும் காண்பித்து அவர்களை மயக்கிவிடலாம். சிலர் ஏமாற மாட்டார்கள்தான். அவர்களை

அரசன் ஒழித்துவிடவேண்டும். ஆனால் அப்படிப்பட்ட கொடுமைகளை அவன் தன் முயற்சியின் ஆரம்பத்தில் தான் செய்ய வேண்டுமேயன்றித் தொடர்ந்து செய்ய லாகாது. அதுவும் ஹிம்சைகளை ராஜா தானே நேரில் செய்யாமல் தன் அதிகாரிகளைக் கொண்டு செய்விக்க வேண்டும். தான் கருணை யுள்ளவன் என்று பெயர் பெற வேண்டும். குடிகளுடைய மானத்தையும் சொத்தையும் அபகரிக்கலாகாது. ஏனெனில் மக்கள் தங்கள் பிதாவின் மரணத்தைக் கூட மறந்து விடுவார்கள். பிதுரார் ஜிதத்தை இழப்பதை மறக்கமாட்டார்கள். இத்தாலியை மீட்க விரும்புகிறவன் தன் சொந்த லக்ஷியங்களையும் மனச் சாட்சியையும் கவனிக்கலாகாது. தன்னுடைய இந்த போதனைகள் மனித தர்மத்துக்கு விரோத மென்றும் மக்கியவெல்லி ஒத்துக்கொள்கிறான். எவ்வளவு உயர்ந்த உத்தேசமானாலும் தீய வழிகளால் அதை நிறைவேற்றுவதை நல்லவர்கள் ஒப்பமாட்டார்கள். அசாதாரணமான சங்கடங்களை இளகிய மனதுள்ளவர்களால் தீர்க்க முடியாது. விசுவாச முள்ள அடிமைகள் எப்போதும் அடிமைகளாகவே யிருப்பார்கள். நல்லவர்கள் ஏழைகளாகவே இருப்பார்கள். ஆகையால் இத்தாலியின் கீர்க்கதியான ஸ்திதியைச் சீர்திருத்துவ தென்ற சிறந்த உத்தேசத்துக்காக ஏமாற்றுதல், ஹிம்ஸித்தல், முதலியவை தேவையாயிருந்தால் ராஜா தயங்காமல் அவற்றை மேற்கொள்ள வேண்டும். "ஜயித்தவர் அவமதிப்படையார்". முடிவு நல்லதாயிருந்தால் முறைகளைப்பற்றி தோஷமில்லை.

மக்கியவெல்லியைப் பற்றிப் பின் சந்ததியார்களுடைய தீர்ப்பு என்ன? பிற் காலங்களில் ஹிம்சையையே ஆதாரமாய்க் கொண்டதும் ஸாரெல் (Sorel) நீட்ஸ் (Meitzche) பாரெடோ (Pareto) முதலியவர்களால் புகழப்பட்டதுமான அரசாங்க முறைக்கு அவன் அஸ்திவாரம் நாட்டியவனா என்பதைப் பார்க்கவேண்டும். அவனுடைய தத்துவங்கள் பாஸிஸ (Fascism)த்துக்கு ஓரளவு காரணமாயிருந்ததை மறுக்கவியலாது. முஸொலினி (Mussolini) பிளாரன்டின் அரசியல் ஞானியின்

சித்தாந்தங்களில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தவன். முஸொலீனியின் பின்வரும் மொழிகள் மக்கியவெல்லியின் உபதேசங்கள் அவனை எவ்வளவு தூரம் ஆகர்ஷித்துவிட்டன என்பதைக் காட்டுகின்றன. "என் தந்தையும் நானும் குளிர் காய்ந்துகொண்டிருக்கும் போது அவர் "ப்ரின்"ஸை உரக்கப் படிப்பது வழக்கம். என் மனதில் அது பதிந்துவிட்டது. நாற்பது வயதில் நான் அதை மறுபடியும் படித்தபோது அதன் கவர்ச்சி இன்னும் அதிகமாயிற்று" என்கிறான்.

மக்கியவெல்லியின் கொள்கைகளைக் குறித்து அவன் மேலும், "நான்கு நூற்றாண்டுகள் ஆனபிறகு மக்கியவெல்லியிடம் என்னதான் மகிமை இருக்கிறது என்று சிலருக்குத் தோன்றக்கூடும். அப்போது அவன் போதித்தவை இக்காலத்தரசர்களுக்கு உபயோகமானவையா என்று கேட்பவர்களுக்கு, அவனுடைய தத்துவங்கள் நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் இருந்ததைவிடத் தற்சமயம் அதிக ஜீவனுள்ளவையாயிருக்கின்றன என்று சொல்லுவேன். ஏனெனில் நம் வாழ்க்கையின் வெளித்தோற்றம் மாறியிருந்தாலும் தனி மனிதர்களுடையவும் ஜாதிகளுடையவும் தன்மைகளில் அதிக வித்தியாசத்தைக் காணவில்லை" என்று கூறுகிறான். மனிதவியற்கை, குடிகளை அச்சத்தில் வைத்தல், பலாத்காரத்தை உபயோகித்தல் முதலியவற்றைக் குறித்து அவனுடைய கொள்கைகள் மக்கியவெல்லியுடையவற்றைவிட ஒருபடி முன்னாலேயே செல்கின்றன.

ராஜா, தந்திரத்தில் நரியையும், தைரியத்தில் சிங்கத்தையும் போலிருந்து ஹிம்ஸையைப் பிரயோகிக்க வேண்டுமென்று "ப்ரின்"ஸில் சொல்லப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் இத்தாலியில் நடந்த இடைவிடாத போராட்டங்களையும் அன்னியர் படையெடுப்புக்களையும் யோசித்துப் பார்த்தால், அந்நாட்டில் அமைதியை நிலவச்செய்வதற்கு அவன் ஒரு பலசாலியான ராஜா வேண்டுமென்று கோரியது எவ்வளவு சரியானது என்று தெரியவரும். ஒழுக்கமற்ற ஜனங்களை தர்மமான வழி

யில் திருத்த முடியாது. ரோமர்களின் உத்தம குணங்களை அவர்களுக்கு ஊட்டி, அவர்களைக் கைதூக்கி விடுவதற்கு ஒரு வலிவுள்ள அரசன்தான் தேவை. இந்த உத்தேசத்துக்காக எல்லாச் சாதனங்களும் அனுமதிக்கத் தக்கவையே. பொது மக்களுக்கு யுத்தத்தில் உத்சாக மூட்டி அவர்களுக்கு ஆயுதப் பயிற்சி யளிப்பது இன்றியமையாதது. இத்தாலியின் முக்கியமான “பலவீனம் அவர்கள் தங்கள் சகாயத்துக்குக் கூலி சைன்யத்தை நம்பி யிருக்கும் நிலைமைதான். இத்தாலியை ஒற்றுமைப் படுத்தி, ஒரு ஜாதியினர் என்ற உணர்ச்சியைத் தூண்டி, பழைய ரோமர்களுடைய சக்தியையும் கௌரவத்தையும் பெறச்செய்து, ஸ்வதந்திரமுள்ள மக்களாக்குவதற்காக ஒரு சர்வாதிகாரி வேண்டுமென்று மக்கியவெல்லி துடிக்கிறான்.

அவனை பாஸிஸத்தின் வழிகாட்டி யென்று முஸோலீனி கூறினன். ஆனல் ஸ்வேச்சாதிகாரம் நிலையாயிருக்க வேண்டுமென்பது அவன் கருத்தல்ல, அக்காலத்தில் ஏற்பட்ட கஷ்டங்களை நிவர்த்திப்பதற்காக மட்டுந்தான் அவ்வகை ராஜாங்கத்தை விரும்பினன். அவன் ஹிருதயத்தில் குடியரசை ஆதரிப்பவன்தான்.

மக்கியவெல்லி ஒப்பற்ற தேசபக்தன். அவனுக்கு “மக்கியவெல்லித்தன”மே சிறிதும் கிடையாதென்பது அவனையறிந்தவர்களுடைய கூற்று. தன் தேசத்தில் நடக்கும் அநியாயங்களையும் துரோகங்களையும் எண்ணி அவன் மனம் ஏக்கமுறுகிறது. ஜனங்களுடைய வீழ்ச்சியும் நல்ல விஷயங்களில் அவர்கள் காண்பிக்கும் அசிரத்தையும் அவனுக்குத் துயரத்தை அளிக்கிறது. தன்தேசம் பண்டைப பெருமையை அடையவேண்டும் என்று தவிக்கிறான். இத்தாலியருடைய பழைய ஆண்மை அழிந்துவிடவில்லை, தற்சமயம் தந்திரமும் திருக்பலமும் வாய்நத அன்னியருக்கெதிரில் அது சோபிக்காமலிருந்தாலும் ஒருதீரனை ராஜா தலைமையை ஏற்று நடத்தினல் “ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு” என்பதை உணர்ந்து அவர்கள் மறுபடியும் வீறுகொண்டெழுவார்கள், தங்கள தந்தையர் நாட்டின் விலங்கை முறித்தெறிந்து விடுதலை வாழ்வைப் பெறுவார்கள், என்பது மக்கியவெல்லியின் உறுதியான நம்பிக்கை.

ஆசிரியை.

# ராஜ தந்திரம்

நிக்கோலோ மக்கியவெல்லி (Niccolo Machiavelli) யிட மிருந்து பீரோ டி மெடிஸி (Piero di Medici) யின் குமாரர் மகிமை பொருந்திய லொரென்ஸோ (Lorenzo) வுக்கு,

ராஜ ஸம்மானத்தைப்பெற விரும்புவோர், தாம் அருமையாக மதிக்கும் ஏதாவதொரு பொருளையோ அல்லது ராஜாவுக்குப் பிடித்த ஒரு வஸ்துவையோ அவருக்குக் காணிக்கையாக அளிப்பது வழக்கம். அவ்வழக்கப்படி அரசர்கள் தங்கள் கௌரவத்துக்கேற்றவாறு குதிரைகள், ஆயுதங்கள், பட்டு பீதாம்பரங்கள், நவரத்னகசிதமான அணிகள், முதலியவற்றைக் காணிக்கையாகப் பெறுகிறார்கள். நான் தங்களுக்கு என் விசுவாஸத்தின் அறிகுறியாக ஏதேனும் ஒரு பொருளை அர்ப்பணம் செய்ய விரும்புகிறேன். என்னுடைய தற்கால்த்து அனுபவங்களிலிருந்தும், புண்டைய சரித்திரத்தை இடைவிடாது ஆராய்ந்து வருவதன் பயனுகவும் பெரியோர்களுடைய அரிய செயல்களைப்பற்றி நான் அறிந்துகொண்ட ஞானக்களஞ்சியத்தைவிட நான் சிரேஷ்டமாக மதிக்கும் பொருள் என்னிடம் வேறொன்றுமில்லை.

நெடுநாட்களாகச் சிரமப்பட்டு நான் பெரியோர்களுடைய அரும்பெரும் காரியங்களைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். அந்த உழைப்பின் விளைவான இச்சிறு நூலைத் தங்கள் சந்நிதானத்தில் சமர்ப்பிக்கிறேன். இச்சிறு காணிக்கை தங்கள் மகிமைக்கேற்றதல்ல என்று நான் கருதினாலும் தங்கள் கருணையில் எனக்கிருக்கும் நம்பிக்கை இதைத் தாங்கள் தயவுடன் அங்கீகரிப்பீர்கள் என்று நினைக்கச் செய்கிறது. எவ்வளவோ ஆண்டுகளாக அரும்பாடு பட்டு, எத்தனையோ ஆபத்து

களுக்குள்ளாகி நான் அறிந்துகொண்ட விஷயங்கள் இவை. இவற்றை மிகக்குறுகிய காலத்தில் எளிதில் தெரிந்துகொள்ளும் சாதனத்தைத் தங்களுக்குதவுவதை விட மேலான காணிக்கை நான் என்ன அளிக்கக்கூடும்? மற்றவர்களைப்போல் நான் என் நூலைப் பெரிய பெரிய வார்த்தைகளாலும் அடைமொழிகளாலும் அலங்கரிக்க முயலவில்லை. என்னுடைய கிரந்தத்திற்கு, அதன் விஷயத்தின் கம்பீரத்துக்கும், புதுமைக்கும் எவ்வளவு தகுமோ அவ்வளவு மதிப்புக்குமேல் நான்வேண்டவில்லை. தாழ்ந்த அந்தஸ்திலிருக்கும் ஒருவன் முடிவேந்தர்களுடைய அரசாங்க நிர்வாகத்தைப் பற்றி விஸ்தரிப்பதும், அவற்றின் விதிகளைக் கூறுவதும் அதிகப் பிரசங்கித்தனமென்று தாங்கள் கருதுவீர்களென்றும் நான் நினைக்கவில்லை. இயற்கைக் காட்சிகளைச் சித்திரிக்க விரும்புபவர்கள், மலைகளின் எழிலை வரைவதற்குப் பள்ளத்தாக்குகளைத் தேடிப்போகிறார்கள். சம பூமியை எழுத வேண்டுமானால் உயர்ந்த இடங்களை நாடுகிறார்கள். அங்ஙனமே சாமான்ய ஜனங்களின் மனப்பாங்கை அறிவதற்கு ராஜாவாகவும், ராஜாக்களின் பண்பைத் தெரிந்துகொள்வதற்கு ஜனங்களிலொருவனாகவும் இருத்தல் அவசியமாகின்றது.

ஆகையால் என் சிறு பணியைத் தாங்கள் மனமுவந்து ஏற்றுக் கொள்வீர்களென்பது என் ஆசை. இந்தத் தயை கூர்ந்து படிப்பீர்களாயின், அதிர்ஷ்ட தேவதையும தங்கள் சொந்தத் திறமையுமாகத் தங்களுக்கு வழங்கக் காத்திருக்கும் பெருமையைத் தாங்கள் சீக்கிரத்தில் அடையவேண்டுமென்பதே என் கோரிக்கை என்பதைக் காண்பீர்கள்.

தாங்கள் உயர்ந்த அந்தஸ்தின் சிகரத்தினின்றும் சற்று கீழே நோக்குவீர்களாயின் கொடிய விதியின் செயலால் நான் அநியாயமாய்ப்படும் துன்பங்கள் புலனாகும்.

# முதல் அத்தியாயம்.

## பலவித அரசாங்கங்களும் அவை நிறுவப்படும் முறைகளும்

மனிதவர்க்கத்தை ஆளுவதற்காக ஏற்பட்டிருக்கும் ராஜ்யங்களும் சமஸ்தானங்களும் (Dominions) முடியரசுகள் அல்லது குடியரசுகளாகவே இருக்கின்றன. முடியரசு நாடுகள் பல்லாண்டுகளாகப் பரம்பரையாய் அரசுபுரியும் மன்னர்களைக் கொண்டவை அல்லது சமீப காலத்தில் ஒருபுதிய அரசனால் கைக்கொள்ளப்பட்டவையாக இருக்கும். புதிய ராஜ்யங்கள் பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா (Francesco Sforza)வுக்கு மிலன் (Milan) கிடைத்ததைபபோல் முற்றிலும் புதிதாகவே இருக்கும். இல்லையேல் ஸ்பெயின் தேசத்தரசனுக்கு நேபிள்ஸ் (Naples) எப்படியோ, அப்படிப் பரம்பரை பாத்தியதைகளுடன் சேர்த்துக்கொள்ளப்பட்ட புதிய அங்கங்களாகவிருக்கும். இவ்விதம் சேர்த்துக்கொள்ளப்பட்ட சமஸ்தானங்கள் ஏற்கனவே வேறொரு அரசனுடைய ஆதிக்கத்தின் கீழ் இருந்தவையாகவாவது, சுயேச்சையாகவாவது இருந்திருக்கும். அவை அரசனுடையவோ அல்லது மற்றவர்களுடையவோ ஆயுதபலத்தினால், அசாதாரணமான திறமையினால், அல்லது அதிர்ஷ்டத்தினால் கைப்பற்றப் பட்டவை.

# இரண்டாவது அத்தியாயம்.

## பரம்பரை முடியரசுகள்

நான் இங்கே குடியரசுகளைப் பற்றிச் சொல்லப் போவதில்லை. அவற்றைக் குறித்து வேறோரிடத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறேன். இங்கே முடியரசுகளைப் பற்றி மட்டுமே கூறுகிறேன். மேற்குறித்த பலவகை ராஜாங்கங்கள் எவ்விதம் நிர்வகிக்கப் படுகின்றன, பாதுகாக்கப்படுகின்றன என்பவற்றையே விவரிக்கிறேன். புதிய முடியரசு நாடுகளை ஆள்வதைவிடப் பரம்பரையாக

ஒரே ராஜ வம்சத்தின் கீழ் வாழ்ந்து பழகிய நாடுகளைப் பரிபாலிப்பதில் சிரமம் குறைவு. ஏனெனில் அவ்வித ராஜ்யங்களில் ஒரு அரசன் பழைய வழக்கங்களை மீறாமலும், எதிர்பாராத விதமாக ஏற்படும் நிலைமைகளைச் சமாளித்துக்கொண்டும் போனால் போதும். ஏதேனும் அபூர்வமான விபரீத சக்தியால் அவன் ராஜ்யம் பறிபோகும்படி நேரிட்டாலொழிய, சாதாரணமான ஜாக்கிரதைகளையுடைய எந்த அரசனும் தன் பதவியை நிலை நிறுத்திக் கொள்ளலாம். அவனுடைய ராஜ்யம் அபகரிக்கப்பட்டுவிட்டால்கூடப் புதிதாய்க் கைப்பற்றியவனுக்கு ஒரு சிறு துரதிர்ஷ்டம் நேர்ந்தாலும் திரும்பவும் ராஜ்யம் இவன் கைக்குக் கிடைத்துவிடும்.

உதாரணமாக இத்தாலியில் பெர்ரா சிற்றரசன் (Duke of Ferrara) கி. பி. 1484-ம் ஆண்டில் வெனிஷியர் (Venetians) களுடைய தாக்குதலையும் 1510-ம் வருஷத்தில் போப் ஜூலிய (Pope Julius)ஸின் எதிர்ப்பையும் எப்படிச் சமாளித்தான் என்பதற்கு அவன் அந்த ராஜ்யத்தின் பழமையான ராஜவம்சத்தைச் சேர்ந்தவனாயிருந்தது தான் காரணம். நியாயமான அரசனுக்குக் குடிகளைத் துன்புறுத்த வேண்டிய அவசியமும் காரணமும் அதிகமாக இரா. ஆகையால் அவன் குடிகளின் அன்பைப் பெறுவது சகஜம். அவனிடம் வெறுக்கத்தக்க துர்க்குணம் ஒன்றும் இல்லாவிட்டால் பிரஜைகள் அவனிடம் இஷ்டத்துடனிருப்பது இயற்கையே. அவனுடைய ஆட்சி வெகுகாலம் நீடித்துப் பழகியதாய்ப் போய்விடுவதால் முதன் முதல் புதிதாகச் செய்யப்பட்ட சட்டதிட்டங்களின் காரணங்களும், ஞாபகமும் குடிகளுக்கிருப்பதில்லை. ஒரு மாறுதல் இன்னொரு மாறுதலை ஏற்றுக்கொள்ளும் வழியைத் தயார் செய்கிறது.

# மூன்றாவது அத்தியாயம்

## கலப்பு முடியரசுகள்

புதிய ராஜாங்கங்களை நிர்வகிப்பதில்தான் உண்மையான கஷ்டம் இருக்கிறது. அது முற்றிலும் நவீனமாயில்லாமல் கலப்பு ராஜ்யத்தின் (Mixed State) அங்கமாகவிருந்தாலோ ஒழுங்கீனமும் குழப்பமும் மேலிட்டு விடுகின்றன. இவை புது ராஜ்யங்களை ஆளுவதில் உள்ள இயற்கையான கஷ்டங்கள். ஏனெனில் தங்களுடைய நிலைமை மேம்படும் என்ற எண்ணமுடையவர்களாய் ஜனங்கள் தாமாகவே மன்னர்களை மாற்றத் துணிந்து அவர்களுக்கு விரோதமாய்க் கிளம்புகிறார்கள். ஆனால் பின்னிட்டு அவர்களுக்குப் பெரும் ஏமாற்றமே கிடைக்கிறது. நாளடைவில் தங்கள் ஸ்திதி மோசத்திலிருந்து படுமோசமாய்விட்டதை உணர்கிறார்கள். இதற்கும் இயற்கையான காரணம உண்டு. புதிய ராஜா தங்கள் ராஜ்யத்தைப் பிடிக்கும்போது அவனுடைய போர்வீரர்கள் மூலமாயும் இன்னும் பலவிதமாயும் மக்கள் துன்புறுத்தப் படுவதால் அவர்கள் புதிய ராஜாவை எதிர்க்கிறார்கள். இது ஒரு தடுக்கமுடியாத கஷ்டம்.

இவ்விதமாக அந்த ராஜ்யத்தைக் கைப்பற்றுகையில் பாதிக்கப்பட்ட மக்களால் அரசன் துவேஷிக்கப் படுகிறான். வெற்றிக்கு உதவி புரிந்தவர்களுடைய சிநேகத்தையும் நீடிக்கச் செய்வதரிது. ஏனெனில் அவர்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்வது முடியாத காரியம். அவாக்கள் விஷயத்தில் கடுமையான நடவடிக்கை எடுப்பதும் கஷ்டம். ஏனென்றால் அவர்கள் உதவி செய்தவர்களாக இருக்கிறார்கள். என்னதான் சேனபலம் இருந்தாலும் ஒரு தேசத்தில் அதிகாரத்தை ஸ்தாபிப்பதற்கு உள்நாட்டு மக்களுடைய ஆதரவு அவசியம் வேண்டும். அந்த ஆதரவில்லாததால்தான் பிரான்ஸ் மன்னன் பன்னிரண்டாவது லூயி (Louis xii) மிலனைச் சுலபமாய் ஜயித்தும் உடனே இழக்கும்படியாயிற்று. முதல் தடவை லுடோவிகோ (Ludovico)வின் படைகள்

மட்டுமே பிரஞ்சு மன்னனைத் தோற்கடிக்கப் போதுமான வையாயிருந்தன. ஏனெனில் முதலில் மனப்பூர்வமாக லூயி அரசனுக்குத் தங்கள் கதவுகளைத் திறந்துவிட்ட மிலன் வாசிகள், தாங்கள் எதிர்பார்த்த நன்மைகள் கிடைக்காமல் தங்கள் ஆசைகளெல்லாம் வீணாகிவிடவே அவனுடைய உபத்திரவத்தைச் சகிக்க முடியாமல் அவனை வெறுத்தனர். லூயிக்கு இவ்வாறு ஜனங்களுடைய சகாயம் கிடைக்காமற் போயிற்று.

கலகம் மூண்ட பிரதேசங்களைத் திரும்பப் பிடித்தால் ஒரு அரசன் அதை மீண்டும் எளிதில் கைநழுவ விடமாட்டான். கலகம் விளைந்ததின் மூலம் அவன் விழிப்படைந்து விடுகிறபடியால் கலகக்காரர்களைக் கண்டு பிடித்து அவர்களைத் தாக்ஷிண்யமின்றித் தண்டிப்பது மல்லாமல் தனக்கு எங்கெங்கே பலக் குறைவென்று பார்த்து அவ்விடங்களை யெல்லாம் பலப்படுத்திக் கொண்டுவிடுகிறான். ஆகையால் முதல் முறை லுடோவிக் எல்லைப் புறத்தில் கர்ல் வைத்ததே பிரான்ஸைத் தோற்கடிக்கப் போதுமானதாயிருக்க, பிரான்ஸ் மறு முறை மிலனைப் பிடித்தபின் உலக முழுவதும் எதிர்த்து நின்று பிரஞ்சு சைன்யத்தை இத்தாலியை விட்டுத் துரத்திய பின்னரே பிரான்ஸ் மிலன் மீதுள்ள தன் பிடியை விட்டது. முன் கூறிய விஷயங்களே இதற்குக் காரணமாயிருந்தன. ஆனால் இரண்டு தடவைகளும் பிரான்ஸ் தோற்றதென்னவோ தோற்றதுதான். முதல் தரத்து அபஜயத்தின் காரணங்களை சொல்லியாயிற்று. இரண்டா முறையும் தோல்வி யடைந்ததன் காரணங்கள் எவை, அத்தோல்வியை எப்படித் தடுத்திருக்கலாம், பிரான்ஸ் மன்னன் ஸ்தானத்தில் இன்னொருவன் இருந் திருந்தால் என்ன செய்திருப்பான் என்று பார்க்கலாம். ஒரு தேசத்துடன் இணைக்கப்பட்ட மற்ற நாடுகள் அதே ஜாதியினரைக் கொண்டவையாகவோ அதே பாஷை வழங்கப் பெறுபவையாகவோ இருப்பது சந்தேகம் என பதைக் கவனிக்க வேண்டும். ஒரே ஜாதி பாஷையைச் சேர்ந்த குடிகளாயின், அதிலும் சுயேச்சையை அறியாத

வர்களாயின் அவர்களை ஆள்வது சுலபம். அவர்களைப் பத்திரத்துடன் ஆள்வதற்கு ஏற்கனவே அந்நாடுகளில் அரசாண்டுவந்த ராஜகுடும்பத்தினரை அழித்துவிட்டால் போதும். மற்றபடி தங்கள் பழைய நிலைமைக்குக் கேடில்லாமலிருப்பதாலும், பழக்க வழக்கங்களில் வித்தியாசமில்லாததாலும் மக்கள் புதிய அரசனிடம் அடங்கி அமைதியாக வாழத் தொடங்கி விடுகிருர்கள், இதற்கு உதாரணம் இவ்வளவு காலமாகப் பிரான்ஸுடன், இணங்கி வாழும் பர்கண்டி (Burgundy) பிரிட்டனி (Brittany) காஸ்கனி (Gasconi) நார்மண்டி (Normandy) முதலிய மாகாணங்கள் இருக்கின்றன. பாஷையிற் சிறு வேற்றுமை இருந்தாலும் பழக்க வழக்கங்கள் ஓரே மாதிரியானவையாயிருப்பதால் அவர்கள் ஒத்துப் போக முடிகிறது. அம்மாதிரியான பிரதேசங்களை வென்று அவற்றை ஆளவிரும்புவோர் இரண்டு விஷயங்களில் கவனம் செலுத்தவேண்டும். ஒன்று, பழைய ராஜ பரம்பரையின் பூண்டையே வைக்கக் கூடாது. இரண்டாவது, ஏற்கனவே ராஜ்யத்தில் வழங்கும் சட்டங்களையும் வரி விதிகளையும் மாற்றக்கூடாது. இவ்வாறு நடந்தால் அந்நாடுகள் சீக்கிரத்திலேயே ஒத்துப்போய்ப் பழைய ராஜ்யத்துடன் ஒன்ருகவே ஆய்விடும்.

ஆனல், பாஷை, சட்டம், ஆசார அனுஷ்டானங்கள், முதலியவற்றில் வேறுபட்ட சமஸ்தானங்களாயிருந்தால் அதில் எதிர்க்கவேண்டியிருக்கும் சங்கடங்கள் மிகப் பெரியவையாகும். அவற்றை ஸ்தாபித்துக் கொள்வதற்கு அதிர்ஷ்டம் மாத்திரமின்றி அரிய உழைப்பும் தேவையாகவிருக்கிறது. அதற்குப் புதிய மன்னன் அந்த சமஸ்தானத்திலேயே வசிப்பது சிறந்ததும் நிச்சயமானதுமான ஒரு வழி. இதனல் அவனுடைய அதிகாரம பத்திரமாயும் நிலையாகவும் இருக்கும். கிரீஸில் துருக்கிய மன்னன் (Grand Turk) அப்படித்தான் செய்தான். என்னதான் ஜாக்கிரதையாக மற்ற சாதனங்களைக் கொண்டு பாதுகாத்தாலும் துருக்கிய அரசன் கிரீஸில் போய்க் குடியேறியிராவிட்டால் அந்நாட்டில் அவன் தன்

உரிமையைக் காப்பாற்றிக் கொண்டிருக்க வியலாது. கிட்டவே இருந்தால் உள் நாட்டில் நடக்கும் ஒழுங்கீனங்களை உடனுக்குடன் அறிந்து அவற்றை அகற்ற முடியும், தூரத்தில் வசித்தால், கலவரங்களைப் பற்றிய செய்தி அரசன் காதில் விழுமுன் நிலைமை கேவலமாகிவிடும். அதுவுமன்றி அரசன் சமீபத்தில் இருந்தால் அவனுடைய உத்தியோகஸ்தர்கள் ராஜ்யத்தைக் கொள்ளையடிக்க அஞ்சுவார்கள். தங்கள் அரசனுடன் நேருக்கு நேர் விவகாரம் நடத்த முடிவதால் ஜனங்களுக்கும் திருப்தி. ராஜபக்தி உண்டாவதற்கும் வழி உண்டு, ராஜபக்தி யில்லாதவர்கள் பயப்படுவதற்கும் ஏதுவுண்டு. அரசன் அங்கேயே இருப்பதால் அயலரசர்களும் அந்நாட்டை அணுகத் தயங்குவார்கள். அரசன் அங்கு வசிக்கும் வரையில் அவன் கையிலிருந்து அந்த ராஜ்யத்தைப் பிடுங்குவது கடினம்.

இதைவிடச் சிறந்த மற்றொரு வழி யென்னவென்றால் அந்த சமஸ்தானத்தின் முக்கியமானவிடங்கள் இரண்டொன்றில் அரசன் தன் சேர்ந்த ஜனங்களைக் குடியேறச் செய்வதுதான். இப்படியாவது செய்ய வேண்டும். இல்லாவிட்டால் பெரிய பட்டாளங்களையாவது கொண்டு போய் வைக்கவேண்டும். குடியேற்றத்தால் அரசனுக்குப் பணச்செலவு கிடையாது. தன் கைச் செலவின்றியே மக்களைக் குடியேற்றி ஆதரிக்கக்கூடும். யாருடைய நிலங்களையும், வீடு வாசல்களையும் வாங்கிக் குடியேறுகிறவர்களுக்குக் கொடுக்கிறோமோ, அவர்களை மட்டுந்தான் குடியேற்ற ஏற்பாடு பாதிக்கும். அவர்களுடைய தொகை சொற்பமே. கஷ்ட நஷ்டங்களை அடைந்தவர்கள் ஏழைகளாய், இங்கொருவர் அங்கொருவராக விருப்பதால், அவர்களால் அரசனுக்கு ஒரு தீங்கும் செய்ய முடியாது. மற்றவர்கள் பாதிக்கப்படாதவர்களாகையால், அவர்களைச் சமாதானப்படுத்துவது சுலபம். தங்களுக்கும் மற்றவர்களுடைய கதி நேர்ந்து தங்கள் சொத்து சுதந்திரங்களும் போய்விடுமோ என்ற பயத்துடன் அவர்கள் ஒழுங்கா யிருப்பார்கள். முடிவாகக்

குடியேற்ற ஏற்பாட்டால்*செலவு கிடையாது. குடியேற்ற நாடுகள் நம்பகமுள்ளவை. அதிகத் தொந்தரவு கொடுக்காதவை. அதனால் பாதிக்கப்பட்டவர்கள் தரித்திரர்களாய்ச் சிதறுண்டிருப்பதால், அவர்களால் தீங்கு செய்யவியலாது என்பதைக் கண்டோம். மனிதர்களை நல்லதனப்படுத்தவாவது வேண்டும், அல்லது ஒரேயடியாக ஒழித்துவிடவேண்டும். சிறுதீமைகளைப் பொறுக்காமல் பழிவாங்கத் துணிபவர்கள் பெரிய தீங்குகளுக்குப் பதிலாக ஒன்றுமே செய்யச் சக்தியற்றவர்களாய் விடுவார்கள். ஆகையால் மனிதனுக்குச் செய்யப்படும் கொடுமைகள் அவன் பழிவாங்கக் கூடாதபடி செய்யப்படவேண்டும். அவனைத் தலையெடுக்க விடாதபடி அடித்துவிட வேண்டும். குடியேற்றத்துக்குப் பட்டாளத்தை வைத்தால், செலவு அதிகம். ராஜ்யத்தில் கிடைக்கும் வரிப்பணத்தை யெல்லாம் பட்டாளம் சாப்பிட்டுவிடும்; புதிய நாட்டைப் பிடித்ததில் ராஜாவுக்கு நஷ்டந்தான் உண்டாகும். பட்டாளம் வந்து சேர்ந்திருப்பது எல்லோருக்குமே துன்பமாயும் அசௌகரியமாயும் இருப்பதால், ஜனங்கள் மனதில் துவேஷ உணர்ச்சி வளரும். ஒவ்வொருவனும் பகைவனாய் விடுவான். தோற்கடிக்கப்பட்டு வீட்டோடு வீடாய்க் கிடந்தால்கூட இப்பகைவர்கள் அபாயமானவர்கள், தீங்கிழைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்கள். எப்படிப் பார்த்தாலும் குடியேற்ற முறை எவ்வளவுக்கெவ்வளவு லாபகரமானதோ அவ்வளவுக்கவ்வளவு சைனியத்தை வைத்துப் பராமரிப்பது உபயோகமற்றது.

இன்னும், இதுபோன்ற சம்ஸ்தானத்தை ஆளும் அரசன் சுற்றிலுமுள்ள தன்னிலும் பலங் குறைந்தவர்களான அரசர்களுக்குத் தன்னைத் தலைவனாக்கிக்கொண்டு அவர்களுக்குப் பாதுகாப்பளிக்க முன் வரவேண்டும். தன்னைப்போன்ற வேறொருவன் பலங் குறைந்தவர்களைத் தாக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதிருப்தியுடையவர்கள் பேராசையாலோ பயத்தாலோ தூண்டப்பட்டவர்களாய்த் தங்களுடைய சண்டையில் தலையிடும்

படி அவனை வேண்டுவார்கள். இத்தோலியர்கள் (Ætolians) கிரீஸில் ரோமர்களை அப்படித்தான் அழைத்தார்கள். ரோமர்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் அந்தந்த மாகாணத்தவர்களுடைய அழைப்பின்மீதே பிரவேசித்தார்கள். பலசாலியான அயலானொருவன் ஒரு மாகாணத்துக்குள் நுழைந்துவிட்டால் ஏற்கனவே ஆளும் வர்க்கத்தார்மீதுள்ள பொறாமையால், சக்தி குறைந்த மக்கள் அவனைப் பின்பற்ற வாரம்பித்துவிடுகின்றனர். அவனுக்கு இவர்களை வசப்படுத்துவதில் கஷ்டமே கிடையாது. தாங்களாகவே அவனுடன் சேர்ந்து விடுகின்றனர். அவர்களுடைய அதிகாரமும் பலமும் அளவுக்குமேல் போய்விடாதபடி மட்டும் பார்த்துக்கொள்ள வேண்டும். அவன் தன் சேனை பலத்தினாலும் இம்மக்களின் ஆதரவாலும் சக்திசாலிகளான எதிரிகளை அடக்கி எல்லா விஷயங்களிலும் அந்நாட்டில் அவன் வைத்தது சட்டமாய் இருக்கலாம். இவ்விதமாகத் தேசத்தை நிர்வகிக்காவிட்டால் கைப்பற்றிய நாட்டை விரைவில் இழக்க நேரும். நாடு கைவசத்தில் ஒரு வேளை இருந்தாலும், அதனால் தொல்லைகளும் கஷ்டங்களும் எல்லையின்றி இருந்துகொண்டேயிருக்கும்.

ரோமர்கள் தாங்கள் ஜயித்த நாடுகளில் இவ்வுபாயத்தையே கடைப்பிடித்தார்கள். குடியேற்றங்களை அமைத்து, பலங்குறைந்தவர்களுடைய சக்தியை விருத்தி செய்யாமல் அவர்கள் மனதைக் கலைத்து பலமிக்கவர்களை அடக்கிவைத்து, அயல் நாட்டரசர்கள் அவர்களிடையே செல்வாக்குப் பெற முடியாமல் பேர் செய்து வந்தனர். இதற்குக் கிரீஸின் திருஷ்டாந்தம ஒன்றே போதும். ரோமர்கள் அக்கேயர் (Achæans)களோடும் இத்தோலியர்களோடும் சிநேகம் செய்துகொண்டு மாஸிடோனியா தேசத்தை வீழ்த்தினர். ஆண்டியோகஸ்ஸைக் (Antiochus) கிரீஸை விட்டுத் துரத்தினர். ஆனால் அக்கேயர்களையும் இத்தோலியர்களையும், ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொள்ளவிடவில்லை. பிலிப் (Philip) மன்னன் எவ்வளவு கேட்டுக்

கொண்டும் அவனுடைய செல்வர்க்குக் குறையாமலிருக்கையில் அவனுடன் அவர்கள் உறவு கொண்டாட விரும்பவில்லை. ஆண்டியோகஸ் அவ்வளவு பலசாலியாயிருந்துகூட அந்த மாகாணத்தின் எந்தப் பாகத்திலும் அதிகாரம் செலுத்தும் உரிமையை அவர்களிடமிருந்து பெற முடியவில்லை.

அறிவாளிகளான அரசர்கள் என்ன செய்ய வேண்டுமோ, அதைத்தான் ரோமர்கள் செய்தார்கள். தற்காலத்தைப் பற்றிமட்டும் நினைத்துக்கொண்டிருந்து விடாமல் பின்னிட்டு விளையக்கூடிய சண்டை சச்சரவுகளையும் யோசனை செய்து அதற்குத் தக்கபடி சாமர்த்தியமாக முன் ஜாக்கிரதை செய்து கொண்டார்கள். இன்னது வருமென்பதை முன்னாலேயே தெரிந்துகொண்டால், அதை நிவர்த்திப்பது எளிது. இங்கு வருமளவும் காத்திருப்பது வியாதியை அலக்ஷியம் செய்வது போன்றது. சரியான சமயத்தில் மருந்து செய்யாமலிருப்பதால் வியாதி முற்றிவிடுகிறது. க்ஷய வியாதிகளில் ஒன்றைப் போல் ஜனங்களுடைய அதிருப்தியை முதலில் கண்டு பிடிப்பது கஷ்டம். ஆனால் நிவர்த்திக்க வழியுண்டு. காலங்கடத்தினால் வியாதியை எல்லோரும் கண்டு கொள்ள முடியும். ஆனால் மருந்து பிடிப்பது அரிது. அரசாங்க விஷயங்களிலும் அப்படித்தான். புத்திமான்கள் பின்னால் வரக்கூடிய தீமைகளை அவை உள்ளுக்குள் புகைந்து கொண்டிருக்கும்போதே தெரிந்து கொண்டு அவற்றை அகற்றும் வழியைப் பார்க்கிறார்கள். தூரதர்சிகளான ரோமர்கள் வரப்போகும் இன்னல்களைத் தங்கள் கூரிய புத்தியால் ஊகித்தறிந்து, வெள்ளம் வருமுன் அணைபோலிக் கொண்டார்கள். யுத்தம் வந்துவிடுமே என்று பயந்து தீமைகளை அவர்கள் ஒருபோதும் வளரவிட்டதில்லை. யுத்தம் வந்தே தீருமென்பது அவர்களுக்குத் தெரியும். அதைத் தள்ளி வைத்துக்கொண்டே போவது எதிரிக்குத் தான் லாபகரம் என்றும் அறிவார்கள். ஆகையால்தான் அவர்கள் பிலிப்புடனும் ஆண்டியோகஸுடனும் கிரீஸில் யுத்தம் தொடுத்தார்கள்.

ஏனெனில் இத்தாலியில் போர் நிகழ்வதைத் தடுக்க விரும்பினார்கள். அச்சமயம் போரே விளையாமற் செய்திருக்கலாம். அப்படி அவர்கள் செய்யவில்லை. காலதாமதத்தால் லாபமுண்டு என்று தற்காலத்திய அறிஞர்கள் சொல்கிறார்கள். ஆயினும் அவர்கள் அப்படிச் செய்யாமல் தங்கள் புத்தியையும் சாமர்த்தியத்தையுமே நம்பினார்கள். காலம் எல்லாவற்றையுந்தான் கொண்டு வருகிறது. நன்மையைத் தருமோ அல்லது தீமையைத் தான் கொடுக்குமோ யாருக்குத் தெரியும்?

பிரான்ஸ் இம்மாதிரி ஏதாவது செய்ததா என்று பார்ப்போம். சார்ல (Charles)ஸைப் பற்றி நான் ஒன்றும் சொல்லப்போகிறதில்லை. அவனைவிட அதிக நாட்கள் இத்தாலியில் அரசாண்ட லூயியின் நடவடிக்கைகளை நாம் இன்னும் தெளிவாகப் பார்க்கக் கூடும். அவன் அன்னிய ராஜ்யத்தில் தன் அதிகாரத்தை நிலைநாட்டுவதற்கு ஒரு அரசன் என்ன செய்ய வேண்டுமோ அதற்கெல்லாம் நேர்மாருக நடந்து கொண்டான். பேராசையுள்ள வெனிஷியர்கள் லூயி அரசனை இத்தாலிக்கு வரும்படி அழைத்தார்கள். அவனுடைய வருகையால் லொம்பார்டி (Lombardy)யில் பாதியைத் தாங்கள் பெறலாமென்பது அவர்களுடைய ஆசை. அவர்களுடைய அழைப்புக் கிணங்கி அவன் வந்தது குற்றமன்று. இத்தாலியைக் கைப்பற்றுவதற்காக அவன் அந்நாட்டிற்குள் நுழைய இடங் கிடைப்பது அவசியமாகவிருந்தது. இத்தாலியில் அவனுக்கு வேண்டியவர்கள் யாரும் இருக்கவில்லை; போதாக் குறைக்கு சார்லஸின் செயல்கள் லூயியை ஜனங்கள் வெறுப்பதற்குக் காரணமாயிருந்தன. ஆகையால் கிடைத்த சிநேகிதர்களை அவன் வரவேற்க வேண்டியிருந்தது. மற்ற விஷயங்களில் தவறு செய்யாமலிருந்திருந்தால் வெகு சீக்கிரத்தில் அவனுக்கு வெற்றி கிடைத்திருக்கும்.

லொம்பார்டியைப் பிடித்தவுடன் சார்லஸ் இழந்த நற்பெயரை யெல்லாம் லூயி பெற்முன். ஜினோவா

(Genoa) பணிந்தது. பிளாரன்டின்கள் (Florentines) அவனுடன் உறவாடினர். மாண்டுவா பிரபு (The Marquis of Mantua) பெராரா, பென்டிவோக்லி சிற்றரசர்கள், (The Dukes of Ferrara and Bentivogli) போர்லி சீமாட்டி (The Lady of Faeli) பேன்ஸா (Faenza) பிஸாரோ (Pesaro) ரிமினி (Rimini) காமரினோ, (Camerino) பியோம்பினோ (Piombino) முதலிய பிரபுக்கள், லூக்கா (Lucca) ஸீனு (Seina) நகர வாசிகள் எல்லோரும் அவனுடன் சிநேகமாவதற்கு முன் வந்தனர். வெனிஷியர்களுக்குத் தங்கள் பதட்டம் பிறகுதான் தெரிந்திருக்கும். லொம்பார்டியி லுள்ள சில நகரங்களைத் தாங்கள் அடைவதற்காக இத்தாலி தேசத்தின் மூன்றில் இரண்டு பாகங்களுக்கு லூயியை அரசனை அதிகாரியாக விட்டுவிட்டனர்.

நான் முன் கூறிய விதிகளைமட்டும் அனுசரித்திருந்து தனக்குக் கிடைத்த அந்தச் சிநேகிதர்களை உறுதியுடன் அடக்கி வைத்திருக்கும் பக்ஷத்தில் லூயிக்கு இத்தாலியில் தன் கீர்த்தியை நிலை பெறச்செய்வது எவ்வளவு எளிதாக விருந்திருக்கும்! அந்த நண்பர்கள் பெருந் தொகையினராயும், சக்தியற்றவர்களாயு மிருந்ததுடன் சர்ச்சினிடமும் வெனிஷியர்களிடமும் அஞ்சியவர்களாயிருந்ததால் அவனுடைய தயவை எப்போதும் வேண்டி, அவன் சார்பிலேயே நிற்க வேண்டியவர்களாயிருந்தார்கள். அவர்களுடைய ஒத்தாசையைக் கொண்டு மற்றுமுள்ள மகத்தான எதிரிகளை ஒரு கை பார்த்திருக்க முடியும். ஆனால் அவன் மிலனுக்கு வந்தவுடன் இதற்கு நேர் விரோதமான ஒரு காரியத்தைச் செய்தான். ரோமானு(Romagna)வைப் பிடிப்பதற்குப் போப் அலெக்ஸாண்டர் (Pope Alexander) ருக்கு உதவி செய்தான். இப்படிச் செய்ததால் தன்னிடம் அடைக்கலம் புகுந்தவர்களுடைய நல்லுறவை யிழந்து தன்னைப் பலஹீனப் படுத்திக் கொண்டதுடன் நில்லாமல் சர்ச்சுக்கு அதனுடைய ஆத்மிக சக்தியுடன் லௌகிக பலத்தையும் ஏராளமாக அளித்து அதை இவ்வளவு அதிகாரம் வாய்ந்ததாய்ச் செய்து விட்டதை அவன் அறியவில்லை.

முதல் தவறு இன்னும் பல தவறுகளுக்குக் காரண மாயிற்று. அலெக்ஸாண்டரின் பேராசையை அடக்க வும் அவன் டஸ்கனி (Tuscany)யில் அதிகாரியாவதைத் தடுக்கவும் இத்தாலிக்கு வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டது. சர்ச்சின் பலத்தைப் பெருக்கித் தன் நண்பர் களுடைய நல்லெண்ணத்தை இழந்ததும் போதாமல் நேபிள்ஸ் ராஜ்யத்தின் மேல் மோகம் வைத்து அதை ஸ்பெயின் அரசனுடன் பங்கிட்டுக் கொண்டான். இது வரையில் இத்தாலியில் ஏகபோகமாக அரசு செலுத்தி வந்தவன் தன்னுடன் கூட ஒரு துணைவனை அழைத்து வந்து, தன்னிடத்தில் அதிருப்தி யடைந்த பேராசைக் காரர்கள் இன்னொருவனுடைய உதவியைக் கோர இட முண்டாக்கி விட்டான். இத்தாலியில் தனக்குக் கப்பம் கட்டத்தகுந்த ஒரு ராஜாவை விட்டுப் போயிருக்கக் கூடியவன், அந்த ராஜாவை விரட்டிவிட்டுத் தன்னையே துரத்தவல்ல ஒருவனை வரவழைத்தான்.

புதிய நாடுகளை ஜயிக்க வேண்டுமென்கிற ஆவல் இயற்கையானது தான். அதைச் சாதிக்கக் கூடியவர் கள் புகழப்படுகிறார்களே யன்றிக் குறை கூறப்படுவ தில்லை. ஆனால் அவ்விதம் செய்து வெற்றியடையும் வல்லமையின்றி வீண் ஆசைப்பட்டு அவ்வேலையில் இறங்குகிறவர்கள் கடுங் குற்றத்துக்கு ஆளாகிறார்கள். பிரான்ஸ் தன் சொந்த சேனைகளின் உதவியால் நேபிள்ஸை ஜயிக்க முடிந்தால் அந்த முயற்சியில் இறங்கி யிருக்கவேண்டும்; முடியா விட்டால் நேபிள்ஸில் பாதி பங்குக்கு ஆசைப்பட்டிருக்கக்கூடாது. லொம்பார்டியைப் பங்கிட்டுக் கொண்டது மன்னிக்கத் தக்கதே. ஏனெனில் அதன் மூலமாகத்தான் பிரஞ்சு மன்னன் முதலில் இத் தாலியில் கால்வைக்க முடிந்தது. அவசியம் என்ற சாக்குக்கூட இல்லாமல் இரண்டாம் முறை பாகம் செய்து கொண்டதுதான் பெருந்தவறு.

இவ்வாறு லூயி அரசன் ஐந்து பிழைகள் செய்தான். சிறிய சக்திகளை ஒடுக்கினான்; இத்தாலியில் பாப்பரச ருடைய பலத்தைப் பெருக்கினான்; வலிமை மிகுந்த

ஒரு அன்னியனை உள்ளே விட்டான்; தான் அந்நாட்டில் சென்று வசிக்காமலிருந்து விட்டான். குடியேற்ற முறையையும் கைக்கொள்ளவில்லை. இருப்பினுங் கூட வெனிஷியர்களிடமிருந்து ராஜ்யத்தைப் பிடுங்கியதான ஆருவது பிழையொன்றையும் செய்யாமலிருந்தால் இப் பிழைகள் அவனைப் பாதிக்காமலிருக்கலாம். சர்ச்சை வலுவாக்காமலும் ஸ்பானியரை உள்ளே விடாமலு மிருந்திருந்தால் கடைசியிற் செய்த காரியம் சரிதான். அப்போதும் வெனிஷியர்களை மட்டந்தட்டுவது அவசிய மும் நியாயமும் ஆகும். ஆனால் அப்படியெல்லாம் செய்து விட்ட பிறகு வெனிஷியர்களுக்கு நஷ்டம் விளைத்திருக் கவே கூடாது. வெனிஷியர்கள் பலசாலிகளாயிருந் திருந்தால் மற்றவர்கள் லொம்பார்டியை நெருங்கியிருக்க மாட்டார்கள். ஏனென்ருல் வெனிஷியர்கள் லொம்பார் டியைத் தங்களுக்கில்லாமல் வேறொருவர் கொண்டுபோக விடமாட்டார்கள். அதை பிரான்ஸிடமிருந்து பிடுங்கி வெனிஷியர்களுக்குக் கொடுப்பதில் வேறு ஒருவர்க்கும் அக்கரையிருக்காது. பிரான்ஸ், வெனிஸ், இரண்டையும் எதிர்க்க அன்னியர் தைரியம் கொண்டிருக்க முடியாது.

பிரான்ஸ் அரசன் ரோமாஞவை அலெக்ஸாண்ட ருக்கும், நேபிள்ஸை ஸ்பெயின் அரசனுக்கும் விட்டுக் கொடுத்தது யுத்தம் நிகழ்வதைத் தடுப்பதற்காக என்று எவரேனும் வாதம் புரிவரேல் போரை நிறுத்துவதற் காக ஒழுங்கீனங்களையும் கலவரங்களையும் அனுமதிக்கக் கூடாது என்றே நான் பதில் சொல்வேன். இவ்வாறு செய்து கொண்டே போவதால் சண்டை நிற்காது. ஆனால் கொஞ்ச நாள் ஒத்திப்போகும். அப்படி ஒத்திப் போவது அரசனுக்குப் பிரதி கூலமானது. போப் தன் னுடைய விவாகத்தை ரத்து செய்ததற்கும் ரோஹனுக்கு (Rohan)க் கார்டினல் (Cardinal) பதவி கொடுத்ததற்கும் பிரதியாக அலெக்ஸாண்டருக்கு அவன் வாக்களித் திருந்தபடி லூயி ரோமாஞவைப் பிடிக்கும் முயற்சிக்குத் துணை புரிந்தான் என்ருல், அதற்குப் பதில், அரசர்களு டைய உண்மையுடைமையைப் பற்றி பிறகு நான்

சொல்லப் போவதில் இருக்கிறது. இவ்வாறு ராஜ்யங்களை ஜயித்து அவற்றில் அதிகாரத்தை நிலைக்கச் செய்வதற்கு மற்றவர்கள் எந்த நியமங்களைக் கடைப்பிடிப்பார்களோ, அவற்றின்படி நடக்காததால் லூயி லொம்பார்டியை இழந்தான். போப் அலெக்ஸாண்டருடைய குமாரனை வாலெண்டின் (Valentine) என்று சாதாரணமாக அழைக்கப்படும் ஸீஸர் போர்ஜியர் (Cesare Borgia) ரோமாஞாவைப் பிடித்த சமயத்தில் நான் இதைக்குறித்து நான்டிஸ் (Nantes)ஸில் கார்டினல் ரோஹனுடன் பேசிக் கொண்டிருந்தேன். கார்டினல் ரோஹன் என்னிடம் இத்தாலியருக்குச் சண்டையின்னதென்றே தெரியாது என்றபோது நான் பிரஞ்சுக்காரருக்கு ராஜதந்திரமே தெரியாது என்று பதிலளித்தேன். அது தெரிந்தவர்களாயிருந்தால் சர்ச்சின் அதிகாரம் இவ்வளவு தூரம் ஓங்குவதற்கு விட்டிருக்கமாட்டார்களல்லவா? அனுபவத்தின்படி பார்த்தால் இத்தாலியில் சர்ச்சும் ஸ்பெயினும் பலம் பெற்றதற்குப் பிரான்ஸே காரணபூதமாயிருந்தது. சர்ச்சும் ஸ்பெயினும் மிதமிஞ்சிய அதிகாரத்தை அடைந்ததால்தான் பிரான்ஸ் வீழ்ச்சியடைந்தது. இதிலிருந்து ஒருபோதும் தவறாத ஒரு பொதுவான நீதி கிடைக்கிறது: இன்னொருவனுடைய பலத்தைப் பெருக்குகிறவன் தன் நாசத்துக்கு வழி தேடுகிறான். தந்திரத்தினாலும் முரட்டுத்தனத்தினாலும் அந்தப் பலம் பெருக்கப்படுகிறதாகையால் பலம் பெற்றவன் தனைத் தூக்கிவிட்டவனுடைய அந்த இரண்டு குணங்களையுமே சந்தேகிக்கிறான்.

## நான்காவது அத்தியாயம்

### அலெக்ஸாண்டர் ஜயித்த டாரயஸ் (Darius)ஸின் ராஜாங்கம், அலெக்ஸாண்டருடைய வாரிசுகளுக்கெதிராகக் கலகம் விளைவிக்காத காரணம்

புதிய நாடுகளை ஆள்வதிலுள்ள சிரமத்தைப் பார்த்தால் மஹா அலெக்ஸாண்டர் சில வருஷங்களுக்குள்ளாக ஆசியாவில் வெற்றிக்கொடி நாட்டி அதை ஆளத்தொடங்கியவுடனே இறந்துவிட்டதால், அப்

பேர்து ராஜ்யமுழுவதிலும் கலகம் விளைந்திருக்க வேண்டுமே, எப்படிக் கலவரமின்றி யிருந்தது என்று ஆச்சர்யமாயிருக்கும். அவனுடைய வார்சுகள் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக்கொண்டனர். பேராசை மேலிட்டால் அவர்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டதைத் தவிர வேறு கலகம் ஒன்றும் நேரவில்லை.

சரித்திர மூலமாக நாம் அறிந்துள்ளபடி ராஜ்யங்கள் இரண்டுவிதமாக நிர்வகிக்கப்படுகின்றன. ஒன்று, அரசனால் அல்லது அவனுடைய தயவும் அனுமதியும் பெற்ற அமைச்சர்களால் ஆளப்படுகிறது. இன்னொரு விதம் அரசனும் பிரபுக்களும் (Barons) ஆளுவது. பிரபுக்கள் தங்கள் பதவிகளை அரசனுடைய தயவால் பெற்றவர்களல்ல. புராதன பரம்பரையைச் சேர்ந்தவர்களாயிருப்பதால் அடைந்தவர்கள். பிரபுக்களுக்குச் சொந்த ராஜ்யங்களும், அவர்களை எஜமானர்களென்று கருதும் குடிகளும் உண்டு. அக்குடிகள் பிரபுக்களை இயற்கையாகவே நேசிக்கிறார்கள். அரசனாலும் அவனுடைய அமைச்சர்களாலும் ஆளப்படும் ராஜ்யத்திலோ வெனில், அரசன் ஒருவனுக்கே அதிகாரம் அதிகம். ஏனெனில் அந்த ராஜ்யத்தில் அவனைவிட மேலானவர்கள் கிடையாது. மற்றவர்களுக்கு ராஜாவுடைய அதிகாரிகள் என்பதைத் தவிர வேறு விசேஷமான மதிப்பு ஒன்றும் இருக்காது.

இவ்விருவகை அரசாங்கங்களுக்கும் நம் காலத்தில் திருஷ்டாந்தங்கள் துருக்க ராஜாங்கமும் பிரான்ஸும இருக்கின்றன. துருக்க முடியரசு ஒரே அரசனால் ஆளப படுகிறது. மற்றவர்களெல்லாம் ராஜ ஸேவகர்களே. அரசன் தன் ராஜ்யத்தைப் பல பிரிவுகளாக (Sangiacates) பிரித்து அவற்றை நிர்வாகம் செய்வதற்கு அதிகாரிகளை நியமித்தனுப்புகிறான். வேண்டாத போது அவர்களை மாற்றுகிறான், அல்லது திருப்பி அழைத்துக்கொள்கிறான். பிரான்ஸ் அரசன் பல பழமையான வம்சங்களிலுதித்த பிரபுக்களால் சூழப்பட்டிருக்கிறான். அந்தப் பிரபுக்கள் ஜனங்களுடைய நன் மதிப

மையைப் பெற்றவர்கள். அவர்களுக்குத் தனிப்பட்ட உரிமைகள் உண்டு. அவற்றை அரசனால் பறிக்க முடியாது; பறிக்க முயன்றால் அரசனுக்கே ஆபத்து. இவ்விரண்டு ராஜ்யங்களையும் நோக்குங்கால், துருக்கரின் ராஜ்யத்தை ஜயிப்பது கஷ்டம். ஆனால் ஜயித்த பின் அதிகாரத்தை ஸ்தாபிப்பது மிகவும் சுலபம் என்பது புலப் படுகிறது. பலவிதங்களில் பிரான்ஸைக் கைப்பற்றுவது எளிதாயிருக்கும். ஆனால் அதில் உரிமையை நிலைக்கச்செய்வது மஹா கஷ்டம்.

துருக்கருடைய ராஜ்யத்தைப் பிடிப்பதிலுள்ள சிரமம் என்னவென்றால், அதை ஆக்கிரமிக்க விரும்புபவர்கள் உள்நாட்டு மக்களால் அழைக்கப்பட மாட்டார்கள். அரசனோடிருப்பவர்களெல்லோரும் அவனுடைய அடிமைகளாயும் அவன் தயவை நாடி நிற்பவர்களாயுமிருத்தலால் அவர்களைக் கலைப்பதும் எளிதல்ல, அப்படி அவர்களைக் கலைத்தாலும், பிரயோஜனப் படாது. அவர்களுக்கு ஜனங்களிடம் செல்வாக்குக் கிடையாது. ஆகவே அந்நாட்டைத் தாக்குபவர்கள் தம் சொந்த சக்தியையே நம்பித்தான் துருக்கருடைய ஐக்கிய சைனியத்தை எதிர்க்க வேண்டுமே தவிர, உள்நாட்டில் கலகம் உண்டாக்கும் ஆசையை விட்டுவிட வேண்டும். ஆனால் எப்படியாவது துருக்கரை ஜயித்து, மறுபடியும் அவர்களுடைய சேனைகளைத் தலைதூக்காமற் செய்துவிட்டால் பயமேயில்லை. ராஜ வம்சத்தார்களை மட்டும் ஒழித்து விட்டால் அஞ்சுவதற்கு வேறு யாருமேயில்லை. ஏனெனில் வேறொருவருக்கும் பொது மக்களிடையே மதிப்புக் கிடையாது.

பிரான்ஸைப் போன்ற தேசங்களின் சமாசாரமோ வேறு. பிரபுக்களிற் சிலரை வசப்படுத்திக் கொண்டு அம்மாதிரி தேசங்களில் நுழைந்துவிடலாம். சில பிரபுக்கள் எப்போதும் திருப்தியற்றவர்களாயும், புது மாறுதலை விரும்புகிறவர்களாயும் இருப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் ஏற்கெனவே குறித்துள்ள காரணங்களுக்காக வெளியரசனுக்கு வழியைத் திறந்துவிட்டு, அவ-

னுடைய வெற்றிக்கு உதவி செய்வார்கள். பிறகு அவ்வரசன் அதிகாரம் செலுத்த வாரம்பிக்கும்போதுதான் கஷ்டமெல்லாம் வருகிறது. அவனுக்கு உதவிசெய்தவர்கள், அவனால் அடக்கப் பட்டவர்கள் எல்லோரும் எதிர்த்துக் கொள்ளுவார்கள். அந்நாட்டின் ராஜ குடும்பத்தினரை மாத்திரம் அழிப்பது போதாது, புதிய ராஜீய கொந்தளிப்பு (Revolution) களை ஏற்று நடத்தப் பிரபுக்கள் இருப்பார்கள். அப் பிரபுக்களைத் திருப்தி செய்வதும் முடியாது, தொலைத்துவிடவும் இயலாது. அவர்கள் சமயம் பார்த்துக் கொண்டே இருந்து ராஜ்யத்தை அபகரித்துக் கொள்வார்கள்.

பிரயஸின் ராஜ்யம் துருக்கரின் ராஜ்யத்தைப்போன்றது. அலெக்ஸாண்டர் அவ்விராஜ்யத்தை அரிதிற் கைப்பற்றினான். டேரியஸ் இறந்தபின், அது அவனுக்கு பத்திர முள்ளதாய்விட்டது. அலெக்ஸாண்டருக்குப் பின்னால் வந்தவர்கள் ஒற்றுமையுடனிருந்திருந்தால் அமைதியுடன் நாட்டை ஆண்டு வந்திருக்கலாம். ஏனெனில் அவர்கள் தாங்களே ஆரம் போட்டுக் கிளப்பியதை தவிர வேறு கலவரமொன்றும் அங்கே உண்டாகவில்லை பிரான்ஸ் போன்ற நாடுகளை இவ்வளவு சுலபமாக ஆண்டு வரமுடியாது. ஆகையால்தான் ஸ்பெயின், பிரான்ஸ், கிரீஸ், முதலிய தேசங்களில் ரோமர்களுக்கெதிராக அடிக்கடி கலகம் மூண்டவண்ண மிருந்தது. அத் தேசங்களிலுள்ள கணக்கற்ற சிறு ராஜ்யங்களில் பிரபுக்கள் அதிகாரம் வகித்து வந்திருந்தார்கள். அவர்களுடைய ஞாபகம் ஜனங்கள் மனதிலிருந்த மட்டும் ரோமர்களுக்கு தங்கள் வெற்றி நிலையானதாயிருக்குமென்பதே சந்தேகமாயிருந்தது. ரோம சாம்ராஜ்யத்தின் அபாரமான சக்தியாலும், அவர்களுடைய நீடித்த அரசாட்சியாலும் ஜனங்களுக்குப் பழைய எஜமானர்களுடைய ஸ்மரணையே அற்றுப்போன பிறகு ரோமர்கள் எதிர்ப்பாரற்றவர்களாய் விளங்கினார்கள். ரோமர்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டபோது அந்தந்தப் பிரதேசங்களிலுள்ள ஜனங்களின் ஆதரவை

நம்பியிருக்க முடிந்தது. பழைய ராஜ வம்சங்களெல்லாம் அறவே அற்றுப்போனபிறகு ரோமர்களே அரசர்களென்று போற்றப் பட்டார்கள். அலெக்ஸாண்டர் ஆசியாவில் சௌகரியமாக அதிகாரம் வகித்ததில் ஆச்சர்யமொன்றுமில்லை. அவ்வாறே பைரஸூம் (Pyrrhus) இன்னும் பலரும் தாங்கள் ஜயித்த பிரதேசங்களை ஆளக் கஷ்டப்பட்டதிலும் அதிசயமில்லை. இதற்கு ஜயித்தவர்களுடைய சாமர்த்தியமோ, சாமர்த்தியக் குறைவோ காரணமாயில்லை. நிலைமைகளின் வித்தியாசமே காரணம்.

## ஐந்தாவது அத்தியாயம்

### சொந்தக் கட்டு திட்டங்களின்கீழ் வாழ்ந்து வந்திருக்கும் நகரங்களையும் சமஸ்தானங்களையும் ஆளுமுறை

ஜயிக்கப்பட்ட ராஜ்யங்கள் தங்கள் சொந்தக் கட்டு திட்டங்களுக்குட்பட்டு வாழ்ந்து வந்தவையாக விருப்பின் அவற்றில் அதிகாரத்தை ஸ்தாபிப்பதற்கு மூன்று வழிகள் உள. முதல் வழி கொள்ளையடித்தல், இரண்டாவது வழி அரசன் அந்நாட்டுக்கே வாசஸ்தலமாகக் கொள்வது, மூன்றாவது மக்களிடம் கப்பம் பெற்றுக் கொண்டு, தனக்குச் சாதகமானவர்களைக் கொண்டு ஒரு சர்க்காரை அமைத்துவிட்டு, குடிகளை சொந்த சட்டங்களையே அனுசரிக்கும்படி விட்டுவிடுவது. இந்த சர்க்கார் ராஜாவால் அமைக்கப்பட்டதாகையால் அவனுடைய பாதுகாப்பும் சிநேகமும் இல்லாமல் அது நிலைக்க முடியாது. ராஜாவுடைய ஆதரவைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அது என்னவேண்டுமானாலும் செய்யச் சித்தமாக இருக்கும். சுயேச்சையாயிருந்து பழகிய நாடுகளை ஸ்திரப்படுத்திக் கொள்ளவேண்டுமானால் அந்நாட்டு மக்களையே நிர்வாகத்தை ஏற்று நடத்தச் செய்வது நல்லது.

ரோமர்களுடையவும் ஸ்பார்தர் (Spartans)களுடையவும் திருஷ்டாந்தம் இருக்கிறது. ஸ்பார்த்தர்கள் ஏதென் (Athens)ஸிலும் தீப் (Thebes)ஸிலும் நகர மாந்-

தர்களைக் கொண்டே சர்க்கார் அமைத்தும் அந்நகரங்களை இழந்தனர். ரோமர்கள் கபுவா (Capua) கார்தேஜ் (Carthage) நூமந்தியா (Numantia) முதலிய விடங்களில் அக்கிரமங்களை இழைத்தும் அவற்றை இழக்கவில்லை. அவர்கள் கிரீஸைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, அந்நாட்டுக் குடிகளைச் சுதந்திரத்துடன் சொந்தச் சட்டங்களைப் பின்பற்றும்படி விட்டனர். அவர்களுக்கும் பலன் கிடைக்கவில்லை. ஆகையால் அவர்களுக்கு அம் மாகாணத்தில் பல பட்டணங்களைப் பாழாக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அவற்றில் அதிகாரத்தை நிலை நாட்டுவதற்குப் பாழ் படுத்துவதைப்போல் நிச்சயமான வழி எதுவும் இல்லை. ஒரு சுதந்திர நாட்டை ஜயித்தவன் அதை அழிக்காவிட்டால் அது அவனை ஒழித்துவிடும். ஏனெனில் ஸ்வாதீனமான நாடுகளில் ராஜ்யக் குழப்பங்கள் உண்டாவதற்கு சுதந்திரம், பண்டை வழக்க முறை, என்பவை தூண்டுதலாயிருக்கும். எவ்வளவு காலம் சென்றாலும், குடிகளை என்னதான் நல்லதனப்படுத்தி வைத்துக் கொண்டாலும் அவர்களுக்கு அந்த ஞாபகம் போகாது. அவர்களைப் பிரித்துக் கலைந்து போகும்படி செய்யாவிட்டால், எவ்வளவு நன்மைகளைப் பெற்றாலும் அவர்கள் சுதந்திரத்தின் பெயரையும் பழக்க முறைகளையும் மறக்கவே மாட்டார்கள். சமயம் நேர்ந்த போதெல்லாம் அவற்றின் பெயரால் கிளர்ச்சி செய்வார்கள். பிளாரண்டின்களின் கீழ் வெகுகாலம் அடிமை நிலையிலிருந்த பைஸா நகரம் அப்படித்தான் செய்தது. ஆனால் அரசன் ஆட்சிக்கடங்கிப் பழகிய நாடுகளில், ராஜவம்சத்தைத் தொலைத்துவிட்டால், பிறர் அதிகாரத்திலிருந்தே பழகியதாலும், பழைய ராஜா போய்விட்டதாலும் குடிகள் தங்களுக்குள் ஒரு ராஜாவைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒற்றுமையில்லாமல், சுதந்திரமாயிருக்கவும் வகை தெரியாமல் திண்டாடுவார்கள். அவர்கள் ஆயுத பலங்கொண்டு எதிர்ப்பதற்கும் நாளாகும். அரசன் அவர்களை அதிக செளகரியத்துடன் வசப்படுத்திச் சர்வதானமாக நாட்டில் அமர்ந்து கொள்ளலாம். குடியரசு நாடுகளிலோ துவேஷமும் பழிவாங்கும ஆவலும்

அதிகம். அவர்கள் தங்களுடைய பழைய சுதந்திர வாழ்க்கையை லேசில் மறக்கமாட்டார்கள், மறக்கவும் முடியாது. அவர்களுடைய நாட்டைப் பாழ் படுத்த வேண்டும், அல்லது ராஜா அதை வாசஸ்தலமாகக் கொள்ளவேண்டும். அதுதான் வெற்றிக்கு நிச்சயமான சாதனம்.

## ஆருவது அத்தியாயம்

### சேனுபலத்தினுலும் சொந்தத் திறமையினுலும் ஆட்கொள்ளப்பட்ட புதிய சமஸ்தானங்கள்

புதிய சமஸ்தானங்களைப் பற்றிக் கூறும்போது நான் மிகப்பெரிய உதாரணங்களை எடுத்துக் காண்பிப் பதைப் பார்த்து ஆச்சர்யப்படவேண்டாம். பெரியோர் காட்டிய வழியைப் பின்பற்றவே மக்கள் ஆர்வம் கொள்கி ருர்கள். அவர்களுடைய செயலை அனுசரிக்கத் தொடங்கு கிருர்கள். இன்னெருவரை அப்படியே "காபி" அடிப் பது சாமான்யமல்ல. அந்த மேன்மை கிடைப்பது கஷ்டம். அறிவாளியாயிருப்பவன் பெரியோர் அடிச்சுவட்டில் நடந்து, மிகச் சிறந்தவர்களுடைய அருஞ் செய்கைகளைப் போல் தானும் செய்ய ஆசைப்படவேண்டும். அப்படி விரும்பினுல்தான் அவர்களவ்வளவு சிறப்பை அடைய முடியாவிட்டாலும், படிக்குப் பாதியாவது தேறும்.

புத்திசாலியான வில்லாளி தூரத்திலுள்ள ஒரு லக்ஷியத்தை அடிக்க விரும்பினுல், அதைவிடத் தூரத் தில் குறிவைத்து அம்பை எய்கிருன், அவ்வளவு தூரம் தன் பாணம் போகுமென்ற துணிவால் அல்ல. அவ் வளவு உயரத்தில் நாட்டம் வைத்தால் தன் லக்ஷியத்தில் கட்டாயம் படும் என்பதால்தான். அவ்வாறே மக்களும் செய்யவேண்டும்.

புதிய ராஜ்யங்களில் ஒரு புதிய ராஜா ஆள நேர்ந் தால் அரசனுடைய திறமையின் அளவுக்குத் தக்கபடி நிர்வாகம் சுலபமாகவே இருக்கும். ஒரு சாதாரணமான

மனிதன் அரசனுவதற்கு அபூர்வமான திறமை, அல்லது அதிர்ஷ்டம் தேவையாயிருக்கிறது. இவ்விரண்டும் அநேகவிதமான சிரமங்களை குறைக்க வல்லவை. அதிர்ஷ்டத்தையே அதிகம் நம்பியிரார்தவர்கள் தங்களை நன்ருகப் பாதுகாத்துக் கொள்கிருர்கள். புதிய அரசனுக்குத் தனக்கென்று வேறு இடமில்லாததால் அந்த ராஜ்யத்திலேயே வசிக்கத் தொடங்குவது பெரிய நன்மை. அதிர்ஷடம் காரணமாகவன்றி சாமர்த்தியத்தினுல் ராஜ பதவியடைந்தவர்களில் மோஸஸ் (Moses) ஸைரஸ் (Cyrus) ரோமுலஸ் (Romulus) தீஸியஸ் (Thesus) போன்றவர்கள் சிறந்தவர்கள். மோஸஸ் கடவுள் ஆக்கினையையே நிறைவேற்றியவர். ஆகையால் அவரைக் குறித்து ஒன்றும் சொல்வதற்கில்லை. எனினும் கடவுளுடன் நேருக்கு நேர் பேசும் மகிமையை யுடையவராயிருந்ததொன்றின் பொருட்டே அவர் போற்றுவதற்குரியவராகின்றார். ஸைரஸ் முதலியவர்களும் மெச்சத் தகுந்தவர்கள்தாம். மோஸஸின் செயல்களைப் போலவே அவர்களுடைய காரியங்களும் அரியவை. அவர்களுடைய வரலாறுகளையும் செய்கைகளையும் பார்த்தால், அவர்கள் அதிர்ஷ்ட தேவதைக்குச் சிறிதும் கடன்பட்டிருக்கவில்லை. அவர்கள் நினைத்ததை முடிப்பதற்குச் சந்தர்ப்பம்தான் துணையாயிருந்தது என்று தெரிகிறது. சந்தர்ப்பம் வாய்த்திராவிட்டால் அவர்களுடைய சக்தி வீணுயிருக்கும். சக்தியில்லாமலிருந்தால் சந்தர்ப்பம் வந்து பிரயோஜனமில்லை. சக்தி, சந்தர்ப்பம் இரண்டும் ஒன்று சேர்ந்தால்தான் வெற்றி.

எகிப்து (Egypt) நாட்டில் அடிமைகளாயிருந்து எகிப்தியரால் துன்புறுத்தப்பட்ட இஸ்ரேலின் மக்களைக் கண்டது மோஸஸுக்கு ஒரு அரிய சந்தர்ப்பம். இஸ்ரேலின் ஜனங்கள் தங்கள் அடிமைத் தளையை அறுத்தெறியும்பொருட்டு மோஸஸைப் பின்பற்ற மனங்கொண்டனர். ரோமாபுரியின் வேந்தனும் ஒரு புதிய ஜாதியின் சிருஷ்டிக்குக் காரணஸ்தனுகவும் ரோமுலஸ் ஆவதற்கு அவன் ஆல்பா (Alba)வில் இருக்க முடியா

மல் பேர்ப் பிறந்த வுடனே வெளிக்கடத்தப்பட வேண்டியது அவசியமாக இருந்தது. பாரசீகர்கள், மேதியர் (Medes)களுடைய ஏகாதிபத்தியத்தில் அதிருப்தியடைந் திருந்ததும், மேதியர்கள் நெடுங்காலமாக அமைதியை அனுபவித்துவந்ததால் பலஹீனமும் "பெண் தன்மை" யும அடைந்திருந்ததும் ஸைரஸுக்கு சாதகமாயிருந்தது.

ஆதனியர்கள் (Athenians) ஐக்கியமின்றிச் சிதறியிருந்திராவிடில், தீஸியஸ்தின் திறமையைக் காண்பித்திருக்க முடியாது. இச்சம்பவங்கள்தாம் இந்தப் பெரியோர்களுக்குச் சந்தர்ப்பத்தை அளித்தன. அவர்களுடைய அரிய தன்மைகளால் அச்சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் நாட்டின் கௌரவத்தைச் சிறப்பித்து அதன் அதிர்ஷ்டத்தையும் விருத்தி செய்தனர்.

இம்மாதிரி தங்கள் திறமையினுல் அரசர்களானவர்கள் ராஜ்யங்களை ஜயிப்பதற்குச் சிரமப்பட்டாலும் பிறகு அவற்றைச் சுலபமாகக் காப்பாற்றிக்கொள்வார்கள். ராஜ்யத்தை ஜயிப்பதிலுள்ள கஷ்டமென்னவென்ருல்; தங்கள் பாதுகாப்புக்காகப் புதுச் சட்டதிட்டங்கள் ஏற்படுத்த வேண்டியிருப்பதொன்று. புதுச் சட்டங்களை உண்டாக்கி,அவற்றை அமுலுக்குக் கொண்டுவருவதைப்போல் ஆபத்தான காரியம் வேறில்லை. சீர்திருத்தம் செய்கிறவன் பழைய சட்டங்களால் லாபமடைந்தவர்களுடைய விரோதியாய் விடுகிருன்; புதிய சட்டங்களால் நன்மை பெறக் கூடியவர்களும அவனை அரைமனதுடன்தான் ஆதரிக்கிருர்கள். இதற்குக் காரணம பழைய சட்டத்தையே வேண்டுகிறவர்களிடம் பயமும், மனிதர்களுடைய ஸ்வபாவமான அவநம்பிக்கையுந்தான். மனித வியற்கை எந்தப் புதிய விஷயங்களிலும் அனுபவத்தில் பலனை அறிந்தாலொழிய நம்பிக்கை கொள்வதில்லை. ஆகவே சீர்திருத்த வாதியை அவனுடைய விரோதிகள் ஆவேசத்துடன் எதிர்க்க, மற்றவர்களும் வேண்டா வெறுப்பாகவே ஆதரிக்கிருர்கள்.

இவ்விருதிறத்தாரின் நடுவில் அவன் பாடு பெரிய ஆபத்தா யிருக்கிறது. இவ்விஷயத்தை மேலும் ஆராய்வதற்குச் சீர்திருத்தக்காரன் சுயேச்சையானவனு, அல்லது தன் ஆணையை நிறைவேற்ற இன்னெருவருடைய தயவை வேண்டுகிறவனு என்று பார்க்க வேண்டும். அதாவது ஜனங்களை நல்லதனப்படுத்தி வேண்டிய காரியத்தை நடத்தவேண்டுமா அல்லது கட்டாயப்படுத்தி உத்தரவளிக்கும் சக்தி உண்டா என்று அறியவேண்டும். முதல் கூறியபடியானால் வெற்றி கிடைக்காது. ஒரு காரியமும் நடக்காது. ஆனால் தங்கள் சக்தியைக் கொண்டு நிர்ப்பந்தப் படுத்தக்கூடியவர்கள் தோற்பதரிது. ஆயுத பலமுடைய தீர்க்கதரிசிகள் (Prophets) ஜயமும் ஆயுதமில்லாத மதாசாரியர்கள் தோல்வியும் அடைவது இதனால்தான். ஜனங்களுடைய குணங்கள் மாறுபட்டவை. அவர்களுக்கு உபதேசம் செய்வதெளிது. நம்ப வைப்பது சுலபம். ஆனால் அவர்களை நம்பிக்கொண்டே யிருக்கச் செய்வது சிரமம். ஆகையால் அவர்களுடைய விசுவாஸம் குறைகிற சமயத்தில், அவர்களை நம்பும்படி நிர்ப்பந்திப்பதற்காகக் கட்டாயத்தை உபயோகிக்க வேண்டும். மோஸஸ், ஸைரஸ், தீஸியஸ், ரோமுலஸ், முதலியவர்கள் ஆயுத பலமில்லாதவர்களா யிருந்தால் அவர்களுடைய சட்ட திட்டங்களை ஜனங்கள் அவ்வளவு காலம் அனுசரித்திருக்க மாட்டார்கள். நம் காலத்தில் அந்த சக்தி யில்லாததால் பிரா ஜிரோலாமோ ஸவோனரோலா (Fra Girolamo Savonarola) முற்றிலும் அபஜயமடைந்தான். அவனுடைய புதிய தத்துவங்களில் ஜனங்கள் நம்பிக்கை யிழக்க ஆரம்பித்தபோது, நம்பிக்கையுள்ளவர்களைத் தன் வசம் இருத்திக்கொள்ளவும், மற்றவர்களைப் பலவந்தமாக நம்பச் செய்யவும் கூடிய சாதனம் அவனிடம் இருக்கவில்லை. ஆகவே புதிய சட்டங்களை இயற்றுவோருக்குக் காரிய சித்தி பெறுவதில் மிகுந்த கஷ்டம் இருக்கிறது. வழியெல்லாம் விபத்துதான். அவற்றையெல்லாம் அரசன் தன் சாமர்த்தியத்தினால்தான் கடக்கவேண்டும். ஆனால் கஷ்டங்களை அகற்றிப் பெருமைக்காரர்களை

அடக்கி மக்களுடைய மரியாதையைப் பெறத் தொடங்கிய பின்னர் ராஜா பலசாலியாய் பயமற்று, சந்தோஷமாயும் கௌரவமாயும் இருக்கிறார்.

இந்த உத்கிருஷ்டமான உதாரணங்களுடன் ஒரு சாதாரண விஷயத்தையும் கூறுகிறேன். ஸிராக்ஸ் (Syracuse) நகரத்து ஹிரோ (Hiero) கேவலம் சந்தர்ப்பத்தின் துணையினால் சாமான்ய ஸ்திதியிலிருந்து ஸிராக்ஸ் ராஜ்யத்துக்கு மன்னனானான். அதிர்ஷ்டம் வேறெந்த உதவியும் செய்யவில்லை. துன்புறுத்தப்பட்டிருந்த ஸிராகஸர்கள் அவனைத் தங்கள் தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர். அதினின்றும் அவன் தன் கெட்டிக்காரத்தனத்தால் ராஜாவானான். சாதாரண மனிதனாயிருக்கும் போதே அவன் சாமர்த்தியம் பிரமாதமாக விருந்தபடியால் அவனைப்பற்றி எழுதியவர்கள் "அவனுக்கு ஆளுவதற்கு ஒரு ராஜ்யந்தானில்லையே தவிர வேறு ஒரு யோக்கியதைக்கும் குறைவில்லை" என்று எழுதினார்கள். அவன் பழைய சைன்யத்தைக் கலைத்துப் புதிய ராணுவத்தை அமைத்துக்கொண்டான். பழைய நண்பர்களை விலக்கிப் புதிய சிநேகங்களை ஏற்படுத்திக் கொண்டான். சிநேகமும் ராணுவமும் தானே பெருக்கியவையாயிருந்தன. அந்த அஸ்திவாரத்தின்மீது பத்திரமாக ராஜ்யாதிகாரமாகிய கோட்டையைக் கட்டலானான். ராஜாவாவதற்குக் கஷ்டப்பட்டானே தவிரத் தன் பதவியை நிலைநிறுத்திகொள்ள சிரமப்படவில்லை.

## ஏழாவது அத்தியாயம்

### அன்னியருடைய பலத்தினாலாவது அதிர்ஷ்டத்தினாலாவது கிடைக்கப்பெறும் புதிய சமஸ்தானங்கள்

அதிர்ஷ்டத்தினால் அரசனாவது பெரிதல்ல. ஆனால் அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொள்வதுதான் கஷ்டம். அவன் ஒரேயடியாய் உச்சிக்குத் தாவி விடுவதால் வழியில் தொந்தரவில்லை. மேலே சென்றவுடன் தான் தொல்லையெல்லாம் ஆரம்பிக்கிறது. பணத்தைக்

கொடுத்து ராஜ்யத்தைப் பெற்றவர்களும், காரியார்த்தமாக அரசர்களாக்கப் பட்டவர்களும் இவ்விதமானவர்களே. கிரீஸ் தேசத்திலும் ஐயோனியா (Ionia) ஹெல்லஸ்பான்ட் (Hellespont) நகரங்களிலும் டரயஸ் தன் ஜாக்கிரதைக்காகவும், கியர்திக்காகவும் பலரை ராஜாக்களாக்கினான். பல சாமான்ய மனிதர்கள் பட்டாளங்களுக்கு லஞ்சங் கொடுத்துச் சக்கிரவர்த்திகளானார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்களைக் கைதூக்கி விட்டவர்களுடைய நல்லுணர்ச்சியையும் அதிர்ஷ்டத்தையுமே நம்பிக்கொண்டிருக்க வேண்டும். அவை நிலையாகவிரா. அவர்களுக்குத் தங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக்கொள்ளத் தெரியாது, முடியவும் முடியாது. அபூர்வமான குணங்கள் பொருந்தி யிருந்தாலன்றிச் சாமான்ய ஸ்திதியில் இருந்தவனுக்கு அதிகாரம் செய்யத் தெரிவது கஷ்டம். அவனுக்கு ஹிதமும் நம்பகமும் உடைய சைனியமும் கிடையாது. அதுவுமன்றி அவசரத்தில் நிறுவப்பட்ட ராஜ்யங்களும், மற்ற அவசர காரியங்களைப் போலவே வேரூன்றியவையாய்க் கப்பும் கிளையுமாக விருக்கமாட்டா. அதிர்ஷ்ட தேவதை தயவுடன் அளித்ததை அரசன் வெகு திறமையாய்ப் பாதுகாத்துக் கொண்டாலன்றி முதற் புயலே அவனை வீழ்த்திவிடும். முதலில் தன் பதவியைப் பாதுகாத்துக்கொண்டு, மற்றவர்கள் அரச பதவி கிடைக்குமுன் போட்டும் அஸ்திவாரங்களைப் பிறகாவது போடவேண்டும்.

ராஜாவாவதற்கான இந்த இரண்டு சாதனங்கள், அதாவது சாமர்த்தியம், அதிர்ஷ்டம், இரண்டுக்கும் பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸாவுடையவும் ஸீஸர் போர்ஜியாவுடையவும் இரண்டு திருஷ்டாந்தங்களைக் கூறுகிறேன். பிரான்ஸிஸ்கோ சரியான சாதனங்களாலும், அரிய திறமையினாலும் சாமான்யனா யிருந்தவன் மிலன் நகரத்து டியூக் ஆனான். ஆயிரம் இன்னல்களுக்குள்ளாகிப் பற்றதைக் கஷ்டமே யின்றி ஸ்தாபித்துக் கொண்டான். இதற்கு மாறாக டியூக் வாலென்டின் என்றழைக்கப்படும் ஸீஸர் போர்ஜியா தன் தந்தையின்

செல்வாக்கால் ஒரு ராஜ்யத்தைப் பெற்றான். அந்தச் செல்வாக்குக் குறைந்தவுடன் பதவியைத் தோற்றான். தன் பதவியைக் காத்துக்கொள்வதற்குப் புத்திமான்கள் எடுத்துக் கொள்ளவேண்டிய நடவடிக்கைகளை யெல்லாம் அவன் எடுத்துக்கொண்டும் பலன் பெறவில்லை. பிறருடைய பலத்தாலும் தயவாலும் பெற்ற நாட்டில் அதிகாரத்தை ஸ்திரமாக்குவதற்கு அறிவாளிகள் என்ன செய்யக்கூடுமோ அவையனைத்தும் செய்தான். நான் முன் சொன்னபடி முதலில் அஸ்திவாரம் போடாதவன் பின்னிட்டாவது தன் சாமர்த்தியத்தைக் கொண்டு அவ்வாறு செய்யக்கூடும். அதனால் சிற்பிக்குத் தொந்தரவும் கட்டடத்துக்குச் சேதமும் வந்தாலும் அக்கறையில்லை. டியூக்கின் நடவடிக்கைகளை யோசித்தால் வருங்காலத்தில் தன்னைப் பலப்படுத்திக்கொள்ள அவன் போட்ட அஸ்திவாரம் எவ்வளவு வலுவானது என்பது தெரிகிறது. டியூக்கின் செயல்களில் காணப்படும் நீதிகள் ஒரு புதிய அரசன் பின்பற்றுவதற்குரியவையாகும். அவனுக்கு ஜயம் கிடைக்காததற்கு அவன் பொறுப்பாளியல்ல. அதிர்ஷ்ட தேவதையின் விபரீத விளையாட்டே காரணம்.

தன் மைந்தனைப் பெரிய பதவிக்குக் கொண்டுவர ஆசைப்பட்ட ஆறாவது அலெக்ஸாண்டர் (போப்) தற்போதைய கஷ்டங்களையும எதிர்காலத்தில் நேரக்கூடிய சங்கடங்களையும் சமாளிக்க வேண்டியவனா யிருந்தான். முதலாவது, சர்ச்சுக்குச் சொந்தமில்லாத எந்த ராஜ்யத்தையும் அவனுக்குக் கொடுக்க வழியில்லாம லிருந்தது. சர்ச்சுக்குச் சொந்தமான நகரங்கள் எவற்றையும் கொடுப்பதற்கு மிலன் நகரத்து டியூக்கும், வெனிஷியர்களும் ஒப்பமாட்டார்களென்று தெரியும். ஏனெனில் ஏற்கெனவே பேன்ஸா (Fænza)வும் ரிமினி (Rimini)யும வெனிஷியர்களுடைய பாதுகாப்பிலிருந்தன. தனக்கு சேவை புரியக்கூடிய ராணுவங்கள் சர்ச்சின் பெருமைக்கஞ்சுகிறவர்களின் கைவசம இருந்தன. ஆர்ஸினி (Orsini) கொலோனா (Colonna) பிரபுக்களிடமும் இன்னும

அவர்களுடைய மனிதர்களுடைய அதிகாரத்திலும் அவை இருந்தன. ராஜ்யத்தின் ஒரு பகுதியைப் பத்திரமாகப் பிடித்துக்கொள்வதற்கு மார்க்கங்களில் குழப்பம் விளைவித்து அவற்றின் அமைதியைக் கலைக்க வேண்டியது அவசியமாயிற்று. இது எளிதாயிருந்தது. ஏனெனில் வேறு உத்தேசங்களால் தூண்டப்பட்டு வெனிஷியர்களுடைய உதவி பெற்று அலெக்ஸாண்டருடைய சம்மதத்துடன் இத்தாலிக்குள் வந்தான். அவன் மிலனில் பிரவேசித்தவுடன் அலெக்ஸாண்டர் அவனிடமிருந்து ராணுவ உதவிபெற்று ரோமாருவைக் கைப்பற்றினான். லூயி அரசனுடைய பிரபல்யமும் இதற்கு ஓரளவு உதவியது. டியூக் இவ்விதமாக ரோமாருவை அடைந்து கொலானு கட்சியினரையும் தோற்கடித்தான். இவ்வாறு பெற்ற ராஜ்யத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் அதற்கு மேற்கொண்டு பிரயத்தனங்களில் இறங்குவதற்கும இரண்டு தடைகள் இருந்தன. ஒன்று, அவனுடைய சைனியங்களுடைய நாணயத்தைப் பற்றிச் சந்தேகம். மற்றொன்று பிரான்ஸ் அரசனிடம் பயம். அதாவது தான் சகாயத்துக்காகப் பெற்ற ஆர்ஸினிப் பிரபுவின் படைகள் தன்னை மோசம் செய்து முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடுவது மட்டுமின்றி இருப்பதையும் பிடுங்கிக்கொள்வார்களோ என்றும், பிரான்ஸ் அரசனும் அம்மாதிரியே செய்து விடுவானோ என்றும் அஞ்சினான். ஆர்ஸினி விஷயத்தில் இதை நிதர்சனமாகக் கண்டான். பேன்ஸா (Faenza) வைக் கைப்பற்றிய பின்னர் பொலோனாவைத் (Bolona) தாக்கியபோது சைனியங்களுடைய பிற்போக்கைக் கவனித்தான். பிரான்ஸ் மன்னனுடைய சூழ்ச்சிகளும் அப்படியே வெளியாயின. டியூக் வாலென்டினோ அர்பினோ சிற்றரசை (Dukedom of Urbino) கைக்கொண்டபின் டஸ்கனி (Tuscany) மீது படையெடுத்தான். அப்போது பிரான்ஸ் மன்னன் டியூக்கை அம்முயற்சியைக் கைவிடும் படி செய்தான். டியூக் அதுமுதல் பிறருடைய அதிர்ஷ்டத்தையும் சேனா பலத்தையும் தனக்குத் துணையாகக் கொள்வதில்லை என்று தீர்மானித்தான். அவன் முதன

முதல் செய்த காரியம், ஆர்ஸினி, கொலோனு, இரு கட்சிகளையும் சேர்ந்த பெரிய மனிதர்களைக் கலைத்து, பெருந்தனம், பதவி, முதலியவற்றை வழங்கி அவர்களைத் தன் வசப்படுத்திக்கொண்டான். சில மாதங்களுக்குள் அவர்களுக்குத் தங்கள் கட்சிகளிலிருந்து பற்றுதல் விட்டுப்போய் டியூக்கை முழு மனதுடன் ஆதரிக்கலாயினர். அதன் பின் ஆர்ஸினி வம்சத்தின் முக்கியஸ்தர்களை நசுக்குவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். கொலோனுவின் வம்சத்தை இதற்கு முன்பே ஒடுக்கி விட்டிருந்தான். ஆர்ஸினியை ஒழிப்பதற்குச் சமயம் கிடைத்ததும் அதை நன்ருய்ப் பயன்படுத்திக் கொண்டான். இறுதியில் ஆர்ஸினி வம்சத்தார் சர்ச்சினுடையவும் டியூக்கினுடையவும் பெருமை பெருகுவது தங்களுடைய அழிவுக்கு மூலம் என்பதை உணர்ந்து பெருகினோ (Perugino)வில் மாகியோன் (Magione) என்ற விடத்தில் ஒரு சபை (Diet) கூட்டினார்கள். அதிலிருந்து அர்பினோவில் கலகமும், ரோமானுவில் குழப்பமும் நேர்ந்து டியூக்குக்குப் பெரிய ஆபத்தை உண்டாக்கின. அவற்றைப் பிரஞ்சுக்காரர்களுடைய சகாயத்தால் சமாளித்துக் கொண்டான். பழைய மதிப்பைத் திரும்பிப் பெற்றவுடன் பிரான்ஸையும் இதர சக்திகளையும் நம்பாமல் தந்திரத்தை மேற்கொண்டான். அவனுடைய நோக்கம் ஒருவருக்கும் தெரியவில்லை யாகையால் ஆர்ஸினியார் அவனுடன் சமாதானம் செய்துகொண்டனர். ஸினர் பாலோ (Signor Paulo) அவர்களுடைய பிரதிநிதியாக டியூக்கிடம் சென்றபோது சிறிது சந்தேகம் கொண்டானாயினும் டியூக், பாலோவை மிகவும் கௌரவித்துப் பட்டாடைகள், பணம், குதிரைகள், முதலிய பரிசுகளை வழங்கி அவன் சந்தேகத்தைப் போக்கடித்தான். ஆர்ஸினியார் அதில் மயங்கிப்போய் ஸினிகாலியா (Sinigaglia) என்ற விடத்துக்கு வரும்படி தூண்டப்பட்டவர்களாய் டியூக்கின் கையில் வந்து சிக்கிக் கொண்டனர்.

இவ்விதமாகத் தலைவர்களை அடக்கி அவர்களை ஆதரிப்போர்களை கைக்குள் போட்டுக்கொண்டு தன் பலத்துக்கு வெகு நல்ல அஸ்திவாரம் நாட்டிக்கொண்டான். ரோமஞு முழுவதும், அர்பினோ சிற்றரசும் அவன் வசமிருந்ததுடன் குடிமக்களின் நல்லுறவும் அவனுக்குக் கிடைத்தது. அவர்கள் அவன் ஆட்சியில் நன்மைகளைக் காணலானார்கள்.

இவ்விஷயம் பிறர் பார்த்து அனுசரிக்கத் தக்கதாயிருப்பதால், இதையும் கூறியாக வேண்டும். டியூக் ரோமாஞுவைக் கைப்பற்றியபோது, அது நல்ல ஆளுகையைப் பெற்றிருக்கவில்லை. முன்னாலிருந்த பலவீனமான ராஜாக்கள் ஜனங்களுடைய ஹிதத்தை நாடாமல் அவர்களைக் கொடுமைப் படுத்தினார்கள். அவர்களைக் கொள்ளையடித்தார்களே தவிர அரசாளவில்லை. ஜனங்களுக்குள் ஒற்றுமைக்குப் பதிலாகப் பிளவுகள் அதிகரிப்பதற்கு அரசர்கள் காரணமாயிருந்தனர். ஆகையால் அம்மாகாணத்தில் கொள்ளை, அடிதடி, இன்னும் சகலவிதமான தீமைகளும் தலைவிரித்தாடின. நல்ல அரசாட்சியைப் பெற்றால்தான் மக்கள் அடங்கி அமைதியாயிருப்பார்களென்பதை டியூக் கண்டான். இதற்காக அவன் மெஸ்ஸர் ரெமிரோர்டி ஆர்கோ (Messer Remirrode Orco) என்பவனுக்குப் பூர்ண அதிகாரம் கொடுத்து நியமித்தான். அந்த அதிகாரி சாமர்த்தியமும் குரூரத்தன்மையும் கொண்டவன். கொஞ்ச நாட்களுக்குள்ளேயே ராஜ்யத்தில் ஒழுங்கையும் ஒற்றுமையையும் பரவச் செய்துவிட்டான். பிறகு டியூக் அவ்வளவு கடுமையான அதிகாரம் இனிமேல் அவசியமில்லை என்று கண்டான். அதிகாரமும் அளவுக்குமேல் போய்விட்டால் வெறுப்பைத் தருமென்றறிந்து மாகாணத்தின் தலைநகரில் ஒரு நியாயஸ்தலத்தை ஏற்படுத்தி அதற்கு ஒரு சிறந்த நீதிபதி (President)யை நியமித்தான். ஒவ்வொரு நகரத்திலிருந்தும் பிரதிநிதியாக நியாயவாதிகள் (Advocates) அந்த நியாய சபையிலிருந்தார்கள். முன்னால் செய்யப்பட்ட கொடுமைகளால் ஜனங்கள் மனதில் கொஞ்சம்

துவேஷ உணர்ச்சியிருப்பதையறிந்து, அதைப்போக்கி ஜனங்களை முற்றிலும் தன்வசப்படுத்திக் கொள்வதற்கு ஒரு யுக்தி செய்தான். இதுவரை ஏதாவது கொடுமைகள் நேர்ந்திருந்தால் அவை தன் உத்தரவின்மீது செய்யப்பட்டவையல்ல, தன் அமைச்சனுடைய குரூர புத்தியால்தான் என்று மக்களுக்குக் காண்பிக்கவெண்ணிச் சமயம் பார்த்து ரெமிரோர்டி ஆர்கோவை இரண்டு துண்டாகவெட்டி இரத்தம் தோய்ந்த கத்தியுடன் ஸிஸிரு (Cesona)வில் நாற்சந்தியில் போடச்செய்தான். இந்தக் காட்சியின் கோரம் ஜனங்களுக்குத் திருப்தியையும் வியப்பையும் அளித்தது.

இதுநிற்க, டியூக் இப்போது நல்ல பலசாலியாயும், தற்போதய கஷ்டங்களிலிருந்து விடுபட்டவனாயும், சேனாபலம் மிகுந்தவனாயும் ஆகி தன்னைப் பாதிக்கக்கூடிய அக்கம் பக்கங்களிலுள்ள சக்திகளையும் அனேகமாய் அடக்கிவிட்டான். மேன்மேலும் ராஜ்யங்களை ஜயிப்பதற்குப் பிரான்ஸின் நன்மதிப்பைப் பெறுவது அவசியமாகவிருந்தது. பிரான்ஸ் அரசன் தன் பிழையைத் தெரிந்து கொண்டு விட்டானகையால் அவன் சகாயம் செய்ய மாட்டானென்பது டியூக்குக்குத் தெரியும். ஆகவே அவன் புதிய சிநேகங்களைப் பிடிப்பதற்கு ஆரம்பித்தான். பிரஞ்சுக்காரர்கள் ஸ்பானியர்களை எதிர்த்து நேபிள்ஸ் மீது படையெடுத்தபோது, பிரான்ஸுடன் நயந்துபோகத் தொடங்கினான். ஸ்பானியர்கள் அப்போது கேடா (Gaeta)வை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தனர். டியூக்கின் எண்ணம் பிரஞ்சுக்காரர்களுடைய நேசத்தைப் பெறுவது. அலெக்ஸாண்டர் உயிருடனிருந்திருந்தால் அம்முயற்சி பலித்திருக்கும்.

தற்காலத்துப் பத்திரத்துக்காக டியூக் செய்து கொண்ட முன்ஜாக்கிரதைகள் இவை. வருங்காலத்தில் அலெக்ஸாண்டருக்குப் பிற்பாடு சர்ச்சைச் சேர்ந்த பிரதேசங்களுக்கு வாரிசாக வருபவர்கள் தன்னிடம் நேசமாயிராமல் அலெக்ஸாண்டர் தனக்களித்த ராஜ்யங்களை அபகரித்துவிடக்கூடும் என்று பயந்து அதற்கு நான்கு

வித முன் ஜாக்கிரதைகள் செய்துகொள்ள விரும்பினான். ஒன்று, தன்னால் பாதிக்கப்பட்ட ராஜவம்சங்களின் பூண்டே யிராமற்செய்து போப்புக்குத் தன்னை ஹிம்ஸிக்க சந்தர்ப்பமே யில்லாமல் செய்துவிடுவது. இரண்டாவது, போப்பை ஒரு கட்டுக்குள் வைப்பதற்காக ரோமப் பிரபுக்களின் நட்பைச் சம்பாதித்துக்கொள்வது; மூன்றாவது ராஜாங்க நிர்வாக சபை (The College)யில் கூடிய வரையில் தன்பிடிப்பை உறுதி செய்துகொள்வது; நான்காவது, அலெக்ஸாண்டர் இறக்குமுன் பகைவருடைய முதல் தாக்குதலைத் தனியே எதிர்த்து நிற்கக் கூடிய வலிமையைப் பெறுவது. அலெக்ஸாண்டருடைய மரணத்தின்போது இந்நான்கில் மூன்று விஷயங்களைச் சாதித்திருந்தான், நான்காவதையும் அநேகமாய் முடித்திருந்தான். முடிந்தமட்டும் ராஜவம்சங்களை நாசமாக்கினான். ரோமப் பிரபுக்கள் அவன் பக்ஷம் சேர்ந்துகொண்டார்கள். ராஜாங்க சபையில் அவனுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது. புதிய ராஜ்யங்களைப் பிடிக்கும் விஷயத்தில் டஸ்கனியைக் கைப்பற்றுவதற்குச் சூழ்ச்சி செய்துகொண்டிருந்தான். பெருகியா (Perugia)வும் பியோம்பினோ (Piombino)வும் ஏற்கனவே அவன் வசத்திலிருந்தன. பைஸாவின் பாதுகாப்பும் அவன் கையிலிருந்தது. பிரெஞ்சுக்காரரிடம் அவன் பயப்படவேண்டிய பிரமேயமே இல்லாமலிருந்தது. (ஏனென்றால் ஸ்பானியர்களிடம் பிரெஞ்சுக்காரர்கள் தோற்று நேபிள்ஸ் ராஜ்யத்தைப் பறிகொடுத்தனர். அதன் விளைவாக அவ்விருவரும் டியூக்கின் நட்பை விலைக்கு வாங்கும்படியாயிற்று.) ஆகவே, அவர்களிடமும் அச்சமில்லாமல் போய்ப் பைஸாவைச் சொந்தமாக்கிக் கொண்டுவிட்டான். இதன் பிறகு பிளாரன்டைன்கள் மேலுள்ள பகைமையினாலும், பயத்தினாலும் லுக்கா (Lucca)வும் ஸினா (Scina)வும் உடனே பணிந்துவிட்டன. பிளாரன்டைன்கள் பலங்குன்றியிருந்தார்கள். அப்போது மட்டும் டியூக்கின் நான்காவது யுக்தி பலித்திருந்தால் அலெக்ஸாண்டர் இறந்த வருஷமே பிறருடைய துணையின்றித் தன்னந்தனியே நின்று தற்காத்துக்கொள்ளும் சக்தியும் கீர்த்தியும் அவ

னுக்குக் கிடைத்திருக்கும். ஆனால் அலெக்ஸாண்டர் இறந்து ஐந்தாண்டுக்ளுக்குப் பிறகே லிஸர் போர்ஜியா (டியூக்) முதல் முதல் கத்தியைக் கைவிடுத்தான். ரோமாநு ஒன்றுதான் ஸ்திரமாக விருந்தது. மற்ற ஏற்பாடுகளெல்லாம் அரைகுறையாகவிருந்தன. பல சாலிகளான இரண்டு விரோதிகளுக்கிடையில் அகப்பட்டுக்கொண்டு விழித்ததுமன்றி ஒரு அபாயமான நோய் அவனைப் பற்றிக்கொண்டது. அவனுடைய வீரமும் திறமையும் மிகச்சிறந்தவை. மனிதர்களை வசியப்படுத்தவும் ஒழித்துவிடவும் நன்கு கற்றவன். அவ்விரு பகைவர்களும் அவனைத்தாக்கியிராமலிருந்து, அவனும் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்திருந்தால், ஒவ்வொரு கஷ்டத்தையும் சமாளித்திருப்பான். அவனுடைய அஸ்திவாரங்கள் வலிவானவை என்பதற்கு ரோமாநு அவனுக்காக ஒருமாதம் காத்திருந்ததும், ரோமில் அவன் குற்றுயிராயிருந்தபோதும் பத்திரமாயிருந்ததும், பாக்லியோனி (Baglioni) விடலி (Vitelli) ஆர்ஸினி முதலியவர்கள் ரோமாபுரியில் பிரவேசித்தபோது டியூக்குக்கு விரோதமாக அவர்களுக்காதரவளிபபோர் இல்லாமற்போனதும் தக்க சான்றுகள். தனக்கிஷ்டமானவரைப் போப்பாக்க முடியாவிட்டாலும், தான் விரும்பாதவரை அந்தப் பதவிக்கு வராதபடி தடுக்க டியூக்கால் முடிந்தது. அலெக்ஸாண்டருடைய மரணத்தின்போது அவன் உடம்பு நன்றாயிருந்திருந்தால் எல்லாம் சுலபமாக்வே இருந்திருக்கும். இரண்டாவது ஜூலியஸ் போப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதினம் டியூக் என்னிடம், தான் அலெக்ஸாண்டருடைய மரணத்துக்குப் பிறகு நிகழக்கூடிய எல்லா விஷயங்களையும் யோசித்து அவற்றிற்குத் தக்க முன்னேற்பாடுகள் செய்துவைத்திருந்ததாயும், ஆனால் அவர் சாகும் சமயத்தில்தானே இறந்து கொண்டிருக்கப் போவதை மட்டும் யோசிக்கவில்லை என்றும் கூறினான்.

டியூக்கின் செயல்களை ஆராயுங்கால் அவனைக்குறை கூறுவதற்கொன்றும் இல்லை. அதற்குப் பதிலாகப் பிறருடைய அதிர்ஷ்டத்தாலும் படைபலத்தாலும் பெரிய

பதவிக்கு உயர்ந்தவர்களுக்கெல்லாம் அவன் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறான். அவன் வீரமும், பெரிய ஆர்வங்களும் படைத்தவனுகையால் வேறுவிதமாக நடந்திருக்கமுடியாது. அலெக்ஸாண்டர் இறந்துவிட்டதாலும், அவன் வியர்தியுற்றதாலுந்தான் அவனுடைய யோசனைகள் பலிக்காமல்போயின. ஆகையால் புதிய ராஜ்யங்களில் எதிரிகளிடமிருந்து பத்திரமாயிருக்க விரும்புகிறவர்களும், நண்பர்களை வேண்டுபவர்களும கட்டாயமூலமாயேனும் கபடமூலமாகவேனும் காரிய சித்தியடையவிளைபவர்களும், ஜனங்களிடமிருந்து பய பக்தியை எதிர்பார்க்கிறவர்களும், போர்வீரர்களுடைய மரியாதையையும் ஆதரவையும நாடுகிறவர்களும், தனக்குத்தீங்கு செய்யக்கூடியவர்களை அழிக்க விரும்புகிறவர்களும், பழைய சட்டங்களுக்குப் பதிலாகப் புதிய சட்டங்களை ஏற்படுத்த முயல்வோரும், அன்பையும் கடுமையையும் கைக்கொள்ளும் சக்திக்கு ஆசைப்படுவோரும், பெருந்தன்மையும் தாராளமனப்பான்மையும் காண்பிக்க வேண்டுகிறவர்களும், பழைய சைனியத்தை அடக்கிப் புதிய ராணுவத்தை அமைப்போரும், அரசர்களும சிற்றரசர்களும் தனக்கு நன்மை செய்வதில் சந்தோஷங் கொண்டு தீங்குபுரிய அஞ்சும்படியான வழியில் அவர்களுடைய நட்பைப் பாதுகாத்துக்கொள்ள இச்சிப்பவர்களும், டியூக்கின் மகத்தான காரியங்களைவிடச் சிறந்த உதாரணத்தைக் காணமுடியாது. இரண்டாவது ஜூலியஸை (Pope Julius II)ப் போப் பதவிக்கு வரவிட்டதற்குத்தான் ஒருக்கால் அவன்குறைகூறப்படலாம். தனக்கு வேண்டியவரை அந்த ஸ்தானத்தில் நியமிக்க முடியாவிட்டாலும் வேண்டாதவரைத் தடுத்தாவதிருக்கலாமல்லவா? தன்னால் துன்புறுத்தப்பட்ட கார்டினல் (Cardinal) களிலொருவரையோ, அல்லது தன்னிடம் அஞ்சக்கூடிய ஒருவரையோ, பேர்ப்பாவத்தற்கு அனுமதித்திருக்கலாகாது. ஏனெனில் மனிதன் பயம் அல்லது துவேஷத்தால் தூண்டப்பட்டே பிறருக்குத் தீங்கிழைக்கிறான். ஸான் பீட்ரோ அட் வின்குலா (San Peitro ad Vincula) கொலோனா (Colonna) ஸான் ஜியார்ஜியோ (San Giorgio)

அஸ்கானியோ (Ascanio) முதலியவர்கள் டியூக்கினல் கஷ்டமடைந்தவர்களிற் சிலர். ஸ்பானியரையும் ரோஹனையும் தவிர மற்றவர்கள் பேர்ப் பதவிக்கு வந்தால், அவனிடம் அஞ்ச வேண்டியவர்கள். ஸ்பானியர்கள் அவனிடம் கட்புரிமை கொண்டு, அவனிடம் கடமைப் பட்டவர்களாக விருந்தார்கள். ரோஹன் அளவற்ற ஆற்றலுடையவனா யிருந்ததும் தவிர, பிரஞ்சு மன்னனுக்கு உறவினன். இக்காரணங்கள் பற்றி டியூக் ஒரு ஸ்பானியனைப் போப்பாக்க முயன்றிருக்கவேண்டும். அது முடியாவிட்டால், ரோஹன்போப்பாவதற்கு இணங்கி யிருக்கவேண்டும். பெரிய பதவியிலிருப்பவர்கள் புதிதாக நன்மைகளைப்பெற்றாலும் பழைய தீங்குகளை மறந்துவிடுவர்களென்று நினைப்பது தவறு. இவ்விஷயத்தில் டியூக் இழைத்த பிழை இறுதியில் அவன் அழிவுக்கே ஏதுவாயிற்று.

## எட்டாவது அத்தியாயம்

### துன்மார்க்கத்தின் மூலம் பெறும் ராஜ்யம்

அரசனாவதற்கு அதிர்ஷ்டத்தையும் சாமர்த்தியத்தையும் தவிர இன்னும் இரண்டு வழிகள் இருக்கின்றன. அவற்றிலொன்று குடியரசைக் குறித்துக் கூறும்போது விவரிக்கப்பட வேண்டியதானாலும் அதைப்பற்றியும் இங்கே கொஞ்சம் சொல்லாமல் முடியாது. ஒரு வழி துஷ்டத்தனத்தினாலும் வஞ்சனையாலும் அரசனாதல். இன்னொன்று தன்போன்ற நகரவாசிகளின் தயவால் தன் நாட்டில் ராஜாவாதல். முற்கூறியதற்குப் பழமையும் புதுமையுமான இரண்டு உதாரணங்கள் தருகிறேன். இதைப்பற்றி அதிகம் சொல்லவேண்டியதில்லை. பார்த்துப் பின்பற்ற விரும்புபவர்களுக்கு உதாரணங்களை எடுத்துக் கூறுவதே போதும்.

ஸிராகஸ் நகரத்தினனான அகாதக்ளிஸ் (Agathocles) சாமான்யமானவன் மட்டுமல்ல. மிகவும் ஹீனமான நிலைமையிலிருந்து ஸிராக்ஸ் மன்னனுடைய அந்தஸ்துக்குவந்தவன். அவன் ஒரு குயவனின் மகன். அவன்

அதிர்ஷ்ட ஏணியில் ஏறும்போது ஒவ்வொரு படியிலும் துஷ்டத்தனத்தையே துணையாகக் கொண்டு சென்றான். அவன் வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் அயோக்கியத்தனமே நிறைந்திருந்தது. நிர்க்குணங்களோடு மனோ திடமும் தேக பலமும் மிதமிஞ்சியிருந்தபடியால், பட்டாளத்தில் படிப்படியாகத் தலைவன் (Praetor) ஸ்தானத்துக்கு வந்தான். இப்பதவிக்கு வந்ததும் ராஜ்ஜியவாயவிட வேண்டுமென்று தீர்மானித்துத் தனக்கு சட்ட ரீதியாகச் சொந்தமாகப் பேர்வதை அயலாருடைய உதவியின்றிக் கெட்டியாய்ப் பற்றிக்கொள்ளவேண்டுமென்று எண்ணினான். ஸிஸிலியில் தன் படைகளுடன் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த கார்த்தேஜ் (Carthage) நாட்டினனான ஹாமில்காரிடம்(Hamilcar) தன் சூழ்ச்சியைத் தெரிவித்து அவனுடன் கலந்துகொண்டு ஒருநாள் ஸிராகஸ் மஹாஜனங்களையும ஸெனெட் (ராஜாங்க சபை)டையும்குடியரசைப் பற்றி முக்கியமான சமாசாரம ஏதையோ சொல்ல விரும்புகிறவன் போல் சபை கூட்டினான். அவன் ஒரு சமிக்ஞை செய்தவுடன், அவனுடைய போர்வீரர்கள் ஸெனேடர்களையும் ஜனங்களில் செல்வமிருந்தவர்களையும் கொன்று விட்டார்கள். அவர்களைக் கொன்றபிறகு அவன் அந்த ராஜ்யத்தை வசப்படுத்திக்கொண்டு, உள்நாட்டுக் கலவரமொன்றுமில்லாமல் நிமமதியாக ஆட்சி புரிந்தான். இருமுறை கார்த்தஜினியர்களால் முறியடிக்கப் பட்டுக் கடைசியில் அவன் நகரம் அவர்களால் முற்றுகை யிடப் பட்டபோதும், தன் நகரத்தின் பாதுகாப்புக்காக ஒரு பாகம் சைனியத்தை வைத்துவிட்டு, மிகுந்திருந்த படைகளுடன் ஆப்பிரிக்காவைத் தாக்கினான். கொஞ்ச காலத்திற்குள் கார்த்தஜினியர்களுடைய தாக்குதலினின்று ஸிராகஸ் நகரத்தை விடுவித்துக் கார்த்தஜினியர்களைப் பணியவைத்தான். அவர்கள் ஸிஸிலியை அவனுக்கே விட்டுவிட்டு ஆப்பிரிக்காவிலிருந்த தங்கள் உரிமைகளுடன் திருப்தியடைய வேண்டியவர்களானார்கள். அகாதக்ளிஸின் முன்னேற்றத்துக்கு அதிர்ஷ்டத்தைக் காரணமாகச் சொல்ல முடியாது. பட்டாளத்தில் பிறருடைய தயவின்றித் தானாகவே படிப்படியாக உயர்ந்து ஆயிரம் இன்

ன்களையும் ஆபத்துக்களையும் தாண்டி, ராஜ பதவியை அடைந்தான். அப்பதவியைத் தனது தீரத்தால் பல ஆபத்துக்களுக்கு ஈடுகொடுத்துக் காத்துக் கொண்டான். தன் சகோதர பிரஜைகளைக் கொல்வது, சிநேகிதர்களுக்குத் துரோகம் செய்வது, விசுவாச காதகம் செய்வது, ஈவு இரக்கம், பக்தி முதலியவை யில்லாமலிருப்பது, இவற்றை உத்தம குணங்களென்று சொல்ல முடியாது. இந்த முறைகளால் ஒருவன் வலிமையைப் பெறலாமேயன்றிக் கீர்த்தியை அடைய முடியாது. ஆபத்துக்களுக்குத் துணிந்து அவற்றைச் சமாளிப்பதும், தடங்கல்களை லக்ஷியம் செய்யாமல் காரியத்தை முடிப்பதுமான அவனுடைய தன்மைகளை ஆலோசித்தால், நிகப் பிரக்கியாதி வாய்ந்த ஒரு தளபதிக்கு அவன் எவ்விதத்திலும் குறைந்தவனல்ல, அவனுடைய மிருகத்தனமான குரூர குணமும், இரக்கமற்ற தன்மையும், அவன் புரிந்த எண்ணற்ற அட்டூழியங்களுந்தான் அவனைக் கீர்த்தியிற் சிறந்த பெரியோர்களுடன் ஒப்பிடமுடியாமற் செய்கின்றன. அவனுடைய வெற்றிக்கு அதிர்ஷ்டமோ, ஒழுக்கமோ, காரணமென்று சொல்ல முடியாது. அவை யிரண்டும் அவனுக்கில்லை.

நம் காலத்தில் ஆறுவது அலெக்ஸாண்டர் போப் பதவி வகித்தபோது ஆலிவரோட்டோ டா பெர்மோ (Oliverotto da Fermo) என்ற தந்தையற்ற சிறுவன் தன் தாய்மாமனை ஜியோவானி பொக்லியானி (Giovanni Fogliani)யிடம் வளர்ந்து வந்தான். மாமன் அவனை இளமையிலேயே பாலோ விடல்லி (Paolo Vittelli)யிடம் போர்த் தொழில் கற்பதற்கு விட்டான். அவனிடம் பயிற்சி பெற்றால் சைன்னியத்தில் பெரிய பதவிக்கு வரக் கூடும் என்று கருதினான். பாலோ இறந்தபின் அவனுடைய சகோதரனை விட்டெலெஸோ (Vitellezzo)வின் கீழ் போர்புரிந்து மிகக் குறுகிய காலத்துக்குள் மிகவும் புத்திசாலியும் சுறுசுறுப்புள்ளவனுமான ஆலிவரோட்டோ துருப்புக்களின் தலைவர்களிலொருவனானான் ஆனால் அன்னியரின் கீழ் வேலை செய்வது அடிமைத்தன

மென்று எண்ணினான். தங்கள் நாட்டின் சுதந்திரத்தைத் துச்சமென்று மதித்து, அதை அடிமைப் படுத்த மனம் வந்த சிலருடைய உதவியாலும் விடலியின் ஆதரவாலும் பெர்மோவைக் கைப்பற்றத் தீர்மானித்தான். ஆகை யால் அவன் தன் மாமனுக்கு ஒரு கடிதம் எழுதினான். அதில், தான் ஊரை விட்டு வந்து பல நாட்களாய்விட்ட மையால் ஊருக்கு வந்து மாமனையும் பார்த்துவிட்டு, முடிந்தவரையில் தன் நிலம், நீரையும் பார்க்க விரும்புவ தாக எழுதி யிருந்தான். கௌரவத்தைப் பெறுவதற் காகவே தான் இவ்வளவு காலம் உழைத்தபடியால் நகர மாந்தர்களுக்குத் தன் பெருமையைக் காண்பிப்பதற்காக வும், தான் இத்தனை நாட்களை வீணாகக் கழிக்கவில்லை யென்பதை அவர்கள் அறிவதற்காகவும் தன்னோடு நூறு குதிரை வீரர்களையும் சில சிநேகிதர்களையும் தன் பரிஜனங்களையும் அழைத்துவர அனுமதிக்க வேண்டு மென்றும், பெர்மோ நகரவாசிகள் தன்னை மரியாதை யுடன் வரவேற்கத் தகுந்த ஏற்பாடுகள் செய்யவேண்டு மென்றும் கேட்டுக் கொண்டிருந்தான். ஜீயோவானி தன் மருமகனுக்கு மரியாதை செய்யத் தவறவில்லை. பெர்மோ நகரவாசிகளைக் கொண்டு கௌரவத்துடன் வர வேற்கச் செய்து அவனைத் தன் மாளிகைகளிலொன்றில் இருக்கச் செய்தான். தன் துரெண்ணங்களை உருப் படுத்துவதற்காகக் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு, ஆலிவரோட்டோ தன் மாமனையும் பெர்மோவின் மற்ற முக்கியஸ்தர்களையும் ஒரு விருந்துக்கழைத்தான். விருந்திக்கப்புறம் வழக்கமான ஆட்டம் பாட்டங்களெல் லாம் முடிந்தபிறகு ஆலிவரோட்டோ தந்திரமாகச் சில முக்கிய விஷயங்களைக் குறித்துப் பேச்சை ஆரம்பித்தான். போப் அலெக்ஸாண்டர், அவன் மகன் ஸீஸர், அவர்களு டைய துணிகரமான செயல்கள், போன்றவற்றைச் சம்பா ஷணையில் புகுத்தினான். ஜியோவானியும் மற்றவர்களும் பதில் கூறியவுடன் அவன் திடீரென்றெழுந்து இம்மாதிரி விஷயங்கள் தனிமையில் விவாதிக்கப்பட வேண்டியவை என்று சொல்லிவிட்டு ஒரு தனி அறைக்குச் சென்றான். ஜியோவானியும் மற்ற நகரவாசிகளும் பின் தொடர்ந்

தனர். அவர்கள் உள்ளே சென்று உட்கார்ந்ததும் உட்காராததுமாய் மறைவிடங்களிலிருந்து போர் வீரர்கள் பாய்ந்து வந்து அவர்களெல்லோரையும் கொன்று தீர்த்தனர். இப்படுகொலைக்கு பிறகு ஆலிவரோட்டோ குதிரைமீது ஆரோகணித்து பட்டணத்து வீதிகளின் வழியே சென்று பிரதான மாஜிஸ்ட்ரேட்டை (நீதிவானை) அவனுடைய அரண்மனையிலேயே தாக்கினான். பிரதான மாஜிஸ்ட்ரேட்டும் மற்றவர்களும் நடுநடுங்கிப் போய் அவனிடம் அடங்கி ஒரு அரசாங்கத்தை அமைக்க ஒப்புக் கொண்டார்கள். அந்த அரசாங்கத்துக்கு ஆலிவரோட்டோ தன்னை ராஜாவாக நியமித்துக் கொண்டான். தன்னை எதிர்க்க கூடியவர்களெல்லோரும் இறந்தொழிந்துவிட்டதால் ராணுவத்திலும் நாகரிக வாழ்விலும புதிய முறைகளை ஏற்படுத்தித் தன்னைப் பலப்படுத்திக் கொண்டு, ஒரு வருஷ காலத்திற்குள் ராஜ்யத்தை நிலைக்கச் செய்துகொண்டது மன்றி வேற்றரசர்களுக்குப் பயங்கரமானவனாயும் ஆய்விட்டான். ஸீஸர் போர்ஜியாவிடம் மாத்திரம் அவன் ஏமாந்திராதிருந்தால் அக்ரதக்ளியைப் போலவே அவனையும் எவரும் எளிதில் தொலைத்திருக்க முடியாது. ஸினாகாலியாவில் ஆர்ஸினியையும் விடலியையும் ஸீஸர் போர்ஜியா சிறைப் பிடித்தபோது, இவன் செய்த படுகொலைக்கு மறுவருஷம் இவனும் அங்கே போய் அகப்பட்டுக் கொண்டுவிட்டான். அங்கே அக்கிரமங்களுக்கும் சாதுர்யத்துக்கும் தன்னுடைய குருவான விடலெலோவுடன் கொல்லப் பட்டான்.

அக்ரதக்ளிஸ் போன்ற எல்லையற்ற வஞ்சகமும் குரூரத்தன்மையும் உள்ளவர்கள் நெடுங்காலம தம் ராஜ்யங்களில் பத்திரத்துடன் அதிகாரம் வகித்து அன்னியர் ஆக்கிரமிப்பைத் தடுத்துக் கொண்டிருப்பதும் அவர்களுக்கு விரோதமாகச் சதிசெயல்கள் நடவாமலிருப்பதும் எவ்வாறு என்று சிலர் அதிசயப் படலாம். சமாதான காலத்திலேயே கொடுங்கோல் மன்னர்கள் பாடு கஷ்டம்; யுத்தக் காலங்களில் கேட்க வேண்டியதில்லை.

இப்படிப்பட்டவர்கள் தப்பித்துக் கொள்வதற்கும், அழிந்து போவதற்கும் இவர்கள் குரூரச் செயல்களைச் செய்யும் விதந்தான் காரணம். நன்றாகச் செய்யப்படும் கொடுமைகள் (கொடுமைக்கு நன்றாக என்னும் சொல்லை உபயோகிப்பது அனுமதிக்கத்தக்கதானால்) ஒரு முறை தற்காப்பின் பொருட்டுச் செய்யப்பட்டுப் பிறகு தொடர்ந்து செய்யப்படாமல் அவை மக்களுக்கு க்ஷேமத்தைத் தரும் காரியங்களாக மாறவேண்டும். அதைத்தான் செவ்வையாகச் செய்யப்படும் கொடுமை எனக் கூறலாம். சிலருடைய கொடுஞ் செயல்கள் நாளாக நாளாக அதிகரித்துக்கொண்டே போகின்றன. அதைச் சரியாகச் செய்யப்படாத கொடுமை என்று கூறவேண்டும். முதலிற் சொல்லப்பட்டவர்கள் அகாதக்ளிஸ் மாதிரி கடவுள் முன்னும் மனிதன் முன்னும் தன் நிலைமையைச் சீர்திருத்திக் கொள்ளலாம். மற்றவர்களுக்குக் கதிமோக்ஷம் கிடையாது.

ஆகையால் ஒரு தேசத்தைக் கைப்பற்றும்போது ஜயிப்பவர்கள் கவனிக்க வேண்டியதென்னவென்றால், அவன் செய்ய விரும்பும் ஹிம்ஸைகளனைத்தையும் ஒரேயடியாக நிறைவேற்றிவிட வேண்டும். நாள்தோறும் கொடுமை புரிவதிலேயே ஈடுபடும்படி நேரக்கூடாது. பிறகு புதிய மாறுதல்கள் எதுவும் செய்யாமலே மக்களுக்கு நன்மைகளை வழங்கி அவர்களை உத்ஸாகப்படுத்தி வசப்படுத்திக்கொள்ள வேண்டும். மிருதுத் தன்மையினாலோ துர்மந்திரிகளின் பேச்சைக் கேட்டோ, இதற்கு மாறாக நடப்பவர்கள், எப்போதும் கத்தியும் கையுமாக நிற்கவேண்டியதுதான். அவர்கள் தம் குடிகளின் ஒத்துழைப்பை எதிர் பார்க்க முடியாது. இடைவிடாமல் புதிது புதிதான ஹிம்ஸைகளை அனுபவிக்கும் ஜனங்கள் அரசனை நம்பமாட்டார்கள். ஆகையால் ஹிம்ஸைகளை ஒரேயடியாக இழைத்து விடவேண்டும். அவற்றின் கசப்பை அனுபவிக்கும் குறைவர்களிருந்தால், அவற்றால் ஏற்படும் கோபமும் குறைவாகவிருக்கும். நன்மைகளைச் சிறுகச் சிறுக வழங்கி அவற்றை ஜனங்கள் ருசித்து

அனுபவிக்கும்படி செய்யவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு அரசன் தன் குடிகளுடன் பழகும் மாதிரியில் அதிர்ஷ்ட வித்தியாசங்கள் குறுக்கிடும்படி விடலாகாது. ஏனெனில் கஷ்டகாலம் வந்தபோது அவசியமானால் கொடுமைபுரியவேண்டிவரும். அப்போது கொடுஞ்செயல் களைச் சரியானசமயத்தில் செய்யக்கூடாமல் போகும். நல்ல காரியங்கள் பலவந்தத்தின்மீது செய்யப்பட்ட வையாக நினைக்கப்படும். ஆகையால் அவற்றாலும் பலன் கிட்டாது. ஆகையால் எந்தச் சந்தர்ப்பத்திற்கும் ஏற்றதா யிருக்கும் முறையில் மக்களுடன் அரசன் பழகவேண்டும்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

### "ஸிவிக்" ராஜ்யங்கள் (பிரஜைகளின் ராஜ்யங்கள்)

குற்றம், கொடுமை, முதலியவற்றை மேற்கொள்ளாமல் சகோதர பிரஜைகளின் ஆதரவால் கிடைக்கும் ராஜ்யத்தை "ஸிவிக்" (Civic) ராஜ்யம் எனலாம். ஸிவிக் ராஜ்யத்தை அடைவதற்கு வெறும் அதிர்ஷ்டமும் யோக்கியதையும் மட்டுமே போதா; தந்திரமும் கலந் திருக்கவேண்டும். பொது ஜனங்களின் ஆதரவால், அல் லது பிரபுக்களின் தயவால் இவ்வகை ராஜ்யத்தைப் பெறலாம். ஒவ்வொரு நகரத்திலும் இவ்விரு கட்சிகளும் உண்டு. ஜனங்கள் பிரபுக்களுடைய ஆதிக்கத்தை ஒழிக்க் விரும்புவார்கள், பிரபுக்கள் ஜனங்களை அடக்கியாளப் பார்ப்பார்கள். இவ்விரு முரண்பட்ட கட்சிகளிலிருந்து பின்வரும் மூன்று விஷயங்களிலொன்று எழுகின்றது. பூர்ண அதிகாரமுடைய அரசாங்கம் (Absolute Government) சுதந்திரம் (Liberty) அல்லது எதேச்சை (Licence). முதலில் கூறியது சமயத்துக் கேற்றபடி மக்களாலோ அல்லது பிரபுக்களாலோ ஏற்படுகிறது. பிரபுக்கள் ஜனங்களை இனி தங்களால் அடக்க முடியாது என்று கண்டவுடன் ஒன்று சேர்ந்து தங்களிலொருவனை ராஜா வாக நியமித்து, அவனுடைய அதிகாரத்தின் நிழலில் தங்கள் காரியங்களை நடத்திக் கொள்கிறார்கள். ஜனங்கள்

பிரபுக்களை எதிர்க்க முடியாமற் போனால், தங்களுள் ஒருவனை அரசனாக்கி அவனுடைய அதிகாரத்தின் பலத்தால் காப்பாற்றப்பட விரும்புகிறார்கள். பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசனைவிடப் பிரபுக்களால் நியமிக்கப்பட்டவனுக்குத் தன் பலத்தைக் காத்துக் கொள்வது கடினம். ஏனெனில் தங்களை ராஜாவுக்குச் சமானமென்று நினைத்துக்கொண்டிருக்கும் பிரபுக்கள், அவனைச் சூழ்ந்து கொண்டிருப்பதால், ராஜா தன்னிஷ்டப்படி அதிகாரம் செலுத்தவும் உத்திரவிடவும் முடிகிறதில்லை. ஆனால் பொது ஜனங்களுடைய விருப்பத்தின்மேல் அரசனானவன் தனி கௌரவத்துடன் இருக்கிறான். அவன் ஆணையைச் சிரமேற்கொள்ளாதவர்கள் வெகு சிலரே. அதுவும் தவிரப் பிறரைத் துன்புறுத்தாமல் நியாயமாய் நடந்து பிரபுக்களைத் திருப்திசெய்வது கஷ்டம். இவ்வகையில் குடிகளை எளிதில் சந்தோஷப் படுத்தலாம். ஜனங்களுடைய லக்ஷியங்கள் பிரபுக்களுடைய உத்தேசங்களை விட நாணயமானவை, கௌரவமுள்ளவை. பிரபுக்களுக்குப் பிறரை அடக்கியாளுவதில் ஆசை; ஜனங்கள் தங்களை ஒருவரும் ஒடுக்காமலிருந்தால் போதும் என்கிறார்கள். ஜனங்களுடைய விரோதத்திலிருந்து தப்புவதற்கு அரசன் பாதுகாப்பு முறைகளைக் கையாள முடியாது. ஏனெனில் அவர்கள் தொகை அதிகம். பிரபுக்கள் சிலரேயாதலின், அவர்களுடைய துவேஷத்துக்குத் தடுப்பு முறைகளை உபயோகிக்கலாம். ஜனங்களுடைய விரோதம் மிஞ்சிப் போனால், அரசனைக் கைவிட்டு விடுவதைவிட அதிகமாய்ப் போகாது. பகைவர்களான பிரபுக்கள் அரசனைக் கைவிடுவது மன்றி எதிர்க்கவும் துணிவார்கள். அவர்களுக்குத் தூரதிருஷ்டியும் தந்திரமும் அதிகமாகையால், ஜயிக்கும் கட்சி எதுவென்று பார்த்துக்கொண்டிருந்து அதில் சேர்ந்து தப்பித்துக் கொள்வார்கள். அரசன் அதே ஜனங்களுடன் வசித்தாகவேண்டும். அதே பிரபுக்களுடன் இருந்தாக வேண்டியதில்லை. பிரபுக்களை அரசன் மனம்போல் ஆக்கவும் அழிக்கவும் வழியுண்டு. அவர்களுடைய அந்தஸ்தை உயர்த்தலாம், அல்லது ஒழித்து விடலாம்.

என்னுடைய வாதத்தை விளக்குவதற்காக ஒன்று கூறுகிறேன். பிரபுக்களைப் பற்றி இருவகையாக யோசித்து காரியம் செய்யவேண்டும். அவர்களைச் சகலத்துக்கும் அரசனையே சார்ந்திருக்கும்படியாக வைக்கவேண்டும். அரசனுடைய நன்மை தீமைகள் அவர்களைப் பாதிக்க வேண்டும். அப்படி யில்லா விட்டால் அவர்களைக் கிட்டவே சேர்க்கக்கூடாது. அரசனிடம் கட்டுப்பட்டு நடக்கும் பிரபுக்களுக்குள் பணத்தாசை பிடித்திராதவர்களா யிருந்தால், அவர்களைக் கௌரவித்து அன்பு பாராட்ட வேண்டும். அரசனிடம் ஒட்டாமல் தூர நிற்பவர்களை இருவிதமாகப் பிரிக்கலாம். சங்கோஜத்தினாலும், தைரியக் குறைவாலும் அவர்கள் அப்படியிருக்கலாம். அப்படியானால் அவர்களை, முக்கியமாய் அறிவாளிகளா யிருப்பவர்களை, அரசன் உபயோகித்துக் கொள்ளவேண்டும். காலம் எப்படி மாறினாலும் அவர்களிடம் அஞ்சவேண்டியது இல்லை. ஆனால் பிரபுக்கள் வேறு அக்கரைகளுடையவர்களாய், வேண்டுமென்றே தங்கள் பேராசையின் காரணமாய் அரசனிடம் நெருங்காமல் ஒதுங்கிப் போனால் அது அவர்கள் அரசனுடைய நலத்தை விடத் தங்கள் நன்மையையே பெரிதாகக் கருதுகிறார்களென்பதற்கடையாளம். அப்படிப்பட்டவர்களிடம் அரசன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அதிர்ஷ்டம் மாறினால், அவர்கள் அரசனைக் கெடுக்கத் தயாரா யிருப்பார்கள்.

மக்கள் ஆதரவால் மன்னனானவன் மக்கள் நட்பை வளர்க்கவேண்டும். மக்கள், தாம், துன்புறுத்தப் படாம லிருந்தால் போதுமென்றிருப்பவர்களாகையால், அவர்களது சிநேகத்தைப் பாதுகாப்பது எளிது. ஜனங்களின் இஷ்டத்துக் கெதிராக பிரபுக்களால் ராஜாவாக்கப் பட்டவனும் ஜனங்களின் நல்லுறவைப் பெற முயலுவது அவசியம். குடிகளை அன்புடன் ஆண்டுவந்தால், அதுவும் சுலபந்தான். தீமை கிடைக்குமென்று எதிர்பார்த்த விடத்தில் நன்மை கிடைத்தால், நன்றி செய்தவனிடம் மட்டற்ற விசுவாசத்துடனிருப்பது மனித வியற்கையாதலால், ஜனங்கள் தாங்களே தேர்ந்தெடுத்திருக்கக்

கூடியவனிடம் இருப்பதைவிட் இம் மன்னனிடம் அதிக நல்லுணர்ச்சியுடனிருப்பார்கள். சந்தர்பங்களுக்குத் தக்கவாறு ராஜா பல விதங்களில் அவர்கள் மனதைக் கவரலாம். அதற்கென்று தனியாக ஒன்றும் விதி கிடையாது. முடிவாக நான் சொல்வது இதுதான். ஜனங்களுடைய நட்பைப் பெறுவது மன்னனுக்கு இன்றி யமையாதது. இல்லையேல் கஷ்டகாலத்தில் சகாயம் கையிருப்பில் இராது.

ஸ்பார்த்தர்களுடைய ராஜாவான நபிஸ் (Nabis) கிரீஸினுடையவும் வெற்றி கொண்ட ரோமர்களுடையவும் தாக்குதலை எதிர்த்துக் தற்காத்துக் கொண்டான். ஆபத்து நேர்ந்த காலத்தில் மக்களுடைய உதவி கிடைக்குமென்ற தைரியம் அவனுக்குப் போதுமானதா யிருந்தது. பொது மக்கள் விரோதபாவத்துடனிருந்தால் அந்த ஆபத்தைச் சமாளித்திருக்க முடியாது. "மக்கள் மேல் நம்பிக்கை வைக்கிறவன் மணல் மேல் கோட்டை கட்டுகிறான்" என்ற பழமொழி இருப்பதுண்மையே. சாதாரண மனிதனுக்கு அது சரிதான். சாமானிய மனிதனொருவன் தன்னை விரோதிகளாவது மாஜிஸ்ட் ரேட்டாவது ஹிம்ஸித்தால் பொது மக்கள்வந்து விடுவிப் பார்களென்று நம்பிக்கை கொள்வானாயின் ரோமில் க்ராக்சி (Grachi)யையும் பிளாரன்ஸில் மெஸ்ஸெர் ஜியார் ஜியோ ஸ்காலி (Messer giorgio Scali)யையும் போல் ஏமாந்து தான் போவான். ஆனால் அஞ்சா நெஞ்சின னையும், அதிகாரம் செய்யக் கூடியவனையும் துரதிர்ஷ்டம் நேருங்கால் மனங் கலங்காதவனையும், மற்ற ஏற்பாடுகளை அலக்ஷியம் செய்யாதவனையும், தன் வீரத்தினாலும், வழிக ளாலும் ஜனங்களை உத்ஸாகப் படுத்தக் கூடியவனையும இருக்கும் ஒரு ராஜா, மக்கள் மீது நம்பிக்கை வைப்பானா கில் அவன் ஏமாற்றமடையமாட்டான். தன் அஸ்தி வாரம் பலமான தென்பதைக் காண்பான்.

சாதாரணமாக இந்த ராஜ்யங்களில் அரசன் நகர மாந்தர்களின் பிரதிநிதி என்ற ஸ்தானத்திலிருந்து முழு அதிகாரமும் உடைய அரசனாய் மாறும்போதுதான்

அபாயம் ஏற்படுகிறது. ராஜாக்கள் தாங்களே நேரில் அல்லது மாஜிஸ்ட்ரேட்டுகள் மூலமாயாவது ஆட்சி புரிகிறார்கள். பின்கூறப்பட்ட விதமாயின் ராஜாவின் நிலைமை பலஹீனமும் அபாயமும் உடையதாகும். அரசன் மாஜிஸ்ரேட்டுகளின் தயவில் இருப்பதால் கஷ்ட காலம் வந்தபோது, அவர்கள் சௌகரியமாக அரசனை எதிர்க்கவும் கூடும், அல்லது அவனுடைய ஆணையை நிறைவேற்றாமலிருந்து அவனை ராஜ்யத்தையே இழக்கும்படி செய்யவும் கூடும். அம்மாதிரி சமயங்களில் அரசனுக்கு நம்பத்தகுந்த துணைவர்கள் கிடைப்பதரிது. ஏனெனில் ஜனங்கள் மாஜிஸ்ரேட்டின் கட்டளைகளுக்கே பணிந்து பழகிவிட்டதால் திடீரென்று ராஜாவுடைய நேர்முகமான உத்தரவுகளை ஏற்கத்தயாராயிருக்கமாட்டார்கள். ராஜாவுக்குத் தன் முழு அதிகாரத்தையும் அமுலுக்குக் கொண்டுவரச் சமயம் போதாமலிருக்கும். அப்படிப்பட்ட அரசன், சமாதான சமயத்தில், மக்களுக்கு நல்ல அரசாட்சி வேண்டிய சமயத்தில் அவர்கள் இருக்கும் மாதிரியைக் கண்டு தைரியம் கொண்டுவிடலாகாது. ஏனெனில் அப்போது ஜனங்கள் அரசனுக்காக எதுவும் செய்யச் சித்தமாயிருப்பவர்களைப் போலக் காணப்படுவார்கள். அவனுக்காக உயிரைக் கொடுக்கவும் முன்வருவார்கள். ஆனால் அந்த அவசியம் மட்டும் கிட்டத்தில் இல்லாமலிருக்க வேண்டும். கஷ்ட காலத்தில், ராஜாங்கத்துக்கு மக்களுடைய ஒத்தாசை வேண்டியிருக்கும் சமயத்தில் வெகு சிலரே உதவி புரியச் சித்தமாயிருப்பார்கள். இந்த அனுபவம் ஒரே தடவை வருவதாகையால், மிகவும் அபாயகரமானது. ஆகையால் புத்திமானான அரசன் எப்போதும் எந்த நிலையிலும் ஜனங்களுக்குத் தன் அரசாட்சி இன்றியமையாததாயிருக்கும்படியான வழியைச் செய்து கொண்டால் மக்கள் அவனிடம் உண்மையுள்ளவர்களாயிருப்பார்கள்.

## பத்தாவது அத்தியாயம்

### ராஜ்யங்களுடைய பலத்தை அளவிடுவதின் அவசியம்.

இந்த ராஜ்யங்களைப் பற்றி ஆராயுங்கால் இன்னொரு அம்சத்தைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அரசன் அவசியமானபோது தனியாகத் தன்னைக் காத்துக் கொள்ளும் வல்லமையுள்ளவனா அல்லது எப்போதும் பிறருடைய உதவியை எதிர்பார்ப்பவனா என்று பார்க்க வேண்டும். ஏராளமான தனமும் மனிதக் கட்டும் சேனா பலமும் உடையவர்கள், தனியாகத் தற்காப்புச் செய்து கொள்ளக் கூடியவர்கள். பிறரைப் போரில் எதிர்க்கும் ஆற்றலின்றித் தம் நகரங்களின் மதில்களுக்குள்ளேயே இருந்து தற்காப்பில் ஈடுபட்டிருப்போருக்கு அயலாருடைய சகாயம் அவசியம் வேண்டும். முதற் கூறியதைப் பற்றி ஏற்கனவே விவரித்தாயிற்று. சமயம் வரும்போது மறுபடியும் அதைப் பற்றிக் கவனிப்போம். இரண்டாவது கூறியதைக் குறித்தும் அதிகமாக ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. அரசன் தன் நகரத்தில் போதுமான உணவுப் பொருள்களைக் காப்பாற்றி வைத்துக்கொண்டு நகரத்தைக் கூடுமானவரையில் பலப்படுத்திக் கொள்வதுடன் அடுத்திருக்கும் நாடுகளில் அக்கறை கொள்ளாமலிருக்கவேண்டும். தன் நகரத்தை உறுதியாகப் பலப்படுத்திக்கொண்டு ஜனங்களுடைய ஆட்சியை இதுவரை நான் சொன்னதுபோலவும் இனி கூறப்போகிறதைப் போலவும் நடத்திக்கொண்டுவரும் ராஜாவை எவரும் எதிர்ப்பதற்குத் தயங்குவார்கள். கஷ்டங்கள் வரும் என்று தெரிந்த விஷயங்களில் பிரவேசிப்பதற்கு மனிதர்கள் இஷ்டப்படுகிறதில்லை. நகரத்தை உறுதியாகத் தற்காத்துக்கொண்டும், ஜனங்களின் வெறுப்புக்காளாகாமலுமிருக்கும் ராஜாவைத் தாக்குவது எளிதாகத் தோன்றாது.

ஜெர்மனியிலுள்ள நகரங்கள் பூர்ண சுதந்திரமுடையவை. சுற்றிலும் நாடுகள் ரொம்பக் கிடையா. நகரவாசிகள் தங்களுக்கிஷ்டமுள்ளபோது, சக்கரவர்த்திக்குக் கீழ்ப்படிவார்கள். சக்கரவர்த்தியிடமோ இன்னும்

அங்குள்ள வேறு அரசர்களிடமோ அவர்களுக்குப் பயங் கிடையாது. அந்நகரங்கள் பலப்படுத்தப் பட்டிருப்பதைப் பார்த்தால் அவற்றைப் பணியவைப்பது கஷ்டமானதும் சலிக்கவைப்பதுமான முயற்சி என்று தோன்றும். ஏனெனில் அந்நகரங்களிலெல்லாம் கோட்டை, கொத்தளங்கள், அகழ்கள், பீரங்கி, குதிரைப்படை முதலியவை ஏராளமாயிருப்பதுடன் ஒரு வருஷத்துக்குப் போதுமான உணவுப் பொருள்களும் விறகும் எப்போதும் கைவசம் இருக்கும். மேலும் தாழ்ந்த வகுப்போருக்கு ஒரு வருஷத்துக்கு வேலைகொடுக்கப்போதிய சாதனங்களும் இருக்கின்றன. சர்க்காருக்கும் நஷ்டமில்லாமல், நகரத்தின் ஜீவநாடிகள்போல் இயங்கும் தொழில்களிலும், ஏழை ஜனங்கள் வழக்கமாய்ச்செய்து பிழைக்கும் கைத்தொழில்களிலும் அவர்களுக்கு வேலைகொடுத்துத் திருப்திசெய்யக்கூடும். ராணுவ சம்பந்தமான தேகாப்பியாசங்கள் இன்னும் அங்கே மிக்கமதிப்பைப் பெற்றவையாயிருக்கின்றன. அந்த அப்பியாசங்களைத் தொடர்ந்து நடத்த எவ்வளவோ விதிகளும் ஏற்பாடுகளும் உள்ளன.

ஆகையால் நகரமும் வலிவுடன் இருந்து ஜனங்களாலும் துவேஷிக்கப்படாமலிருக்கும் ஒரு அரசனைத் தாக்குவது அரிது. அப்படித் தாக்கினால் எதிரி அவமானமடைந்து பின்வாங்க நேரிடும். ஏனெனில் ஒரு வருஷம் போர்வீரர்களைச் சும்மா வைத்துக்கொண்டு முற்றுகைசெய்துகொண்டிருப்பது கஷ்டம். நடுவில் எத்தனையோ விஷயங்கள் மாறக்கூடும். நகரத்துக்கு வெளியிலுள்ள தங்கள் சொத்துக்கள் நாசமாக்கப் படுவதைக் கண்டு ஜனங்கள் பொறுமை யிழந்துவிடுவார்களென்றும், நீடித்த முற்றுகையின் கஷ்டங்களும், சுயநலமும் அவர்கள் தங்கள் ராஜபக்தியை மறந்துவிடச் செய்யுமென்றும் சிலர் நினைக்கக்கூடும். ஆனால் வல்லமையும் துணிவும் வாய்ந்த ஒரு அரசன் அந்த நிலைமைக்கிடங்கொடான். சில சமயம் ஜனங்களை, அவர்களுடைய துன்பங்கள் நிலையானவையல்லவென்று நம்பிக்கை யூட்டி அவர்களை உத்சாகப்படுத்தியும், சில சமயம் பகைவனுடைய குரூரச்

செயல்களை எடுத்துக்காட்டி, அவர்களுடைய மனதில் பதியச்செய்தும், துணிச்சலாயிருப்பவர்களைச் சாதுர்யமாகக் கைக்குள் போட்டுக்கொண்டும் அரசன் அக்கஷ்டங்களைச் சமாளிக்கிறான். அதுவுமன்றி எதிரிகள் முதலிலேயே நாட்டைப் பாழ்படுத்துவதில் முனைகிறார்கள். ஜனங்கள் தற்காப்பில் ஆவலும் ஆவேசமும் கொண்டிருக்கும்போதே இதுவும் நிகழ்வதால், அரசனுக்குப் பயம்தரும் ஏதுக்கள் இன்னும் குறைந்து போகின்றன. சில நாட்களுக்குப் பின்னர் ஜனங்களுடைய ஆவேசம் அடங்கி, எதிரிகளுடைய நாசவேலைகளெல்லாம் முடிந்து, மக்கள் தீங்குகளையெல்லாம் அனுபவித்தான பிறகு, இனி அவற்றைச் சரிப்படுத்த வழியில்லை யென்பதைக் கண்டபிறகும் அவர்கள் அரசனுடன் இன்னும் அதிகமாகப் பிணைந்து நிற்கிறார்கள். அரசனுடைய பாதுகாப்பிற்காகத் தங்கள் வீடுகளை அக்கினிக்கிரையாகக் கொடுத்தும், தங்கள் சொத்துக்களைப் பறிகொடுத்தும் தியாகம் செய்தவர்களான மக்கள் தங்களிடம் ராஜா தாக்ஷண்யப்பட்டவன் என்று நினைக்கிறார்கள்.

தமக்கு நன்றி செய்தவர்களுக்குத் தாம் எவ்வாறு கடமைப்பட்டவர்களோ, அவ்வாறே தம்மிடம் உபகாரத்தைப் பெற்றவரிடத்தும் தம்மைக் கட்டுப்பட்டவராக நினைப்பது மனிதவியல்பு. ஆகையால் பகுத்தறிவுள்ள அரசன் முற்றுகையின் ஆரம்பத்திலும் சரி, முற்றுகை நிகழ்ந்துகொண்டிருக்கும்போதும் சரி, மக்களுடைய மனோதிடத்தை நிலைக்கச் செய்வதில் சிரமப்படமாட்டான். தற்காப்பிற்குரிய சௌகரியங்களும் சாதனங்களும் மட்டும் குறைவின்றி அமைந்திருக்கவேண்டும்.

## பதினோராவது அத்தியாயம்

### மத ஆதிக்கம் பெற்ற ராஜ்யங்கள்.

இப்பொழுது மதகுருக்களின் அதிகாரத்திலுள்ள ராஜ்யங்களைக் குறித்துக் கூறுவதுதான் பாக்கி இருக்கிறது. இவ்வித ராஜ்யங்களை ஜயிக்கும் வரையில்தான் கஷ்டம். திறமை அல்லது அதிர்ஷ்டத்தின் மூலம் அவை

கிடைக்கின்றன. பிற்பாடு அவ்விரண்டும் இல்லாமலே அவை நடத்தப்பெறுகின்றன. ஏனெனில் புராதனமான மதானுஷ்டானங்களால் அவை காக்கப் படுகின்றன. அந்த அனுஷ்டானங்கள் வலுவானவையாகையால் அரசன் எப்படி நடந்துகொண்டாலும் அவனுடைய அந்தஸ்தைப் பத்திரமாய்க் காக்கக்கூடியவையாயிருக்கின்றன. இவ்வரசர்களுக்கு மட்டுமே தற்காப்புச்செய்யும் பொறுப் பின்றி ராஜ்யங்கள் இருக்கின்றன. அரசாளவேண்டிய சங்கடம் இல்லாமல் பிரஜைகள் இருக்கிறார்கள். இவர்களுடைய ராஜ்யங்கள் பாதுகாக்கப்படுகிறதில்லையாகையால் ஒருவரும் அவற்றை அபகரிப்பதில்லை. மக்கள் ஆளப்படுகிறதில்லையாகையால் ஆளுகையை வெறுப்பதுமில்லை. அரசனிடமிருந்து தாங்கள் பிரிந்துபோகக் கூடுமென்கிற எண்ணமே அவர்களுக்கு உதிப்பதில்லை. பிரிந்துபோகத்தக்க சாமர்த்தியமும் அவர்களுக்குக் கிடையாது. ஆகையால் இம்மாதிரியான ராஜ்யங்கள் தாம் பத்திரமாயும் சந்தோஷமாயும் இருக்கின்றன. ஆனால் அவை மனிதனுடைய மனதுக்கெட்டாத உயர்ந்த சக்தியால் தாங்கப்படுவதால் அவற்றைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. கடவுளால் மேன்மைப் படுத்தப்பெற்று அவரால் காப்பாற்றப்படும் நாடுகளாகையால் அவற்றைக் குறித்து விவரிப்பது அதிகப் பிரசங்கித்தனமும் மூடத்தனமுமாகும். இருந்தாலும், ஆறுவது அலெக்ஸாண்டருக்கு முன்னால் பலசாலிகளான மன்னர்கள் மட்டுமல்ல, சாமான்யமான பிரபுக்கள்கூடச் சர்ச்சின் லௌகீக அந்தஸ்தைத் துச்சமென்று மதித்துவந்திருக்கையில் தற்சமயம் சர்ச் வெனிஷியர்களுக்கும் பலத்த நாசத்தை விளைவிக்கவும் பிரான்ஸ் அரசனை இத்தாலியைவிட்டே துரத்தி அவனை அச்சத்தில் வைக்கவும் வல்ல லௌகீக அதிகாரத்தை எவ்வாறு பெற்றது? இதன் காரணம் எல்லோருக்கும் தெரிந்ததுதான் என்றாலும் அதனை இவ்விடம் நினைவூட்டுவது மிகையாகாது.

பிரான்ஸ் மன்னன் சார்ல்ஸ் இத்தாலிக்கு வருவதற்கு முன்னர், இந்நாட்டில் போப், வெனிஷியர்கள்,

நேபிள்ஸ் அரசன், மிலன் டியூக், பிளாரன்டின்கள், முதலியோர் அதிகாரம் வகித்துவந்தனர். இவர்கள் இரண்டு முக்கியமான கவலைகளைப் படவேண்டியிருந்தது. அயலாரொருவனும் தன் படை பலத்தால் இத்தாலிக்குள் வந்துவிடக் கூடாதென்பது ஒன்று. இன்னொன்று ஏற்கனவே யிருக்கும் அரசாங்கங்கள் தங்கள் ராஜ்யத்தை விஸ்தரித்துக்கொள்ள இடந்தரலாகாதென்பது. முக்கியமாகப் போப்பையும் வெனிஷியர்களையும் கண்காணித்துக்கொள்ள வேண்டியிருந்தது. வெனிஷியர்களை முனை செல்லவிடாமல் அடிப்பதற்கு பெராரரவின் தற்காப்பின்போது செய்த மாதிரி மற்ற எல்லோரும் ஒன்றுசேர வேண்டுவது அவசியமாயிற்று. போப்பை அடக்குவதற்கு ரோமப் பிரபுக்களை உபயோகித்துக் கொண்டனர். இப் பிரபுக்களில் இரண்டு கட்சிகளிருந்தன. ஒன்று ஆர்ஸினிப் பிரபுவின் தலைமையிலும் மற்றொன்று கொலோனப் பிரபுவின் தலைமையிலும் இருந்தன. இவ்விரண்டு கட்சிகளும் போப்பின் கண்ணெதிரிலேயே அவனை லக்ஷியம்செய்யாமல் தங்களுக்குள் சதா சண்டையிட்டுக் கொண்டும் ஆயுதப் பிரயோகம் செய்துகொண்டும் இருந்து போப்பின் ஸ்தானத்துக்குப் பலக்குறைவையும் சஞ்சலத்தையும் விளைவித்தன. எப்போதாவது ஸிக்ஸ்டஸ் (Sextus) போன்ற திடமுள்ள போப்கள் தோன்றினாலும் அவனுடைய திறமையும் அதிர்ஷ்டமும் இத் தீமைகளினின்றும் அவர்களை விடுவிக்கத்தக்க சக்திவாய்ந்தவையாயில்லை. போப்களின் குறுகிய ஆயுட்காலம் இதற்குக் காரணமா யிருந்தது. பொதுவாக ஒரு போப் தன் பதவியில் வாழும் பத்து வருஷங்களில் இக்கட்சிகளில் ஒன்றைக்கூட அடக்க முடிகிறதில்லை. ஒரு போப் அநேகமாகக் கொலோனாவின் கட்சியை அடக்கிவிட்டானென்று வைத்துக்கொள்வோம். அவனுக்குப் பின்னால் வரும் இன்னொரு போப் ஆர்ஸினிக்கு விரோதமா யிருப்பான். அதனால் கொலோனா கட்சி மறுபடியும் துளிர்த்துக் கொள்ளும். அதை முனையுடன் கிள்ளுவதற்குப் புதிய போப்புக்குக் காலம் போதாது.

இக் காரணத்தினால் போப்பின் லௌகிக சக்திக்கு இத்தாலியில் மதிப்புக் குறைவாகவிருந்தது. இதன் பிறகுதான் ஆருவது அலெக்ஸாண்டர் வந்தான். இது காறும் பட்டத்துக்குவந்த போப்மார்களின் பணம், பலம், இவற்றைக்கொண்டு எப்படிக் காரியத்தைச் சாதிப்பது என்பதை இவனே நிதரிசனமாகக் காட்டினான். டியூக் வாலென்டினைக் கருவியாய்க்கொண்டு பிரஞ்சுப் படையெடுப்பையும் பயன்படுத்திக்கொண்டு, அவன் செய்தவற்றையெல்லாம் டியூக்கின் வரலாற்றைப் பற்றிக் கூறியவிடத்தில் விவரித்திருக்கிறேன். அவனுடைய நோக்கம் சர்ச்சை மேன்மைப் படுத்துவதல்ல, டியூக்கைச் சிறப்புறச் செய்வதுதான் என்றாலும் அவனுடைய செயல்களால் சர்ச்சின் பிரபாவந்தான் ஓங்கியது. டியூக் இறந்தபின், சர்ச்தான் அலெக்ஸாண்டருடைய உழைப்பின் நற்பயனைப் பெற்றது. பிற்பாடுவந்த ஜூலியஸ் சர்ச்சை அதிகாரமிக்கதாய்க் கண்டான். ரோமாபுரி முழுவதும் அதன் ஆதீனத்திலிருந்தது. ரோமப் பிரபுக்கள் அடக்கப்பட்டுவிட்டனர். அலெக்ஸாண்டருடைய கடுமையான நடவடிக்கைகளால் கட்சி பேதங்கள் நசித்துப் போயின. அலெக்ஸாண்டர் காலத்துக்கு முன்னால் அனுசரிக்கப்பட்டிராத வழிகளில் பணம் சேர்க்கும் விதமும் தெரிந்தது. ஜூலியஸ் இவ்வழிகளைப் பின்பற்றியது மட்டுமல்ல, அவற்றை இன்னும் அதிகரித்துக் கொண்டே போனான். பொலோஞா (Bologna) வைக்கைப்பற்றவும் வெனிஷியர்களை அடக்கவும், பிரான்ஸை இத்தாலியை விட்டுப் புறமுதுகிட்டோட்டச் செய்யவும் தீர்மானித்து, அவையனைத்தையும் நிறைவேற்றினான். அவன் செய்த ஒவ்வொரு காரியமும் சர்ச்சின் பெருமைக்காகவே செய்தானே யன்றித் தனிமனிதனின் மேன்மைக்காகவல்லவாதலின் அவன் செயல்கள் புகழுக்குரியவையாகின்றன. ஆர்ஸினியையும் கொலோனாவையும் மறுபடியும் இளம் பர்மல் பார்த்துக்கொண்டான். அக்கட்சித் தலைவர்களில் சிலர் நிலைமையை மாற்றும் சக்தியுடையவர்களாயிருந்த போதிலும், இரண்டு விஷயங்கள் அவர்களைக் கட்டுக்குள் வைத்தன. ஒன்று, சர்ச்சின் வலிமையைக் கண்டு பயம்.

இன்னொன்று கலவரம் உண்டாக்குவதற்கு அவர்களுக்குள் கார்டினல்கள் இல்லாமை. கார்டினல்களே குழப்பத்துக்குக் காரணமாயிருந்தனர். கார்டினல்கள் இருக்குமிடங்களில் அமைதி என்பதே கிடையாது. அவர்கள் ரோமிலும் வெளியிடங்களிலும் கட்சிகளைக் கிளறிவிட்டுக் கொண்டேயிருப்பார்கள். கார்டினல்களுக்குப் பரிந்து காப்பாற்றுவது பிரபுக்களுக்கு நிர்ப்பந்தமாய்ப் போகும். இவ்வாறு இம்மத குருக்களின் பேராசையால் பிரபுக்களிடையில் மனஸ்தாபமும் கலகமும் நேரிடுகின்றன. தூய்மைதங்கிய போப் பத்தாவது லியோ (Pope Leox) தற்சமயம் தன் ஸ்தானம் மிகவும் சக்தியுள்ளதாயிருப்பதைக் காண்கிறார். இந்தப் போப்களெல்லாரும் ஆயுத பலத்தினால், சர்ச்சைச் சிறப்புறச் செய்திருப்பதைக் கண்டு, அவர், தன் நற்குணத்தினாலும் எல்லையற்ற மற்ற உத்தமமான தன்மைகளாலும், சர்ச்சை மகிமையுள்ளதாயும் பக்தி சிரத்தையுடன் போற்றுதற்குரியதாகவும் செய்வார் என்று நம்பப்படுகிறது.

## பன்னிரண்டாவது அத்தியாயம்

### ராணுவத்தின் வகைகளும் கூலிக் குழைக்கும் போர்வீரர்களும்

ராஜ்யங்களின் குணகுணங்களைப் பற்றி விவரித்து அவற்றின் வெற்றி தோல்விகளைப் பற்றியும் ஒருவிதமாய்ச் சொல்லியாயிற்று. அந்த ராஜ்யங்களைப் பலர் எவ்வித முறைகளால் ஜயித்தார்கள் என்பதையும் எடுத்துக் காண்பித்தாயிற்று. அவற்றில் உபயோகிக்கக் கூடிய தற்காப்பு, ஆக்கிரமிப்பு, ஆகிய இருவகை சாதனங்களையும் பற்றிப் பொதுவாகக் கூறவேண்டியிருக்கிறது. ஒரு ராஜாவுக்கு அஸ்திவாரம் பலமாயிருக்க வேண்டுமென்பதையும் இல்லாவிட்டால் அழிவு நிச்சயமென்பதையும் கண்டோம். ராஜ்யங்கள் புதியவையானாலும், புராதனமானவையானாலும், கலப்பானவையானாலும் எவையாயினும் சரியே, அவற்றிற்கு முக்கியமான அஸ்திவாரம் நல்ல சட்டங்களும் நல்ல படைபலமுந்தான்.

நல்ல படைபலமில்லாவிட்டால், நல்ல சட்டங்கள் இருக்க முடியாது. நல்ல ஆயுதபலமிருக்குமிடத்தில் நல்ல சட்டங்கள் இருந்தே தீரவேண்டுமாகையால், இங்கே சட்டத்தைப் பற்றிக் கூறாமல் ஆயுதபலத்தைக் குறித்தே பேசுவோம்.

ஒரு அரசன் தன் பாதுகாப்பிற்காக உபயோகிக்கும் சைனியம் தன்சொந்தமானது, பிறரிடமிருந்து உதவியாகப்பெற்றது, (Auxiliaries) பணத்திற் காசைப்பட்டு ஊழியம் செய்யும் கூலிப்பட்டாளம் (Mercenaries) அல்லது இம்மூன்று வகைகளும் கலந்ததாகவிருக்கும். கூலிக்காகச் சேவை செய்யும் சேனையும், உதவிக்குப் பெற்ற படைகளும் உபயோகமற்றவையும் அபாயமானவையுமாகும். கூலிக்கு வேலைசெய்யும் போர்வீரர்களை நம்புகிறவன், தன் பதவியை நிலையென்று நினைத்துக் கொண்டிருக்க முடியாது. அவர்கள் ஒற்றுமையில்லாதவர்கள், பேராசைக்காரர்கள், ஒரு ஒழுங்கு இல்லாதவர்கள், நம்பிக்கைக்குப் பாத்திரமில்லாதவர்கள், சிநேகிதர்களிடம் துணிச்சலும் பகைவரிடம் கோழைத்தனமும் காண்பிப்பவர்கள், கடவுளிடம் பயமும் மனிதர்களிடம் விசுவாசமும் அற்றவர்கள். எதிரிகளுடைய ஆக்கிரமிப்பு ஒத்திப்போகும் வரையில் அரசனுடைய வீழ்ச்சி தள்ளிப் போகும். அரசன் சமாதான காலத்தில் கூலி வீரர்களாலும், யுத்த சமயத்தில் எதிரிகளாலும் கொள்ளையிடப் படுவான். காரணம் என்னவென்றால், ஏதோ சிறு சம்பளம் பெறுவதைத் தவிரக் கூலி வீரர்களுக்கு யுத்தத்தில் வேறொரு அக்கரையுமில்லை. அந்தச் சம்பளம் எஜமானனுக்காக உயிரைக் கொடுக்கும்படிசெய்யப் போதுமானதல்ல. யுத்தம் வராதிருக்குமட்டும் அவர்கள் அரசனிடம் வேலை செய்ய மிகவும் சம்மதமாயிருப்பார்கள். யுத்தம் வந்தால் அரசனை நிராதரவாய் விட்டுவிட்டு ஓடிப்போய் விடுவார்கள். இதை நிரூபிப்பது கஷ்டமில்லை. இத்தாலி தற்சமயம் இருக்கும் நிலைமைக்குப் பல வருஷங்களாகக் கூலிக்குமட்டுமே உழைக்கும் போர்வீரர்களை நம்பியிருந்ததுதான் காரணம். இத்தகைய சைனியங்களின் உதவி

யால் சிலர் அதிகாரத்துக்கு வந்தார்களென்பது வாஸ்தவமே. ஆனால் அந்தச் சேனைகள் தம்போன்ற மற்ற கூலிப் பட்டாளங்களுடன் போர் புரிந்தபோது தைரியத்தைக் காண்பித்தார்களே தவிர, அன்னியர் பிரவேசித்தவுடன் அவர்கள் கவைக்குதவாதவர்கள் என்பது தெரிந்துவிட்டது. இவ்வாறுதான் பிரஞ்சு அரசன் சார்லஸ் இத்தாலியை ஒரு சிறு தொந்தரவுமின்றி ஜயிக்கவிட்டு விட்டனர். இது இத்தாலியர் செய்த பாவத்தால் நேர்ந்ததென்று சிலர் சொல்கின்றனர். உண்மைதான், ஆனால் அவர்கள் நினைக்கிற பாவமன்று, நான் எடுத்துக் கூறிய பாவங்கள்தாம் காரணம். அது அரசர்கள் செய்த பாவமாகையால் அவர்களும் தண்டனையை அனுபவித்தார்கள்.

இந்தச் சைனியத்தின் குற்றங் குறைகளைப் பற்றி இன்னும் விளக்கிக் கூறுகிறேன். கூலிப்படைகளின் தலைவர்கள் மிகவும் கெட்டிக்காரர்களாயுமிருப்பார்கள், திறமையே இல்லாமலுமிருப்பார்கள். கெட்டிக்காரர்களாயிருந்தால் அவர்களை நம்பமுடியாது. அவர்கள் தங்கள் எஜமானனை அமுக்கிவிட்டோ அல்லது எஜமானனுடைய எண்ணத்துக்கு விரோதமாகப் பிறரை அடக்கியோ தாங்கள் முன்னுக்கு வரப் பார்ப்பார்கள். சாமர்த்திய மற்றவர்களாயிருந்தால், அவர்களால் அரசனுக்கு கஷ்டமுண்டாகும். "படை பலமுள்ளவரும் அப்படித்தான் செய்வார்கள், அது கூலிப் பட்டாளமாயிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி" என்று வாதிப்பவர்களுக்குப் பதில் என்னவென்றால், சைனியங்கள் அரசனையோ குடியரசையோ சேர்ந்தவையாயிருப்பதால், அரசன் தானே நேரில்போய்ச் சேனைத்தலைமை வகிக்கவேண்டும். குடியரசு, தன் மனிதர்களை அனுப்ப வேண்டும். அவ்வாறு அனுப்பப் பட்டவர்கள் தகுதியற்றவர்களென்று தெரிந்தால் அவர்களை மாற்றவேண்டும். தகுதி உள்ளவர்களாயிருந்தால், அவர்கள் எல்லை மீறிவிடாதபடிச் சட்டமூலமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அனுபவத்தின்படி பார்க்கப்போனால் முடியரசுகளும்

சானுவபலம் மிருந்த குடியரசுகளுந்தான் மிகவும் விருத்தியை அடைகின்றன. கூலிப்படைகளால் நஷ்டத்தைத் தவிர வேறொன்றும் கிடையாது. சானுவ பலமுள்ள குடியரசு தன் குடிமக்களில் ஒருவருடைய ஆட்சிக்கு எளிதில் வசப்படுகிறதில்லை. பிறநாட்டுப் பட்டாளங்களின் உதவியைக் கோரும் குடியரசு எளிதில் வணங்கி விடுகிறது.

ரோமும் ஸ்பார்த்தாவும் பல நூற்றாண்டுகள் நல்ல படை பலத்துடன் சுதந்திரமாக விருந்தன. ஸ்விஸ்கள் (Swiss) படைபலமும் ஸ்வாதீனமுடையவர்கள். பழைய காலத்தில் கூலி சைன்யத்திற்கு ஒரு உதாரணமாகக் கார்த்தஜினியர்கள் சங்கதி இருக்கிறது. ரோமர்களுடன் முதல் யுத்தம் முடிந்ததும், தங்களுடைய மனிதர்கள் தலைவர்களா யிருக்கும்போதே கார்த்தஜினியர்கள் கூலி வீரர்களால் துன்புறுத்தப் பட்டனர். எபாமினான்டஸ் (Epaminoudas) இறந்த பிறகு மாஸிடோன் நாட்டுப் பிலிப்பை (Philip of Macedon) தீபர்கள் (Thebans) தங்கள் பட்டாளத்துக்குத் தலைவனாக்கினார்கள். வெற்றி கிட்டியவுடன் பிலிப் தீபர்களுடைய சுதந்திரத்தைப் பறித்தான். டியூக் பிலிப்பின் மரணத்துக்குப் பிறகு மிலன் வாசிகள் வெனிஷியர்களை எதிர்ப்பதற்காக பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸாவைக் கூலிக்கமர்த்திக்கொண்டார்கள். அவன் காரவாக்கியோ (Caravaggio)வில் எதிரியை வென்றதும், பகைவருடன் சேர்ந்துகொண்டு தன்னைக் கூலிக்கமர்த்திக் கொண்ட மிலன் வாசிகளுக்கே தீங்கிழைத்தான். இந்த ஸ்போர்ஸாவின் தந்தை நேபிள்ஸ் ராணியிடம் ஒரு பேர்வீரனாயிருந்தவன். திடீரென்று அவளைப் படைபலமின்றித் தவிக்க விட்டு விட்டுப் போய்விட்டான். ஜியோவான்ன (Giovanna) ராணி தன் ராஜ்யத்தை இழக்காமலிருப்பதற்காக அரகான் (Aragon) அரசனிடம் அடைக்கலம் புக வேண்டியதாயிற்று. வெனிஷியர்களும் பிளாரன்டைன்களும் முன்னாட்களில் இத்தகைய வீரர்களைக் கொண்டு ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொண்டார்களென்றும், அச்

சேனைகளின் தலைவர்கள் தாங்களே அரசர்களாய்விட வேண்டுமென்று பார்க்காமல், இவர்களையே ஆதரித்தார்கள் என்றும் வாதிப்போருக்கு நான் கூறும் பதில், பிளாரன்டைன்களுக்கு இவ்விஷயத்தில் சந்தர்ப்பம் அனுகூலமாயிருந்ததென்பதுதான். அவர்கள் அஞ்சி யிருக்கக் கூடிய சில தலைவர்கள் ஜயிக்கவில்லை. சிலருக்கு எதிர்ப்பு ஏற்பட்டது. மற்றவர்களுடைய நாட்டம் வேறிடங்களில் விழுந்து விட்டது. ஜயமடையாதவர்களிலொருவன் காப்டன் ஸர் ஜான் ஹாக்வுட் (Sir John Hawkwood) என்பவன். அவன் வெற்றி பெறாததால், அவனுடைய விசுவாசத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஆனால் அவன் ஜயித்திருந்தால், பிளாரன்டின்களை ஆக்கவும் அழிக்கவும் கூடிய சக்தியைப் பெற்றிருந்திருப்பானென்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். ஸ்போர்ஸாவுக்கு எப்போதும் ப்ராக்செஸ்கி (Braccesehi) வம்சத்தார் விரோதிகளாகையால் இருதரத்தாரும் பரஸ்பரம் அடங்கி யிருக்கவேண்டியவர்களா யிருந்தார்கள். பிரான்ஸிஸ்கோ லொம்பார்டியில் ஆசை வைத்தான். பிராக்ஸியோ (Braccio) சர்ச்சையும் நேபிள்ஸையும் எதிர்ப்பதில் முனைந்தான்.

கொஞ்ச காலத்திற்குமுன் நடந்ததென்னவென்று பார்ப்போம். பிளாரன்டின்கள் பாலோ விடலியைத் தங்கள் காப்டனாக நியமித்தார்கள். அவன் சாதாரண நிலைமையிலிருந்து மிகப் பெரிய ஸ்திதிக்கு வந்த புத்திமான். அவன் பைஸா நகரத்தைப் பிடித்திருக்கும் பக்ஷத்தில், அவன் நட்பை வளர்க்க வேண்டியது பிளாரன்டின்களுக்கு அவசியமாக விருந்திருக்கும். அவன் அவர்களுடைய விரோதிகளின் பக்ஷத்திலிருந்திருந்தால் அவனை எதிர்க்க முடியாமல் போயிருக்கும். தங்கள் பக்கம் வைத்துக் கொண்டிருந்தால், தாங்கள் அவனுக்குப் பணிந்து போகவேண்டி யிருந்திருக்கும். வெனிஷியர்களோவெனில், தங்கள் சொந்த சேனைகளுடைய உதவியுடன் போர் புரிந்தபோது, உறுதியுடன் மகத்தான முன்னேற்றத்தை அடைந்தார்கள். அது அவர்

கள் தரைச் சண்டை புரியுமுன் நடந்தது. தரைச் சண்டைக்கு ஆரம்பித்த பின்னர், இக்குணத்தைக் கைவிட்டு இத்தாலிய வழக்கத்தை, அதாவது கூலிப்படைகளை உபயோகிப்பதை மேற்கொண்டனர். அவர்களுக்கு வெற்றி கிடைத்து வரும்போது, காப்டன்களிடம் அதிகமாகப் பயப்படவேண்டியிருக்கவில்லை. ஏனெனில் அவர்களுடைய ராஜ்யம் விஸ்தாரமாகவில்லை. ஆனால் கார்மக்னோலா (Carmagnola)வின் தலைமையில் நடந்தமாதிரி ராஜ்யம் பெரிதாகும்போது, அவர்களுக்கு தங்கள் தவறு விளங்கிற்று. மிலன் சிற்றரசனைத் தோற்கடித்தபின் கார்மக்னோலாவின் சக்தி அதிகரித்திருப்பதையும் அந்த யுத்தத்தில் அவன் அதிக சிரத்தை காண்பிக்காமலிருப்பதையும் அறிந்து இனி அவனால் அதிக ஒத்தாசைக்கு இடமில்லையென்று வெனிஷியர்கள் நினைத்தனர். அவனை வேலையிலிருந்து நீக்கவும் கூடவில்லை. அவனைப் போகச் செல்லிவிட்டால், ஏற்கனவே கைவசமிருப்பதையும் இழக்க வேண்டி வருமோ என்று பயமாக விருந்தது, ஆகவே அவனைக் கொல்வித்தனர். பிறகு பார்டலோமியோ டா பெர்காமோ (Bartlommeo da Bergamo) ராபர்ட்டோ டா ஸான் ஸெவரினோ (Roberts da San Severino) கௌன்ட் டி பிடிக்லியானோ (count di Pitiglia-no) முதலிய சிலர் காப்டன்களாயினர். அவர்களால் லாபமில்லா விட்டாலும் நஷ்டமாவதில்லாதிருந்தால் போதும் போலிருந்தது. அவ்வாறே பிறகு வாய்லா (Vaila)வில் எட்டு நூற்றாண்டுகளாக உழைத்து அரிதிற் பெற்றவற்றை ஒரே நாளில் இழந்தனர். இம்மாதிரி சைனியத்தால் கிடைக்கும் வெற்றிகள் தாமதமாயும் அற்பமானவையாயும் இருக்கும். நஷ்டமோ திடீரென்று அபாரமாக ஏற்படும்.

இந்த உதாரணங்கள் பலவாண்டுகளாகக் கூலிப்படைகளை உபயோகிக்கும் இத்தாலியிலிருந்து எடுக்கப்பட்டவையாகையால், இவற்றைக் குறித்து இன்னும் விவரமாய்க் கூறுகிறேன். அப்படைகளின் ஆரம்பத்

தையும் வளர்ச்சியையும் பற்றித் தெரிந்து கொண்டால் அதற்கு மாற்றுச் செய்வதெளிதாயிருக்கும்.

பிற்காலங்களில் இத்தாலியில் சாம்ராஜ்யம் மறுக்கப் பட்டும், போப்பின் சக்தி விருத்தியாகியும் வரவாரம்பித்த வுடன், இத்தாலி பலராஜ்யங்களாகப் பிரிந்து போயிற்று. சக்கரவர்த்தியின் ஆதரவுடன் தங்களை அடக்கியாளும் பிரபுக்களை எதிர்த்துப் பல நகரங்கள் கிளம்பின. சர்ச் தனது லௌகீக பலத்தைப் பெருக்கிக் கொள்வதற்காக இதற்கு ஊக்கமளித்தது. இன்னும் பல பட்டணங்களில் நகரமாந்தர்களிலொருவனே ராஜாவாய்விட்டான். இவ் வாறு இத்தாலி ஏறக் குறைய முற்றிலும் சர்ச்சின் கையிலும், இன்னும் சில குடியரசுகளினிடமுமே சிக்கிக் கொண்டது. மத குருக்களும் நகர மாந்தர்களும் ஆயுதப் பயிற்சி பெறாதவர்களாகையால், அன்னியர்களைப் பணம் கொடுத்துத் தம்மிடம் போர்வீரர்களாக அமர்த்திக் கொண்டனர். இவ்வழக்கத்தை முதல் முதல் ஆரம்பித்த வன் ரோமாஞவைச் சேர்ந்த ஆல்பெரிகோ டா கோமோ (Alberigo da como) என்பவன். தம் காலத்தில் இத்தாலி யில் இணையற்ற அதிகாரத்துடன் விளங்கிய பிராஸி யோவும் ஸ்போர்ஸாவும் அவனால் பழக்கப்பட்டவர்களிற் சிலர். இவர்களுக்கப்புறம் இதுவரை எத்தனையோ பேர் இத்தாலிய சேனைகளில் தலைமை வகித்து வந்திருக் கின்றனர். அவர்கள் காட்டிய வீரத்தின் பயனாய் இத் தாலி சார்லஸ் அரசனால் நசுக்கப்பட்டும், லூயி அரசனால் கொள்ளையிடப்பட்டும் பெராண்டோ (Ferrando) வால் கொடுங்கோன்மை செலுத்தப்பட்டும், ஸ்விஸ் ஜாதியி னரால் அவமதிக்கப்பட்டும், பேரனைத் தவிர வேறு லாபத்தைக் காணோம். அந்த வீரர்களுடைய ஏற்பாடு என்னவென்றால், காலாட்படையை அசட்டை செய்து விட்டுத் தங்கள் மதிப்பை உயர்த்திக் கொண்டார்கள்; அவர்களுக்குச் சொந்த தேசம் என்பதில்லாமல் தங்கள் சம்பாத்தியத்திலேயே பிழைக்க வேண்டியவர்களா யிருந் தனர். அவர்களுடைய தொகை அதிகமில்லாததால் காலாட்படைக்குப் பிரயோஜனமாயில்லை. பெருந்தொகை

யினரை வைத்துச் சம்ரக்ஷிக்கவும் சக்தியில்லையாகை யால், குதிரைப் படைகளையே ஏற்படுத்திக் கொண்டனர். இந்த ஏற்பாட்டால் சிறியதொகையினராகிய அவர்களுக்கு நல்ல சம்பளமும் கௌரவமும் கிடைத்தன. இருபதினாயிரம் பேரைக் கொண்ட சைனியத்தில் காலாட்களை இரண்டாயிரமாக்க் குறைத்தனர். மேலும் அச்சைனியங்களின் தலைவர்கள் — தங்களுக்கும் தங்கள் வீரர்களுக்கும் கஷ்டம், அபாயம் முதலியவை வாராமலி ருப்பதற்காகப் பல உபாயங்களைக் கையாண்டார்கள், தங்களுக்குள் விளையும் சண்டைகளில் ஒருவரையொரு வர் கொல்வதில்லை. அதற்குப் பதிலாக ஈட்டுப்பணம் (Ransom) கேட்காமல் எதிரியைச் சிறைப்பிடித்துச் செல்வது என்ற ஏற்பாட்டை வைத்துக்கொண்டிருந்தார் கள். இரவு நேரங்களில் எதிரியின் அரண்களைத் தாக்கு வதில்லை, அரண்களிலிருப்பவர்கள் இரவில் கூடாரங் களிலிருப்பவர்களை ஆக்கிரமிப்பதில்லை. அவர்கள் தங்கு மிடங்களில் சுற்றிலும் அகழ்கள் வெட்டிக் கொள்வதில்லை. மாரி காலத்தில் போர்க்களத்தை அணுகுவதுமில்லை. இதையெல்லாம் அவர்களுக்குத் தொல்லையும் ஆபத்தும் நேராதிருக்கும்பொருட்டு, அவர் களுடைய ராணுவ ரீதி அனுமதித்தது. கடைசியில் இவை இத்தாலியை அடிமை நிலைக்குக் கொண்டுவந்துவிட்டன.

## பதின்மூன்றாவது அத்தியாயம்

### உதவிப் படைகள் (Auxiliary) கலப்புப்படைகள் (Mixed) சுதேசித்துருப்புகள் (Native) இவற்றைப் பற்றியவை

ஒரு அரசன் தற்காப்பிற்காக மற்றொரு அரசனுடைய சைனியத்தின் உதவியைக் கோருவானாயின், அது உதவி சைனியம் எனப்படும். கூலிப்பட்டாளங்களைப் போலவே உதவிச் சேனையும் பயனற்றது. சமீப காலத்தில் இம்முறை ஜூலியஸால் கைக்கொள்ளப் பட்டது. பெரார் மீது படையெடுத்தபோது தன்னு- டைய கூலிச் சேனையின் படுமோசமான தோல்வியைக் கண்டு விட்டு ஸ்பெயின் அரசன் பெரான்டோவிடம்

சைனிய உதவிக்கு ஏற்பாடுசெய்து கொண்டான். தனிப் பட்ட முறையில் இப் படைகள் நல்லவையாகவே இருக்க லாம். ஆனல் அவ்வீரர்களைக் கட்டுகப் பெறுவோருக்கு ஆபத்து. அவர்கள் தோற்ருல் உதவி கோரியவனுக்குத் தோல்வி, அவர்கள் ஜயித்தால் எஜமானனே அவர் களுடைய கைதியாய் விடுகிருன். பழைய சரித்திரத்தில் இதற்குப் பல உதாரணங்களிருந்தாலும், இன்னும் நம் ஞாபகத்திலிருப்பதான போப் ஜூலியஸினுடைய திருஷ் டாந்தத்தையே கூறுகிறேன். அவன் கைக் கொண்ட முறையைவிடப் பகுத்தறிவற்ற முறையைக் காண முடி யாது. ஏனெனில் பெராராவைப் பிடிக்கப் போய் அவன் தானே அன்னியன் கையில் அகப்பட்டுக்கொண்டான். ஆனல் அதிர்ஷ்டவசமாக மூன்ருவது சங்கதி ஒன்று கிளம்பி, ஜூலியஸ் தன் செய்கையின் பலனை அனுபவிக் காமற்காப்பாற்றியது. அவனுடைய உதவிப் படைகள் ராவனு (Ravenna) வில் முறியடிக்கப் பட்டபோது அவர் களை ஜயித்தவர்களை ஸ்விஸ்கள் ஒருவரும் எதிர்பாராத விதமான விரட்டியடித்தனர். பகைவர் ஸ்விஸ்களிடம் தோற்று ஓடிப் போய் விட்டார்களாகையால் ஜூலியஸ் அவர்களாற் சிறைப்படுத்தப் படாமல் தப்பினன். பகை வரைத் துரத்தியது மூன்ருவது மனிதர்களாகையால் உதவி சைனியமும் ஜூலியஸை ஒன்றும் செய்யச் சக்தி பெற்றிருக்கவில்லை. ஆயுத பலத்தை அடியோடிழந்த பிளாரன்டின்கள் பைஸாவைத் தாக்குவதற்குப் பத்தா யிரம் பிரஞ்சு வீரரைக் கூலிக்கு அமர்த்திக்கொண்டார் கள். அதனல் அவர்களுக்கு இது காறும் நேர்ந்திராத பேராபத்து விளையவிருந்தது. கான்ஸ்டான்டிநோபின் (Constantinople) சக்கரவர்த்தி தன் அண்டையிலிருக்கும் நாடுகளை எதிர்ப்பதற்குப் பத்தாயிரம் துருக்கர்களை கிரீஸுக்குள் நுழைத்தான். யுத்தம் முடிந்த பின் அவர் கள் திரும்பிச் செல்ல மறுத்தனர். அதுவே கிரீஸ் மத விரோதிகளிடம் அடிமைப்படுவதற்கு ஏதுவாயிற்று.

ஆகவே, வெற்றியை விரும்பாதவன்தான் இத் தகைய சைனியத்தின் உதவியை நாடவேண்டும். இவர்

கள் கூலிச் சேனைகளைவிட அபாயமானவர்கள். இவர்கள் ஐக்கியமுள்ளவர்களாயும், பிறருக்கடங்கி ஒழுங்காயிருப்பவர்களாயுமிருப்பதால் இவர்களால் ஏற்படும் அழிவு பூர்ணமானது. கூலி வீரர்கள் வெற்றியடைந்த பின் தம் எஜமானனுக்குத் தீங்கு செய்வதென்றால் நாளாகும். அதற்குச் சந்தர்ப்பமும் வேண்டும். அவர்கள் ஒற்றுமையின்றி யிருப்பதாலும், அரசனிடம் சம்பளம் பெறுபவர்களாயிருப்பதாலும், அரசனால் அவர்களுக்குத் தலைவனாக நியமிக்கப்பட்ட மூன்றாவது மனிதன, அரசனைக் கெடுக்கச் செய்யப்போதுமான அவ்வளவு அதிகாரத்தை அவர்களிடம் உடனே பெற்றுவிட முடியாது. ஒரே வார்த்தையில், கூலிச் சைனியத்தினால் ஏற்படும் அபாயம் அவர்களுடைய கோழைத் தனத்திலும் போர் புரிய மனமின்மையாலும் வருகிறது. ஆனால் உதவிச் சைனித்தாலேற்படும் ஆபத்து, அவர்களுடைய தைரியத்தால் வருவது. ஆகையால் புத்திமானான ராஜா இவ்வகை ராணுவ ஒத்தாசையை நாடாமல் தன் சொந்த சேனைகளின் பலத்தையே நம்பவேண்டும். அயலார் பலத்தைக்கொண்டு ஜயிப்பதை விட சொந்த மனிதர்களுடன் தோற்பதே நல்லது. அன்னியருடைய சக்தியால் அடையும் வெற்றி உண்மையானதல்ல. இதற்கு ஸீஸர் போர்ஜியாவே தக்க சான்று. அவன் முற்றிலும் பிரஞ்சு வீரர்களே நிறைந்த உதவி சைனியத்துடன் ரோமானாவில் நுழைந்தான். இமோலா (Imola) வையும் போர்லி (Forli) யையும் கைப்பற்றினான். பிறகு அவர்களை நம்பமுடியாது போல் இருந்ததால், கூலிசைனியத்தைக் கூட்ட நினைத்தான். அவர்கள் உதவிப்படைகளைவிடச் சற்று அபாயம் குறைந்தவர்களென்று கருதி, ஆர்ஸினியையும் விடலியையும் அமைத்துக்கொண்டான். இவர்களும் நம்பிக்கைத்துரோகிகளாயும் அபாயமானவர்களாயும இருநதனராகையால், அவர்களை அடக்கிவிட்டுத் தன் சொந்த ஆட்களையே வைத்துக்கொண்டான். பிரஞ்சுக்காரரை நம்பியிருந்தபோதோ, அல்லது ஆர்ஸினியையும விடலியையும் துணைவர்களாயக் கொண்டிருந்த போதோ அவனுக்கிருந்த மதிப்புக்கும் சொந்த மனிதர்களை

மட்டுமே நம்பியிருந்தபோது அவனுக்குக் கிடைத்துகிர்த்திக்கும் எவ்வளவு வித்தியாசம்! அவனுடைய கியாதி பெருகிக்கொண்டே வந்தது. அவனுடைய சேனைக்கு அவனே தனி எஜமானன் என்று கண்ட ஒவ்வொருவரும் அவனுக்கு இதுவரை காணுத மரியாதையை அளித்தனர்.

சமீபகாலத்திய இத்தாலியின் சரித்திரத்திலிருந்து நான் வெகு தூரம் போக விரும்பவில்லை. ஆனால் ஏற்கனவே நான் குறிப்பிட்டிருக்கும் ஹிரோவைப் பற்றிச் சொல்லாமலிருக்கமுடியாது. இவன் ஸிராக்ஸர்களால் சேனைத் தலைவனுக நியமிக்கப்பட்டதும், அச்சைனியம் இத்தாலியின் கூலிப்படைகளை போலவே வகுக்கப்பட்டிருப்பதைக் கண்டான். அதை வைத்துக் கொள்வதும் அபாயம், கலைத்து விடுவதும் ஆபத்து என்று அவர்களெல்லோரையும் துண்டுதுண்டாக வெட்டிப் போட்டுவிட்டு, அது முதல் பிறர் சகாயத்தை நாடாமல் தன் சொந்தப்படைகளையே உபயோகித்துக் கொண்டான். இந்த அம்சத்தை விளக்குவதில் பைபிளில் பழைய ஏற்பாட்டில் இருக்கும் கதையை எடுத்துக் கூறலாம். பிலிஸ்திய (Philistine) வீரன் கோலியாத் Goliath) துடன் யுத்தத்துக்குப் போவதாகத் தாவிது (David) ஸாலிடம் (Saul) சென்னபோது, ஸால் அவனுக்கு உத்ஸாகமளிப்பதற்காகத் தன்னுடைய கத்திகவசங்களை அணிவித்தான். தாவீது அவற்றை அணிந்துப் பார்த்துவிட்டு அவற்றைப் போட்டுக்கொண்டு நன்ருக யுத்தம் செய்ய முடியாதென்றும், தன் சொந்தக் கத்தி கேடயங்களுடனே பகைவனைச் சந்திப்பது மேல் என்றும் கூறி மறுத்து விட்டான். சுருக்கிக் கூறுமிடத்து அயலாருடைய ஆயுதம் தவறிவிடும், கனக்கும், அல்லது இடைஞ்சல் செய்யும். பதினோராவது லூயியின் தந்தையான ஏழாவது சார்லஸ் அதிர்ஷ்ட பலத்தாலும் தைரியத்தாலும் ஆங்கிலேயரிடமிருந்து பிரான்ஸை விடுவித்த பின்னர் சொந்தப் படை பலம் அத்தியாவசியமென்பதை உணர்ந்து தன் ராஜ்யத்தில் போர் வீரர்களைத் திரட்டினன். பிறகு அவன்

மகன் லூயி காலாட்களை நீக்கிவிட்டு, ஸ்விஸ் ஜாதியினரைக் கூலிக்கமர்த்திக் கொண்டான். அந்தப் பிழை இன்னும் மற்றவர்களால் பின் பற்றப்பட்டு அந்நாட்டின் அபாயத்துக் கேதுவாயிருப்பதைக் காணலாம். ஸ்விஸ்களுக்கு அவ்வளவு கௌரவத்தைக் கொடுத்துப் பிரான்ஸ் தன் சைனியத்தின் மனவுறுதியைக் கலைத்து விட்டது. காலாட் படையோர் கலைக்கப்பட்டு விட்டது. மற்ற படைகளும் அன்னியர் உதவியைக் கோரவேண்டியிருக்கிறது. ஸ்விஸ் துருப்புகளுடன் சேர்ந்தே சண்டை செய்து பழகிப் போய் விட்டதால், ஸ்விஸ்களில்லாமல் தாங்கள் தனியே போர் புரிந்து ஜயிக்க முடியாதென்று அவர்கள் நினைக்கிறார்கள். இதிலிருந்து ஸ்விஸ்களை எதிர்க்கப் பிரான்ஸுக்குப் போதிய சக்தி கிடையாதென்றும், அவர்களுடைய துணையில்லாவிட்டால் பிறரை எதிர்க்கவும் துணியார் என்றும் ஏற்படுகிறது. பிரஞ்சு சைனியங்கள் இவ்விதம் கலப்புப் படைகளாகவிருக்கின்றன, ஒரு பகுதி சொந்தப் படைகளையும் ஒரு பகுதி கூலித்துருப்புகளையும் கொண்டவை, பூராவும் கூலி வீரர்களை, அல்லது முழுதும் துணை வீரர்களைக் கொண்ட பட்டாளங்களை விடச் சிறந்தவை. ஆனால் தேசியப் படைகளை விட வெகு மட்டமானவை.

இந்த உதாரணமே போதும். சார்லஸின் ராணுவ ஏற்பாடுகள் மட்டும் நன்றாக விருத்தி செய்யப்பட்டு பாதுகாக்கப் பட்டிருந்தால், பிரான்ஸ் ராஜ்யத்தை அசைக்க ஒருவராலும் முடியாது. ஆனால் உலக ஞானம் இல்லாதவர்கள், புதுமைகளைச் செய்யத் தொடங்கி, அவை முதலில் இத்திப்பதைக் கண்டு உள்ளேயிருக்கும் விஷயத்தை தெரிந்து கொள்ளாமல் போகிறார்கள். இதுவும் நான் ஏற்கனவே கூறிய உடலை உருக்கும் ஜ்வர நோயைப் போன்றதுதான்.

தேசத்தில் உபத்திரவங்கள் எழும்போதே அதைத் தெரிந்து கொள்ளத் தவறும் அரசன் உண்மையான அறிவாளியல்ல. வெகு சிலரே அந்த ஞானத்தைப்

பெற்றவர்களாயிருப்பார்கள். ரோம சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்கு முதல் காரணம் காத்திய (Goths)க் கூலிகளைக் கொண்டு படை திரட்டியதுதான். அது முதற் கொண்டுதான் ரோமர்களுடைய பலம் குன்றத் தொடங்கிற்று. ஸாம்ராஜ்யத்தினால் கிடைத்த சகலவிதமான பயன்களையும் காத்தியர்கள் அடைந்தனர்.

இறுதியாக, தன் சொந்தப் படைபலமில்லாவிட்டால், ஒரு அரசனும் பத்திரமாயிருக்க முடியாது. அவன் ஆபத்து காலத்தில் தற்காப்புக்குரிய சாதனங்கள் சரியாக விராமல் தன் பாக்கியத்தையேதான் நம்பிக்கொண்டிருக்க வேண்டும். தன் சொந்தக் குடிகளையும் தன்னைச் சார்ந்திருப்போரையும் கொண்டமைத்தது, சொந்தச் சைனியம் எனப்படும். மற்றவையெல்லாம் கூலிப் படைகள் அல்லது துணைப்படைகள் எனலாம். சொந்தத் துருப்புகளை ஒழுங்காக அமைக்கும் விதத்தை முன் சொல்லப்பட்ட நான்கு அரசர்களுடைய வழிகளிலிருந்து எளிதாகக் கற்றுக் கொள்ளலாம். மஹா அலெக்ஸாண்டருடைய தந்தையான பிலிப்பும் இன்னும் பல குடியரசுகளும் தங்கள் சேனைகளை எவ்வாறு வகுத்தனரென்பதும் கவனிக்கத் தக்கது. இப்படிப்பட்ட திருஷ்டாந்தங்கள் இருக்கும்போது, இதைப்பற்றி அழுத்திக் கூற வேண்டியதில்லை.

## பதினான்காவது அத்தியாயம்

### அரசனுடைய ராணுவசம்பந்தமான கடமைகள்

ஒரு அரசனுக்கு யுத்தம் அதன் ஏற்பாடுகள், கட்டுப்பாடுகள், இவற்றைத் தவிர வேறு நினைவாவது லக்ஷியமாவது இருக்கலாகாது. அதிகாரத்திலிருப்பவனுக்கு அத்தியாவசியமான கலை அது ஒன்றுதான். அரசனுக்கே பிறந்தவர்களைப் பாதுகாப்பது மட்டுமல்ல, சாதாரண நிலைமையில் இருப்பவர்களைக்கூட ராஜ பதவியை அடையும்படி செய்ய வல்ல மகிமை அதற்குண்டு. இதற்கு மாறாக, யுத்தத்தைப் பற்றி அதிகம் நினையாமல், சிலர் விநோதங்களிலேயே லயித்துப் போய்

சொகுசாயிருக்கும் ராஜா தன் ராஜ்யத்தை இழப்பது கண்கூடு. ராஜ்யங்கள் இழக்கப்படும் முக்கியமான காரணம், யுத்தக் கலையை உதாசீனம் செய்வதுதான். ராஜ்யங்களைப் பெறுவதற்கு, இக்கலையில் நிபுணத்துவம் அடைவதுதான் வழி.

சிறந்த படைபலம் பெற்றிருந்ததால், பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா சாதாரண ஸ்திதியிலிருந்து மிலன் நகரத்து டியூக் ஆனான். அவனுடைய மைந்தர்களோ போரின் கஷ்டங்களையும் களைப்பையும் தவிர்க்க விரும்பியதால் சிற்றரசர்களா யிருந்தவர்கள் சாதாரண ஸ்திதிக்கு வந்துவிட்டார்கள். ஆயுதபலம் இல்லாவிட்டால் எவ்வளவோ தீமைகள் நேருவதுடன் மன்னன் அவமதிக்கவும் படுகிறான். அவமதிக்கப் படுவது மிகவும் வெட்கக்கேடான விஷயம். ஆகையால் அரசன் அதைத் தவிர்க்க வேண்டும். இதைப்பற்றிப் பிறகு விளக்கிக் கூறுவேன். சேனா பலமுள்ளவனுக்கும் அது இல்லாதவனுக்கும் இருக்கும் வித்தியாசம் அளவற்றது. ஆயுதபலமுள்ளவன் அப் பலமில்லாதவனிடம் மனமுவந்து வணங்கி நடப்பானென்று எதிர் பார்க்க முடியாது. ஆயுதமில்லாதவன் ஆயுதபாணிகளான தன் சேவகர்கள் நடுவில் பத்திரமாயிருப்பானென்றும் நினைக்க முடியாது. ஒருவர் அலக்ஷியத்துடனும் மற்றவர் சந்தேகத்துடனும் இருப்பதால், இருவரும் சேர்ந்து ஒரு காரியம் செய்வது கஷ்டம். ஆகையால் ராணுவ அறிவில்லாத அரசன் ஏற்கனவே கூறப்பட்ட மற்ற இன்னல்களுக்குள்ளாவதுமன்றித் தன் சொந்த ஆட்சிகளின் மதிப்பைப் பெறவும், அவர்களிடம் நம்பிக்கை வைக்கவும் இயலாதவனாய் விடுவான்.

ஆதலால் அவன் யுத்தப் பயிற்சிகளைத் தவிர வேறெவ்விஷயத்திலும் மனதைச் செல்லவிடலாகாது. போர் நிகழும் சமயத்தைவிடச் சமாதான காலத்தில் அவன் அதை அதிகமாய்ப் பயிலவேண்டும். செயல் மூலமாயும் ஆராய்ச்சி மூலமாயும் பயிற்சி பெறலாம். செயல் மூலம் எப்படியென்றால், அவன் தன் மனிதர்களை

நல்ல கட்டுப்பாட்டில் வைத்துத் தேகாப்பியாசம் செய்யும்படி செய்வதுடன், தானும் இடைவிடாமல் வேட்டையில் ஈடுபடவேண்டும். இவ்வகையில் அவன் தன் சரீரத்தை வஜ்ரசரீரமாக்கிக்கொண்டு, எந்த கஷ்டத்தையும் தாங்கும் வன்மை பெறலாம். அத்துடன்கூட நாட்டின் இயல்பையும் அறிந்துகொள்ளலாம். மலைகளின் உயரம் எவ்வளவு, பள்ளத்தாக்குகள் எப்படித் திறந்த வெளியுடன் சேர்கின்றன, சம பூமிகள் எங்கிருக்கின்றன, சதுப்பு நிலங்கள் முதலியவற்றின் இயற்கை என்ன, என்பது போன்ற விஷயங்களை அவன் நேரில் கண்டு தெரிந்துகொள்ளக்கூடும். இதையெல்லாம் அவன் நன்கு கவனித்துக் கொள்ளவேண்டும். இந்த அறிவு அவனுக்கு இருவகைகளிற் பயன்படும். முதலாவது தன் நாட்டைப் பற்றிய விஷயங்களை நேரில் அறிந்து அதைப் பாதுகாக்கும் விதம் எப்படி என்று தெரிந்து கொள்ள முடிகிறது. இரண்டாவது, நாட்டின் ஒரு பகுதியிற் பெற்ற ஞானமும் அனுபவமும் அவசியம் நேரிடுங்கால் மற்ற பாகங்களைப் பற்றியும் அறிந்துகொள்ள உதவும். உதாரணமாக டஸ்கனியின் மலைகளும், பள்ளத் தாக்குகளும், சம நிலங்களும் நதிகளும், மற்ற மாகாணங்களிலிருப்பவற்றை ஏறக்குறைய ஒத்திருக்கின்றன. ஆகவே ஒரு மாகாணத்தில் பெற்ற அறிவைக் கொண்டு மற்ற மாகாணங்களின் விவரங்களையும் சுலபமாக ஊகிக்கலாம். இந்த சாமார்த்தியமில்லாதவன் தலைவனுவதற்குரிய அதிக முக்கியமான குணம் இல்லாதவனுகிறுன். ஏனெனில், பகைவனிருப்பிடத்தை அறிதல், பாளையத்தை வசதியானவிடத்தில் இறக்குதல், சேனைகளை நடத்துதல், நகரங்களை முற்றுகை யிடுதல், முதலியவற்றை வெற்றிகரமாய்ச் செய்வதற்கு இந்த அறிவு உதவுகிறது.

அக்கேயர் (Achaei) அரசனுன பிலோபோமன் (Philopoemen) எழுத்தாளர்களால் பிரமாதமாகப் புகழப்பட்டவன். அவனுடைய மற்ற கியாதிகளுக்கிடையில் சிறப்பாக, சாந்தி நிலவும் சமயத்தில்கூடப் போர் முறை

களைப் பற்றிய ஞாபகமாகவே இருந்ததற்காகக் கொண்டாடப்படுகிறான். நகரத்தின் சுற்றுப் புறங்களுக்கு நண்பர்களுடன் சென்றால், அடிக்கடி அங்கங்கே நின்று அவர்களின் எதிரி அந்த மலைமேலும் நாம் இங்கே நமது சைனியத்துடனும் இருந்தோமென்றால் யாருக்கு நல்லது? நாம் ஒழுங்கு தவறாமல் அவனை நெருங்குவது எங்ஙனம்? நாம் பின்னடைய வேண்டின் என்ன செய்ய வேண்டும்? அவன் பின்னிட்டோடினால் எப்படித் தொடர்வது? என்றெல்லாம் கேட்பது வழக்கம். நடந்து கொண்டே, ஒரு சைனியத்துக்கு ஏற்படக் கூடிய எல்லா விதமான சங்கடங்களையும் அவர்கள் முன்வைத்து அவர்கள் கூறும் அபிப்பிராயத்தைக் கேட்பான். தன் அபிப்பிராயத்தையும் சொல்வான். வாதப் பிரதிவாதங்கள் செய்வான். இப்படி இடைவிடாமல் யோசனை செய்வதால் நிஜமாகவே படைகளைச் செலுத்தும்போது, அவன் முன்னதாகவே தயாராயில்லாத ஒரு சங்கட்டமும் அவனுக்கு நேரமுடியாது.

மனதின் பயிற்சிக்காக அரசன் சரித்திரம் படித்துத் திறமை வாய்ந்த பெரியோர்களின் செயல்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். அவர்கள் யுத்தகாலத்தில் எப்படி நடந்து கொண்டார்கள் என்று பார்க்கவேண்டும். அவர்களுடைய வெற்றி தோல்விகளுடைய காரணங்களையறிந்து வெற்றி பெறும் வழியை அனுசரிக்கவும் தோல்விக்கு ஏதுவானவற்றை விலக்கவும் கற்கவேண்டும். பெரியோர்களுடைய அருஞ்செயல்களை நினைப்பில் வைத்துக் கொள்ளவேண்டும். எல்லாவற்றையும் விடப் புகழும் பிராபல்யமும் வாய்ந்தவர்களை மந்திரியாய்க்கொண்டு அவர்களை யனுசரித்தவர்களுடைய திருஷ்டாந்தத்தைப் பின்பற்றவேண்டும். மஹா அலெக்ஸாண்டர் ஆகில்ஸ் (Achilles) ஸையும், ஸீஸர், அலெக்ஸாண்டரையும், ஸிபியோ (Scipio) ஸைரஸ் (cyrus) ஸையும்போல நடக்க முயன்றதாகக் கூறுகிறார்கள். ஜெனோபன் (Xenophon) எழுதிய ஸைரஸின் வரலாற்றை வாசிப்பவர்கள் ஸிபியோ எவ்வளவு நன்றாக ஸைரஸைப்

பின்பற்றினன் என்பதை அறிவார்கள். தூய்மை, ஒத்துப்போகும் குணம், மனிதத்தன்மை, தாராள நோக்கம், முதலியவற்றில் ஸைரஸைப் போலவே ஸிபியோ விளங்கினன் என்று ஜெனேபன் எழுதியிருப்பதிலிருந்து தெரிகிறது.

புத்திமானன அரசன் சமாதான காலத்தில் சோம்பலாயில்லாமல் இம்மாதிரி முறைகளைப் பயிலவேண்டும். தான் கற்ற முறைகளை உழைத்துப் பழகிய வண்ணம் இருக்கவேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்ட சக்கரத்தின் சுழற்சியால் ஏற்படும் அதிர்ச்சிகளை எதிர்த்துக் கஷ்டங்களை அகற்றும் ஆற்றலைப் பெறலாம்.

## பதினைந்தாவது அத்தியாயம்.

### மனிதர்களுடைய, சிறப்பாக அரசர்களுடைய புகழ்ச்சி, அல்லது இகழ்ச்சிக்குரிய விஷயங்கள்

ஒரு அரசன் தன் குடிகளிடமும் நண்பர்களிடமும் நடந்துகொள்ளவேண்டிய விதிமுறைகள் என்ன என்பதைப் பற்றிக் கூறவேண்டியிருக்கிறது. இதைக் குறித்து ஏற்கனவே பலர் எழுதியிருக்கிறார்களாகையால், நான் எழுதப்புகுவது அதிகப்பிரசங்கித்தனமென்று நினைக்கப்படுமென்றஞ்சுகிறேன். மேலும் இவ்விஷயத்தில் என்னுடைய கொள்கைகள் அவர்களுடையவற்றிற்கு மாறுபட்டவை. ஆனால் விஷயங்களை மனதில் வாங்கிக் கொள்ளும் சக்தியுடையவர்களுக்கு உபயோகமான சிலவற்றைச் சொல்லவேண்டுமென்பது என் உத்தேசமாகையால், வெறும் கற்பனை உலகத்தில் சஞ்சரிக்காமல், விஷயங்களின் நிஜஸ்வரூபத்தை விளக்கிக் காட்டிவிடுவது தான் நியாயமென்று தோன்றுகிறது. பலர், உண்மையாகக் கண்டிராதவையும், இல்லாதவையுமான ராஜ்யங்களையும் குடியரசுகளையும் மனோராஜ்யத்தில் காண்கிறார்கள். நாம் வாழ்கின்ற விதத்துக்கும் வாழவேண்டிய விதத்துக்கும் சம்பந்தமேயில்லை. காரியம் ஆகவேண்டியதைப் பார்க்காமல், செய்யவேண்டிய விதிப்படி நடத்தப்

பார்க்கிறவன், தன் மேன்மைக்குப் பதிலாக அழிவுக்கு வழிதேடவே கற்றுக்கொள்வான். ஒவ்வொரு வேலையிலும் நன்மையையே கடைப்பிடிக்க விரும்புகிறவன், நல்லவர்களாயில்லாத பலர் நடுவில் நஷ்டமடைவான். ஆகையால் பத்திரமாயிருக்க விரும்பும் அரசன் நல்லவனாயிராமலிருப்பதெப்படி என்பதைக் கற்பதுமன்றி, அந்த ஞானத்தை அவசியத்துக்குத் தக்கவாறு பயன் படுத்தவும் படுத்தாமலிருக்கவும் படித்துக்கொள்ளவேண்டும்.

கற்பனை அரசர்களைக் குறிக்கும் விஷயங்களை ஒருபுறம் தள்ளிவிட்டு, நிஜமான ராஜாவைப் பற்றிப் பேசுவோம். மிக்வுன்னத ஸ்தானத்திலிருப்பவர்கள், முக்கியமாக அரசர்கள் புகழ்ச்சி அல்லது இகழ்ச்சியைத் தரும் தன்மைகளாலேயே, பிரபல்யமடைந்திருக்கிறார்கள். இங்ஙனமாக ஒருவன் உதாரகுணமுடையவன் என்றும், மற்றொருவன் கருமி என்றும் கருதப்படுகிறான். ஒருவன் கொடையாளி, மற்றொருவன் பணப்பேய்; ஒருவன் குரூரசிந்தையுடையவன், மற்றொருவன் கருணைக்கடல்; ஒருவன் பொய்யன், மற்றவன் சத்திய சந்தன்; ஒருவன் சங்கோஜி, கோழை மற்றவன் பயங்கரமும் ஆவேசமும் பொருந்தியவன்; ஒருவன் தயையே உருவெடுத்தவன், மற்றவன் திமிர்பிடித்தவன்; ஒருவன் காமி, மற்றவன் சீலமுடையவன்; ஒருவன் யதார்த்தவாதி, வெள்ளை மனதுடையவன், மற்றவன் கபடி; ஒருவன் கல் நெஞ்சன், மற்றவன் ஸரளமானவன்; ஒருவன் கம்பீரமுடையவன், மற்றவன் சில்லரை புத்தியுள்ளவன்; ஒருவன் மதவிசுவாசமுடையவன், மற்றவன் நிரீசுவரவாதி; இப்படிப் பற்பல விதமாக மதிக்கப்படுகிறார்கள். மேற்குறித்தவற்றில் நல்ல குணங்களெல்லாம் பொருந்தப் பெறுவது ராஜாவுக்குக் கீர்த்தியைக் கொடுக்குமென்று எல்லோரும் நினைக்கிறார்கள். ஆனால், எல்லா நற்குணங்களும் பொருந்தப் பெறுவதும், அவற்றை நடைமுறையில் அனுசரிப்பதும் முடியாத காரியம். மனிதனுடைய நிலைமை அதற்கிடங்கொடாது. ஆகையால் அவன் தன் பகுத்தறிவை உபயோகித்துத் தன் தீயகுணங்களைப்

பற்றி வம்புப்பேச்சுக் கிளம்பி, அதிகாரம் தன் கையை விட்டுப்போய்விடாதபடி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். விடாப் பிடியாகப் பிடித்துக்கொள்ளும் தீக்குணங்களிலிருந்து, முடிந்தால் தப்பித்துக்கொள்வது நலம். முடியாவிட்டால் அவற்றைப் பயப்படாமல் மேற்கொள்ளலாம். சில தீயகுணங்கள் ராஜ்யத்தின் பாதுகாப்புக்கு அவசியமானவையாயிருக்கும். அத்தகைய குணங்களால் வரும் வம்பையும் அபக்கியாதியையும் அரசன் காதில் போட்டுக்கொள்ளக்கூடாது. நன்ருக யோசித்துப் பார்த்தால், நாம் நல்லவையென்று நினைக்கும் சில தன்மைகள் அவற்றை அனுசரிப்போருக்கு நஷ்டத்தை உண்டாக்குகின்றன. தீயவையென மதிக்கும் குணங்களோ, ஒருவனுக்குப் பத்திரத்தையும் க்ஷேமத்தையும் தருகின்றன.

## பதினூருவது அத்தியாயம்

### உதாரகுணமும் கருமித்தனமும்

முதலில் உதாரகுணத்தையும் கருமித்தனத்தையும் எடுத்துக்கொள்வோம். தாராள மனதுடையவன் என்று சொல்லப்படுவது நல்லதுதான். ஆனால் உலகம் எதைத் தாராளம் என்று கருதுகிறதோ, அம்மாதிரி தாராளகுணம் மனிதனுக்கு ஹானியைக் கொடுக்கும். விதிப்படி அக்குணத்தை அனுசரித்தால், ஒருவன் செய்யும் தர்மம் வெளியில் தெரியாது. தர்மம் செய்கிறவனுக்கு அதற்கெதிரிடையான குணத்தையே கற்பித்து மக்கள் இகழ்வார்கள். கொடையாளி என்று கொண்டாடப்பட விரும்புகிறவன், தன் கொடையை வெளிப்படையாக, டம்பமாகக் காண்பிக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் இக்குணமுடைய அரசன் தனக்குக் கியாதி கிடைப்பதற்காகத் தன்வசமுள்ள பொருளையெல்லாம் விரயமாக்க நேரிடும். கடைசியில் தர்மசாலியென்ற பெயரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஜனங்கள்மீது பளுவான வரிகளைச் சுமத்தவும், பணம் கிடைப்பதற்காக எதுவேண்டுமானாலும் செய்யவும் வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். இதனால் ஜனங்கள் அவனை வெறுக்கவாரம்

பிப்பார்கள். அவனுடைய உதாரகுணத்தால் பலருக்குத் தீங்கும் சிலருக்கே நன்மையும் கிடைத்திருப்பதால், அரசனுடைய கைப்பணமெல்லாம் செலவழிந்தபிறகு அவனை ஒருவரும் மதிக்கமாட்டார்கள். முதலில் தேசத்தில் சிறு தொந்தரவுகள் நேரவாரம்பித்து, பிறகு ஒவ்வொரு சமாசாரமும் அரசனுக்கு ஆபத்தில் வந்துமுடியும். அரசன் இதையறிந்து தன் போக்கை மாற்றிக் கொள்ளப் பார்ப்பானாயின், கஞ்சன் என்ற பெயர் வந்து சேரும்.

உதாரகுணத்தை இரகசியமாக அனுஷ்டித்துப் பயனில்லை என்று கூறினேன். பகிரங்கமாக அனுசரித்தாலும் அபாயமாகவிருக்கிறது. ஆகையால் அரசன் புத்திசாலியாயிருந்தால், கிருபணன் என்று சொல்லப்படுவதை ஆக்ஷேபிக்கக்கூடாது. நாளடைவில், அவன் செட்டாயிருப்பதால் ராஜ்யத்திலிருந்து சாதாரணமாய்க் கிடைக்கும் வரிப்பணம் செலவுக்குப் போதுமானதாயிருப்பதையும், தன்னைத் தாக்குவோரைத் தடுக்கும் வல்லமை பெற்றவனாயிருத்தலையும், ஜனங்கள் தலையில் மேன்மேலும் வரிகளைச் சுமத்தாமலே பிறநாடுகளில் படையெடுப்புகளை நடத்தும் சாமர்த்தியமுடையவனாயிருப்பதையும் பார்க்கும்போது, ஜனங்கள் அவனைத் தாராள மனப்பாங்குடையவன் என்று சொல்லத் தொடங்குவார்கள். ஏனெனில் அவன் எண்ணற்றவர்களுக்கு, அவர்களுடைப் பணத்தை வரியின் பெயரால் அபகரிக்காமலிருப்பதால் தாராள மனதுடையவனாகத் தோற்றுவான். மிகச் சிலர், தங்களுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை யென்பதால் அவனைக் கருமி என்று ஏசுவார்கள். நம் காலத்தில் கஞ்சன் என்று சொல்லப்படுகிறவர்களைத் தவிர வேறுயாரும் பெரிய காரியங்களைச் சாதித்திருக்கக்காணோம். மற்றவர்கள் நஷ்டந்தான் அடைந்திருக்கிறார்கள். இரண்டாவது ஜூலியஸ் போப் ஸ்தானத்துக்கு வருவதற்காக உதாரகுணத்தை உபயோகித்துக் கொண்டானாலும், பிறகு யுத்தத்தில் ஈடுபட விரும்பியதால், அந்தக்கியாதியை நிலைநாட்டிக் கொள்ள

தில் அக்கரைகொள்ளவில்லை. பிரான்ஸின் தற்போதைய மன்னன் புதியவரி ஒன்றும் போடாமலேயே பல யுத்தங்களை நடத்தியிருக்கிறான். அவன் இதுகாறும் செட்டாயிருந்ததன் மூலம் அவனுடைய அதிகப்படி செலவுகள் சரிப்படுத்தப்பட்டன. ஸ்பெயினை இப்போது ஆளும் அரசன் தாராளமான்வனென மதிக்கப்படுகிறவனாயிருந்தால், இவ்வளவு யுத்தங்களை ஆரம்பித்து வெற்றியடைந்திருக்கமுடியாது.

இக்காரணங்கள் பற்றி, அதாவது தன் ஜனங்களைக் கொள்ளையடிக்காதிருக்க விரும்பினால், தன்னைப் பாதுகாத்துக்கொள்ளவேண்டுமானால், ஏழ்மையையும் அவமதிப்பையும் தவிர்க்கவிரும்பினால், பணப்பேராசையுடையவனாகும்படியான கட்டாயம் ஏற்படக்கூடாதென்றால், அரசன் தன்னை யாரும் கஞ்சன் என்று சொல்வதைப் பற்றிக் கவலைப்படலாகாது. இக்குணம் அவனுடைய அரசாட்சிக்குத் துணைபுரியும் இக்குணங்களில் ஒன்று. ஸீஸர் தாராளசிந்தையால் சாம்ராஜ்யத்தைப் பெற்றான். இன்னும் பலர் தாராளமாயிருப்பதாலோ, அல்லது அவ்வாறு நினைக்கப்படுதலாலோ பெரிய ஸ்தானங்களுக்கு வந்தார்கள் என்று சிலர் வாதாடலாம். ஏற்கனவே ராஜாவாயிருப்பவனுக்கு உதாரகுணம் உதவாதே தவிர ராஜபதவியை அடையும் பாதையிலிருப்பவனுக்குத் தர்மசீலனென்று பெயரெடுக்கவேண்டியது அவசியம். ரோமில் அதிகாரம் செலுத்த இச்சித்தவர்களில் ஸீஸர் ஒருவன். ஆனால், அவன் அந்த அதிகாரத்தைப் பெற்றபிறகு, உயிருடனிருந்திருந்து தன் செலவுகளைக் குறைத்துக் கொள்ளாமலிருந்தால், சாம்ராஜ்யமே அழிந்துபோயிருக்கும். இன்னும், சைனியபலத்தைக்கொண்டு பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிற அநேக அரசர்கள் உதாரகுண சீலர்களென்று புகழப்பட்டிருக்கிறார்களென்றும் சிலர் நினைக்கலாம். ராஜாவானவன், தன் சொத்து, குடிகளுடைய சொத்து, அல்லது அன்னியருடைய பணத்தைச் செலவு செய்வான். சொந்தப் பணமானால் செட்டாகச் செலவிடவேண்டும்.

மற்றவையானல் மிகவும் தாராளமாயிருக்கத் தவறக்கூடாது. கொள்ளை யடித்துக்கொண்டும், அயலான் பணத்தைக் கையாண்டுகொண்டும் படைகளுடன் முன்னேறிக் கொண்டும் இருக்கும் அரசன் கட்டாயம் தாராளமாகத்தான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் போர் வீரர்கள் அவனைப் பின் தொடரமாட்டார்கள். ஸைரஸ், ஸீஸர், அலெக்ஸாண்டர், முதலியவர்களைப் போல் மற்றவர்களுடைய பணத்தை மிகவும் தாராளமாக வாரியிறைக்கலாம். பிறர் பணத்தை விரயம் செய்வதால் அவன் மதிப்புக் குறைவதற்குப் பதிலாக மேம்படும். சொந்த சொத்து செலவழிந்தால் தான் கஷ்டம். தர்மகுணத்தைப் போல் தன்னைத்தானே அழித்துக் கொள்ளும் தன்மை வேறெதற்குமில்லை. ஏனென்றால், மேன்மேலும் தாராளமாயிருந்தால், அத்தன்மையை உபயோகிக்கும் சக்தி குறைந்த போகிறது. ஜனங்கள் அவனை ஏழை யென்று அலக்ஷியம் செய்து அருவருக்கிருர்கள். தரித்திரத்திலிருந்து தப்ப விரும்பினலோ பணப் பிசாசு என்று தூற்றுகிருர்கள். ஜனங்களுடைய பகைமையும் வெறுப்பும் மிகவும் ஜாக்கிரதையுடன் தவிர்க்கப் படவேண்டியவை. தாராள சிந்தையானது அரசனை இவ்விரண்டிலொன்றில் கொண்டு போய்விடும். ஆகையால் கிருபணன் என்று பெயர் வாங்கி, வெறும் அவமதிப்பை மட்டும் பெறுவது, பணப் பேயெனப் பெயரெடுத்து அவமதிப்பு, பகைமை, இரண்டையும் அடைவதை விட எவ்வளவோ மேலானது.

## பதினேழாவது அத்தியாயம

### குரூரமும் கருணையும்: அன்பு பெறுதலும் அஞ்சப்படுதலும்

அரசன் கருணை நிதி என்று சொல்லப்படவேண்டுமேயன்றிக் குரூரசித்த முடையவன் என்று பெயர் வர இடந்தரலாகாது. ஆனல் அவன் தன் கருணையைத் துர் விநியோகம் செய்யாமலிருக்கவேண்டும். ஸீஸர் போர்ஜியா குரூர மானவனென்று கருதப்பட்டான்: ஆனல்

அவனுடைய அந்தக் குணம் ரோமானாவில் ஒழுங்கு, ஒற்றுமை, அமைதி, விசுவாசம், முதலியவற்றை நிலவச் செய்தது. நன்றாக யோசிக்கும்படித்துக் குரூர நெஞ்சனென்ற நிந்தையைத் தவிர்ப்பதற்காகப் பிஸ்டோயா (Pistoia) வை நாசமாக்கவிட்டு விட்ட பிளாரன்டின்களை விட, ஸீஸர் போர்ஜியா எவ்வளவோ தயையுடையவன் என்று ஏற்படும். ஆகவே ஒரு ராஜா தன் குடிகளை ஒற்றுமையுடனும் உண்மையுடனும் இருக்கச் செய்வதன் பொருட்டுத்தான் குரூரமானவன் என்ற வசைச்சொல்லை ஏற்கத்தயங்லாகாது. சில உதாரணங்களின் படி பார்க்கப் போனால், அதிகமான இளகிய தன்மையினால் ஒழுங்கீனங்களை வளர விட்டு அதிலிருந்து இரத்தக்களறி, கொள்ளை, போன்ற கொடுமைகளை நிகழவிட்டு விடுகிறவர்களை விட அவனே அதிகக் கருணையுடையவன். ஏனெனில் கொள்ளை முதலிய கொடுமைகள் ஜனசமூகத்துக்கே பாதகம் விளைப்பவை. அரசன் அளிக்கும் மரண தண்டனைகள் தனி மனிதர்களைத்தான் பாதிப்பவை. ஒரு புதிய அரசன் குரூரநெஞ்சனென்ற அபக்கியாதியினின்றும் தப்புவதரிது. புதிய ராஜ்யங்கள் ஆபத்துக்கள் நிறைந்தவை. அதனால்தான் வர்ஜில் (Virgil) டிடோ (Dido) வாயிலாகக் கூறுகிறான் :

Res dura, et regni novritas me talia, Cogunt
Molri, et late fines custode theri

அரசன் பிறரை நம்புவதிலும், தான் நடந்து கொள்வதிலும் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். தன் நிழலைக் கண்டே அஞ்சக் கூடாது. பகுத்தறிவுடனும், மனுஷ்யத் தன்மையுடனும் நிதானமாய் முன் செல்லவேண்டும். அதிகத் தன்னம்பிக்கையினால் ஜாக்கிரதையையும் அவநம்பிக்கை மேலீட்டால் பொறுமையையும் இழக்காமலிருப்பதற்கு அது தான் வழி.

இதிலிருந்து ஒரு அரசன் தன் குடிகளுடைய அன்பைப் பெறுதல் நல்லதா அல்லது அவர்களால் அஞ்சக்

கூடியவனு யிருப்பது சிறந்ததா என்ற கேள்வி எழுகின்றது. இதற்குப் பதில் அன்பு, அச்சம், இரண்டும் இருக்க வேண்டியதுதான் என்பதே யாகும். ஆனால் அவையிரண்டும் சேர்ந்திருப்பதரிது. இரண்டிலொன்றுதான் கிடைக்குமென்றால், அன்பைவிட அச்சந்தான் பத்திரமுடையது. ஏனெனில் மனிதர்கள் பொதுவாக நன்றியற்றவர்கள், வாய்ப் பேச்சு வீரர்கள், கபடிகள், ஆபத்தில் மாட்டிக்கொள்ள விரும்பாதவர்கள், பேராசைக்காரர்கள், என்றெல்லாம் சொல்லப்படுகிறார்கள். தங்களுக்கு நன்மை கிடைத்துக் கொண்டிருக்கும் வரையில் நன்றி செய்கிறவனுக்கு அவர்கள் சொந்தம். தங்கள் உடல், பொருள், ஆவி, சுதந்திரம், மக்கள் யாவற்றையும் அவனுக்காகத் தியாகம் செய்வதாகக் கூறுவார்கள். தியாகம் செய்யவேண்டிய அவசியம் மாத்திரம் வெகு தூரத்திலிருக்க வேண்டும். அந்த அவசியம் நேர்ந்து விட்டால், கலகத்துக்கு ஆரம்பிப்பார்கள். அவர்கள் சொல்லையே நம்பி முன்னேற்பாடுகள் வேறெதுவும் செய்யாமலிருந்தால், அரசன் அழிந்து போகவேண்டியது தான். பெருந்தன்மையால் அடையப் பெறாமல், தான் தானம் செய்வதால் கிட்டும் நட்பு வேண்டிப் பெற்றதல்ல, விலைக்கு வாங்கப்பட்டது தான். ஒரு அற்பச்சாக்குக் கூட அந்நட்பை அவனுக்கு தவறாமற் செய்து விடும். மனிதன் தன் அன்புக்குரியவனாக நடந்து கொள்ளும் ஒருவனை மனஸ்தாபப் படுத்த அவ்வளவாய்த் தயங்க மாட்டான். ஆனால் அச்சுறுத்தக் கூடியவனைப் பகைத்துக் கொள்ளப் பயப்படுவான். அன்பானது சங்கிலி போன்ற தொடர்ச்சியான பல உபகாரங்களினால் இயங்குகிறது. மனிதன் சுய நலக்காரனாகையால், தனக்குக் காரியம் ஆகவேண்டியிருக்கும் போது அந்தச் சங்கிலியை அறுத்தெறிந்து விடுவான். ஆனால் அச்சமோ, தண்டனை என்ற கிலியினால் பாதுகாக்கப் படுகிறது. அந்தப் பயம் விடுவதேயில்லை.

அரசன் அஞ்சக் கூடிய தன்மை யுடையவனா யிருப்பது அவசியந்தான் எனினும் ஜனங்களுடைய

அன்பு இல்லாவிட்டாலும் அவர்களுக்கு வெறுப்புண்டாகாத விதமாய் அவர்களுடைய அச்சத்தைப் பெற வேண்டும். அச்சமும் வெறுப்பின்மையும் ஒன்றாயிருக்க முடியும். ஜனங்களுடைய ஆஸ்தி விஷயத்திலும் ஸ்திரீகள் விஷயத்திலும் தலையிடாமலிருப்பவன் எப்போதும் அச்சத்தையும் துவேஷமின்மையையும் பெறக் கூடும். எவனுடைய உயிரையாவது அரசன் கொள்ள நினைத்தால் அதற்கு ஏதாவது நியாயமும் காரணமும் காட்டிவிட வேண்டும். ஆனால் பிறர் சொத்தில் மட்டும் கை வைக்கவே கூடாது. மக்கள் தங்கள் சொத்தை உயிரைக் காட்டிலும் அதிகமாக மதிக்கிறார்கள். அவர்கள் தங்கள் பிதாவின் மரணத்தைக் கூட மறந்து விடுவார்கள். ஆனால் அவர்களால் பிதுரார்ஜிதத்தை இழப்பதை மறக்கமுடியாது. ஆஸ்திகளைப் பிடுங்குவதற்குக் காரணங்கள் ஏராளமாக அகப்பட்டுக் கொண்டே இருக்கும். கொள்ளையடித்து லாபம் பெற விரும்புவோருக்கு அயலார் சொத்தை அபகரிப்பதற்கு ஏதாவது சாக்குக் கிடைத்தபடி யிருக்கும். உயிரைப் போக்குவதற்குக் காரணங்கள் அபூர்வமாய்க் கிடைப்பது மன்றி அவை எளிதில் மறைந்து போகும்.

ராஜா தன் பட்டாளத்தில் கணக்கற்ற போர் வீரர்களைத் தன் கட்டுக்குள் அடக்கிவைக்க வேண்டியிருக்கிற சமயத்தில், தன் குரூரத் தன்மையை வெளிக் காட்டத் தயங்கக் கூடாது. பொல்லாதவன் என்ற பேர் இல்லாவிட்டால், அத்தனை சிப்பாய்களை அடக்கியாண்டு அவர்கள் ஒற்றுமையுடன் தங்கள் கடமைகளைக் கவனிக்கும்படி செய்வது கஷ்டம். ஹான்னிபால் (Hannibal) லிடம் பல ஜாதியினரைக் கொண்ட பிரும்மாண்டமான சைனியம் இருந்தது. வெளி நாடுகளிற் சென்று யுத்தம் புரிந்தது; என்றாலும் போர் வீரர்கள் தங்களுக்குள் ஒரு போதும் ஒற்றுமை யிழக்கவேயில்லை. அரசனிடமும் ஒரு விதமான மன வேற்றுமையும் கொள்ளவில்லை. நல்ல காலத்திலும் கெட்ட காலத்திலும் ஒரே மாதிரியாக் ஐக்கியத்துடனும் அரசனிடம் விசுவாசத்துடனும் நடந்து

கொண்டார்கள். இதற்கு அவனுடைய மிருகத்தனமான குரூரகுணம் தவிர வேறொரு காரணமும் இருக்கமுடியாது. பல சிறந்த குணங்களுடன் கடுஞ் சித்தமும் கொண்டிருந்ததால்தான், சிப்பாய்கள் அவனை வணக்கத்துடனும் அச்சத்துடனும் நோக்கினர். மற்றக் குணங்கள் மட்டும் அந்தப் பலனை யளிக்கப் போதுமானவையாயிருந்திரா. இது ஹானிபால் செய்த பிரக்யாதி பெற்ற செயல்களிலொன்றாகக் கருதப்படுகிறது. அவனைப் பற்றி எழுதியவர்கள் யோசனையின்றி அவனுடைய அருஞ் செயல்களை ஒரு பக்கம் கொண்டாடி விட்டு மற்றொரு பக்கம் அவ்வருஞ் செயலுக்கு ஆதாரமான தன்மையைப் பற்றிக் குறை கூறுகிறார்கள்.

மற்ற குணங்கள் மட்டும் பிரயோஜனப்படா என்பதற்கு, ஸிபியோவின் திருஷ்டாந்தம் இருக்கிறது. (அவன் காலத்துக்கு மட்டுமல்ல, நமது ஞாபகத்துக்குப் பட்ட எல்லா சமயங்களுக்கும் அவ்வுதாரணம் ஏற்றது) அவன் தன் போர் வீரர்களிடம் அளவுக்கு மீறிய அன்பு காட்டி, ராணுவ விதிகளுக்கு மிஞ்சின சுயேச்சையை அளித்ததால், அவனுடைய பட்டாளங்கள் ஸ்பெயினில் அவனையே எதிர்த்துக் கொண்டு கலகம் செய்தன. ஸெனேட்டில் பேபியஸ் மாக்ஸிமஸ் (Fabius Maximus) அவனை ரோம ராணுவத்தைக் கெடுத்தவன் என்று நிந்தித்தான். லாக்ரி (Locri) நகரத்தை ஸிபியோவின் உத்தியோகஸ்தர்களிலொருவன் பாழ்படுத்திவிட்டான். அதற்கு அந்த உத்தியோகஸ்தன் ஒரு தண்டனையும் அடையவில்லை. இதற்குக் காரணம் ஸிபியோவின் இளகிய மனந்தான். ஸெனேட்டில் ஸிபியோவுக்குப் பரிந்து பேசிய ஒருவன் "அநேகம் பேர்களுக்கு, தாம் தவறிழைக்காமலிருக்கத்தான் தெரியும். பிறருடைய தவறைத் திருத்தத் தெரியாது என்றான். ஸிபியோ சாம்ராஜ்யத்தினுடைய அதிகாரத்தின் கீழிருந்து இந்த மனப்பான்மையை வைத்துக் கொண்டிருந்தால், அவனுடைய கியாதிக்குக் களங்க முண்டாயிருந்திருக்கும். ஸெனேட்டின் கீழிருந்ததால், இந்தத் தீங்கு தரும் குணம்

மறைக்கப் பட்டதுமன்றி, அது அவனுக்கு ஒரு கீர்த்தியாயும் மாறியது.

முடிவாக, அச்சம், அன்பு இவற்றைப் பற்றி யோசித்தால், மனிதர்கள் தாங்களாக இஷ்டப்பட்டு அன்பு பாராட்டுகிறார்கள். அரசனுடைய இஷ்டப்படி பயப்படுகிறார்கள். புத்திமானான அரசன் தன் சக்தியால் செய்யக் கூடியதைச் செய்யவேண்டுமே தவிர, பிறருடைய இஷ்டத்துக்குள் இருப்பதை நம்பிக் கொண்டிருக்கக் கூடாது. ஏற்கனவே எடுத்துக் கூறப்பட்டபடி ஜனங்களுடைய துவேஷத்தை மட்டும் தவிர்த்துக் கொள்ள வேண்டும் என்று ஏற்படுகிறது.

## பதினெட்டாவது அத்தியாயம்

### அரசன் நம்பிக்கைக்குரியவனாக இருக்கும் வழி.

ராஜாவானவன் கள்ளங்கபடமின்றி வெள்ளை நெஞ்சம் படைத்தவனாய், நம்பிக்கைக்குரியவனாயிருப்பது எவ்வளவு மெச்சத்தகுந்த விஷயம் என்பது எல்லாரும் அறிந்ததுதான். ஆயினும் நம் நாட்களில் அநுபவத்தின்படி பார்ப்போமாயின் உண்மையுடைமைக்கு அவ்வளவாய்க் கவலைப்படாமல் கபடத்தால் மக்கள் மனதைக் கலக்கவல்லவர்களே அரிய காரியங்களைச் செய்து முடித்திருக்கிறார்களென்றும் விசுவாசத்தை அடிப்படையான கொள்கையாய்க் கொண்டவர்களை அவர்கள் ஜயித்திருக்கிறார்களென்றும் தெரியவரும்.

போரில் இருவகை உண்டு. ஒன்று தர்ம நியாயத்துக் கிணங்கியது. மற்றது பலாத்கார முறை. முதல் முறை மனிதர்களுக்குரியது, இரண்டாவது மிருகங்களுடையது. முதல் முறை அடிக்கடி போதிய பலனை அளிக்காமற் போவதால், இரண்டாம் வழியை மேற்கொள்ள வேண்டி வருகிறது. ஆகவே ஒரு ராஜா மிருகத்தின் வழி, மனிதனுடைய வழி இரண்டையும் உபயோகிக்கத் தெரிந்து கொள்வது அவசியமாக விருக்கின்றது. பழைய கிரந்தகர்த்தாக்கள் இதை மறைமுகமாக, அரசர்

களுக்குக் கற்பித்தார்கள். ஆகிலஸும் இன்னும் பலரும் சிரான் (Chiron) என்னும் குதிரை முகமும மனிதவுடலும் உடைய மனித மிருகத்திடம் ஒப்புவிக்கப்பட்டு அதன் கட்டுக்குட்பட்டுக் கல்வி பயின்று வந்தார்களென்று அவர்கள் எழுதியிருக்கிறார்கள். இந்த மனித மிருகத்தின் கதை ஒரு அரசன் இவ் விருவியல்புகளையும் உபயோகிக்கத் தெரிந்தவனாயிருக்கவேண்டு மென்பதையும், ஒன்றில்லாவிட்டால் ஒன்று நிலைக்காது என்பதையும் குறிப்பாகக் காட்டுகிறது.

இவ்விதம் மிருகங்களைப்போல் நடக்கத் தெரிந்து கொள்ளவேண்டியிருப்பதால், அரசன் நரியையும் சிங்கத்தையும் பின்பற்றவேண்டும். சிங்கத்துக்குப் பொறியி லிருந்து தப்பித்துக்கொள்ளத் தெரியாது. நரிக்கு ஓநாயிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ளத் தெரியாது. அரசன் பொறிகளை அறிந்துகொள்ள நரியாகவும், ஓநாய்களைப் பயமுறுத்துவதற்குச் சிங்கமாயும் இருக்கவேண்டும். சிங்கமாக மட்டும் இருக்க விரும்புவோர், இதை அறிகிறதில்லை. ஆகையால் புத்திமானான அரசன் உண்மையுடைமையால் தன் நலம் கெடும் போலிருந்தால் உண்மை யுடையவனாக இருக்கக்கூடாது. விசுவாசத்தை எந்தக் காரணத்துக்காக கைக்கொண்டானோ அந்தக் காரணங்கள் இனி இல்லாவிட்டால், விசுவாசத்தைக் கைவிட்டுவிடவேண்டும. நமபிக்கையாக நடக்கவேண்டிய தில்லை. மனிதர்களெல்லாரும் நல்லவர்களா யிருந்தால் இந்த உபதேசம நல்லதல்லதான; ஆனால் அவர்கள் கெட்டவர்களாயும் விசுவாசமற்றவர்களாயு மிருப்பதால் அவர்களிடம் நம்பிக்கைக்குரியவனாக இருக்க வேண்டிய கட்டாயமில்லை. தன் வாக்குறுதியை நிறைவேற்றாமலிருப்பதற்குச் சாக்குச் சொல்ல விரும்பும அரசனுக்கு, சட்ட பூர்வமான காரணங்கள் கிடைக்கத் தவறியதில்லை. இதற்குச் சமீபகாலத்துத் திருஷ்டாந்தங்கள் எவ்வளவோ இருக்கின்றன. நம்பிக்கைக்குப் பாத்திரமில்லாத மன்னர்களால் சமாதான உடன்படிக்கைகள் எவ்வளவோ தரம் மீறப்பட்டன, எவ்வளவு வாக்

குறுதிகள் அர்த்தமற்றுப் போயின என்பதையும், நரி யைப் போன்றவர்களே எடுத்த காரியத்தை முடிக்கும் ஆற்றலுடையவர்களா யிருந்திருப்பதையும் நிரூபிக் கலாம். இந்தக் குணத்தை நன்முக மறைக்கும் சாமர்த் தியம் மட்டும் கட்டாயம் வேண்டும். பாசாங்கும் கபடமும் அவசியம் வேண்டும். மனிதர்கள் சூது வாது தெரி யாமல் தற்காலத்துத் தேவைகள் கிடைத்தால் போது மென்ற மனவியல்புள்ளவர்களா யிருப்பதால், எதையும நம்பி விடுகிறார்கள். ஏமாற்ற விரும்புவோருக்கு எப் போதும் ஏமாந்தவர்கள் கிடைப்பார்கள்.

தற்காலத்திய திருஷ்டாந்தம் ஒன்றுமட்டும் கூறு கிறேன். ஆறுவது அலெக்ஸாண்டர் மக்களை ஏமாற்று வதும், ஏமாற்றும் சந்தர்ப்பத்தைத் தேடுவதும், இதுவே வேலையாக விருந்தான். வாக்குறுதிகளைத் தாராளமாக வாரி வீசுவதிலும், தன் பேச்சை உறுதிசெய்ய சத்தியம செய்வதிலும் அவனை விடச் சூரன் கிடையாது, அவற்றை அவனைப்போல் அசட்டை செய்தவனும் கிடை யாது. ஏமாற்றும் கலையில் பண்டிதனுகையால் அவ னுடைய ஏமாற்றுதல் எப்போதும் பலனளித்து வந்தது.

ஆதலால் ஒரு அரசனுக்கு நான் குறிப்பிட்ட நல்ல குணங்களெல்லாம இருக்கவேண்டிய அவசியமில்லை. ஆனல் இருப்பது போன்ற பாவனை மிக அவசியம, அந்தக் குணங்கள் நிஜமாகவே இருந்து அவற்றின படியே எப்போதும் நடப்பது அபாயமென்றுகூட நான் கூறத் துணிவேன. ஆனல் அவை இருப்பதுபோன்ற தோற்றம் உபயோகமானது. கருணையுடையவனுயும், விசு வாச பாத்திரனுயும், தயாசீலனுயும், கபடமில்லாதவனுக வும மத விசுவாசமுள்ளவனுயும காட்டிக் கொளவதும உண்மையாகவே அப்படி யிருப்பதும் நல்லதுதான். ஆனல் அவசியமானபோது நேர்மாருன குணங்களை மேற கொள்ளும் மனவியல்பு இருக்கவேண்டும். ஒரு அரசன், சிறப்பாகப் புதிய அரசன், நல்ல குணங்களெல்லாவற்றை யும அனுசரிப்பதென்பது முடியாத காரியம். தன் ராஜ

யத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவன் அடிக்கடி நம்பிக்கை, தர்மம், மனிதத் தன்மை, மதம் முதலியவற்றிற்கு விரோதமாக நடக்க நேரிடும். ஆகவே அவனுக்குச் சமயோசிதமாய் அதிர்ஷ்ட சக்கரத்தின் சுழற்சிக்கு ஏற்றவாறு நடந்துகொள்ளும் மனப்பான்மை வேண்டும். முடியுமானால் நேரான மார்க்கத்திலேயே செல்லலாம். கட்டாய மேற்பட்டால், சந்துபொந்துகள் மூலமாயும் போகத் தெரியவேண்டும். தீமை இழைக்கவும் தயாராயிருக்கவேண்டும்.

ஒரு அரசன் மேற்சொன்ன ஐந்து குணங்களும் பொருந்தியிராத ஒரு வார்த்தைகூடத் தன் வாயினின்றும் வெளிவராமற் காக்கவேண்டும். அவனைப் பார்ப்பவர்க்கும் கேட்பவர்க்கும் அவன் கருணை, விசுவாசம், தயை, கபடமின்மை, பக்தி, முதலியவையே உருவெடுத்தாற்போல் தென்படவேண்டும். இதைவிட முக்கியமானது வேறொன்றுமில்லை. ஏனெனில் கையால் ஸ்பரிசிப்பதைவிடக் கண்ணால் பார்ப்பதைக் கொண்டுதான் மனிதர்களுடைய தன்மை நிதானிக்கப் படுகிறது. கண்ணாற் பார்ப்பது எல்லோராலும் கூடும். ஸ்பரிசிப்பது வெகு சிலருக்கே முடியும். அரசன் தென்படும் மாதிரி எல்லோருக்கும் தெரிகிறது. அவனுடைய உண்மை சுபாவத்தை வெகு சிலரே அனுபவித்தறிகிறார்கள். அந்தச் சிலர் ராஜாங்கத்தின் பாதுகாப்பை யுடைய பெரும்பாலரை எதிரிட்டுக் கொள்ளத் துணியமாட்டார்கள்.

மக்களுடைய, அதிலும் அதற்குமேல் அப்பீலில்லை என்கிற அரசனுடைய செய்கைகளுக்கு முடிவு நன்றாயிருந்தால், முறைகள் குறைகூறப் படமாட்டா. ஒரு அரசன் ராஜ்யத்தை ஜயித்து அதைப் பரிபாலிப்பதில் சிரத்தை கொள்ளட்டும். அதற்காக அவன் கையாளும் சாதனங்கள் கௌரவமானவை என்றே எல்லோராலும் புகழப்படும். ஏனென்றால் சாமான்ய ஜனங்கள் ஒரு உத்தேசத்தின் வெளித் தோற்றத்தையும் விளைவையுமே

பார்த்து மலைக்கிறார்கள். உலகத்தில் சாமான்ய ஜனங்களே அதிகம். பெரும்பாலரானவர்கள் அரசனைச் சார்ந்து நிற்பதால், சாமான்யரல்லாத சிலர் தனியாக நின்று போகிறார்கள். தற்காலத்திய ராஜா ஒருவன், அவன் பெயரைக் குறிப்பிடாமலிருப்பது நலம். சதா சமர்தானத்தையும் சத்தியத்தையும் உபதேசித்தவண்ணமிருக்கிறான். ஆனால் அவ்விரண்டிற்கும் அவன் பெரிய சத்ரு. அக்குணங்களை அவன் அனுஷ்டித்திருக்கும் பக்ஷத்தில் அதனால் பல சந்தர்ப்பங்களில் அவன் ராஜ்யம் பறி போயிருந்திருக்கும்.

## பத்தொன்பதாவது அத்தியாயம்

### வெறுப்பும் பகைமையும் தவிர்க்கத் தக்கவை

மிகவும் முக்கியமான குணங்களைப் பற்றிச் சொல்லியாய் விட்டதால் மற்றவற்றைக் குறித்துச் சுருக்கமாகவும் பொதுவாகவும் கூறுகிறேன். ஏற்கெனவே பலமுறை கூறப்பட்டபடி ஒரு அரசன் வெறுப்பையும் பகைமையையும் தவிர்க்கவேண்டும். அதில் வெற்றி பெற்றால் அவன் காரியம் முடிந்த மந்திரியாகும். அப்போது மற்ற தீக்குணங்களால் அபாயமிராது. பணப்பிசாசா யிருப்பதாலும் குடிகள் சொத்தையும் ஸ்திரீகளையும் அபகரிப்பதாலும், அவன் பகைக்கப்படுவான். அவற்றை அவன் செய்யாமலிருக்கவேண்டும். தங்கள் சொத்தும் மானமும் தாக்கப்படாமலிருக்கும்வரை பொதுவாக மாந்தர்கள் திருப்தியுடன் வாழுவார்கள். ஒரு சிலருடைய பேராசையைத்தான் அவன் எதிர்த்துப் போராடவேண்டியிருக்கும். அவர்களை அடக்குவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. அரசன் சஞ்சல புத்தியுடையவன், சிறுபிள்ளைத்தனமானவன், பேடி, மிருதுத்தன்மை யுடையவன், திடசித்தமில்லாதவன் என்றெல்லாம் கருதப்பட்டால் வெறுக்கப் படுவான். அதை அவன் பெரிய மலை போன்ற ஆபத்தெனக் கொள்ளவேண்டும். ஆகையால் அவன் செய்கைகளில் பெருமை, உத்வேகம், கம்பீரம் பொறுமை, முதலியவற்றைக் காண்பிக்கும் யுக்தியைக் கைக்கொள்ள வேண்டும். ராஜ்ய நிர்வாகத்தில் அவ

னுடைய வார்த்தை மாற்ற முடியாததாயிருக்க வேண்டும். ஒருவரும் தன்னை ஏமாற்றவாவது தன் செல்வாக்கை உபயோகித்துப் பார்க்கவாவது நினைக்கக்கூட முடியாத படி அவன் தன் நிர்மானத்தை உறுதியுடன் பற்றிக் கொண்டிருக்க வேண்டும். தன்னைப்பற்றி இவ்விதமான அபிப்பிராயத்தை உண்டாக்கும் அரசன் பெரும் புகழை அடைகிறான். இப்படிப்பட்ட கீர்த்திவந்தனை மன்னனுக்கெதிராகச் சதிசெய்ய முயல்வது கடினம். அவன் சாமர்த்தியசாலி யென்றும், குடிகளுடைய மரியாதைக் குரியவனென்றும், எல்லோருக்கும் தெரிந்திருப்பதால், அவனை எளிதில் எவரும் தாக்க முன்வரமாட்டார்கள். அவனுக்கு இரண்டுவிதமான பயமிருக்க வேண்டும்: ஒன்று உள்ளேயே தன் குடிகளிடமும், இன்னொன்று வெளியில் அயல் நாட்டரசர்களிடமும். அயல் நாட்டின் ஆக்கிரமிப்பிலிருந்து நல்ல படைபலமும் நல்ல சிநேகிதர்களும் இருந்தால், தற்காத்துக் கொள்ளலாம். நல்ல ஆயுதபலமிருந்தால் சிநேகிதர்களுக்குக் குறைவில்லை. சதியாலோசனையால் பாதிக்கப் படாமலும், வெளியி லிருந்து தொந்தரவில்லாமலுமிருந்தால் உள்நாட்டு நிலைமை அமைதியாகவே யிருக்கும். நான் விவரித் துள்ளபடி ஆட்சி புரிந்து வாழ்ந்துவந்தால், ஒரு வேளை வெளி யரசர்கள் தாக்க முயன்றால்கூட உறுதியுடனிருக் கும் மன்னன், ஸ்பார்ட்டா நாட்டு நபிஸ் (Nabis) போல ஒவ்வொரு அதிர்ச்சியையும் தாங்கக்கூடியவனாயிருப் பான். பிரஜைகள் வெளியில் தெரியாமல் இரகசியமாய்ச் சதியாலோசனை செய்வார்களென்ற பயமிருப்பதால், அதைத் தடுப்பதற்காக அரசன் அவர்கள் தன்னிடம் வெறுப்பும் விரோதமும் கொள்ளாதபடி பக்குவமாய் நடந்துகொண்டு ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். பொது ஜனங்களுடைய வெறுப்பை அடையாதிருத்தலே சதியாலோசனைக்குத் தக்க மருந்து. ஏனெனில் சதி யாலோசனை செய்பவர்கள், அரசனைக் கொல்வதால் குடி களுக்குத் திருப்தி யுண்டாகுமென்று நம்புகிறார்கள். ஜனங்கள் ஆத்திரமடைவார்களென்று தெரிந்தால் அப் படிப்பட்ட காரியத்தில் பிரவேசிக்கவே பயப்படு

வார்கள். பிரவேசித்தால் அவர்களுக்கு எல்லையற்ற கஷ்டங்கள் நேரும். அனுபவத்தின் மூலமாய் நாம் பார்க்கிறபடி எத்தனையோ சதியாலோசனைக்காரர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் வெகு சிலரே காரியத்தை ஜயித்திருக்கிறார்கள். அவர்களால் தனியாக ஒன்றும் செய்யமுடியாது. அதிருப்தியுடையவர்கள்தான் அவனுக்குத் துணைபுரியக்கூடும். சதியாலோசனை செய்ய விரும்புகிறவன், தன் எண்ணத்தை அவர்களுக்குத் தெரிவித்து விட்டால், அவர்களுக்குத் திருப்திபெறும் வழி உடனே தெரிந்துபோகிறது. ஏனெனில் அந்த இரகசியத்தை வெளியிடுவதால், அவர்கள் என்ன வேண்டுமோ அதைப் பெற இயலும். அதனால் நிச்சயமான பலன் கைமேல் கிடைக்கிறது. சதிகாரனுடைய யோசனைப்படி நடந்தால், லாபம் கிடைக்குமோ கிடைக்காதோவென்பது சந்தேகம்; அபாயமும்கூட. சதியாலோசனை செய்பவனிடம் அவர்கள் அவ்வளவு உண்மையுடன் நடந்து கொள்வதற்கு அவர்கள் அவனுடைய ஆப்த நண்பர்களாயிருக்க வேண்டும். இல்லையேல் அரசனுடைய கொடிய பகைவனாயிருக்கவேண்டும். சுருங்கச் சொல்லுமிடத்து சதிகாரன் பக்ஷத்தில் பயம், பொறாமை, சந்தேகம், தண்டனையின் திகில், முதலியவை இருக்கின்றன. ராஜாவின் பக்ஷத்திலோ, ராஜாவின் மஹிமை, சட்டங்கள், சிநேகிதர்களுடையவும், ராஜ்யத்தினுடையவும் பாதுகாப்பு, முதலிய எல்லாவித ஜாக்கிரதைகளும் இருக்கின்றன. இவ்வளவுடன்கூடக் குடிகளுடைய நல்லுணர்ச்சியும் சேர்ந்தால் சதிகாரனுக்குத் துணிச்சல் உண்டாவது துர்லபம். ஏனெனில் சாதாரணமாகச் சதியாலோசனைக்காரன் தன் சூழ்ச்சியை நிறைவேற்றுமுன்னர் பயப்படுகிறான். ஜனங்களுடைய ஆதரவு இல்லாமல் இதில் பிரவேசிக்கிறவன் தன் சூழ்ச்சி நிறைவேறிய பிறகும் குடிகளுடைய கோபத்துக்குப் பயப்படவேண்டும். இவ்விதமாக அவனுக்கு அபயம் கிடைக்க ஏதுவில்லாமலே போகும்.

இதற்குக் கணக்கற்ற மேற்கோள்கள் கொடுக்கலாம். ஆனால் நமது தந்தையர்கள் ஞாபகத்துக்குள் நடந்த ஒரு

விஷயத்தை மட்டுமே கூறுகிறேன். மெஸ்ஸர் ஆன்னி பேல் பெண்டிவோக்லி (Messer Annibale Bentivogli) என்ற பொலோஞு (Bologna)வின் அரசன் (மெஸ்ஸர் ஆன்னிபேலுடைய மூதாதை) கன்னெஸ்கி (Canneschi) வம்சத்தினரால் சதிசெய்து கொல்லப்பட்டான். அப்போது குழந்தையாயிருந்த மெஸ்ஸர் ஜியோவானி (Messer Giovanni)யைத் தவிர அவனுக்கு வேறு சுற்றத்தார் எவரும் இருக்கவில்லை. இக்கொலைக்குப் பிறகு ஜனங்கள் ஆத்திரமடைந்து, கன்னெஸ்கி குடும்பத்தாரனைவரையும் தொலைத்து விட்டனர். இது அக்காலத்தில் பெண்டிவோக்லி குடும்பத்தாரிடம் மக்கள் கொண்டிருந்த நல்லெண்ணத்தால் நடந்தது. அந்நல்லெண்ணத்தினால் ஆன்னிபேலுக்குப் பிறகு ராஜ்யத்தையாள ஒருவருமில்லாமற் போயும், பிளாரன்ஸில் இதுவரை ஒரு கொல்லனுடைய மகனென்று கருதப்பட்ட ஒருவன், பெண்டிவோக்லி குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று கேள்விப்பட்டு அவனை அழைத்துவந்து அவனிடம் ராஜ்ய நிர்வாகத்தை ஒப்புவித்தனர். மெஸ்ஸர் ஜியோவானிக்கு வயது வரும்வரையில் அவன் அங்கு அரசு புரிந்து வந்தான்.

ஆகையால் ஜனங்கள் திருப்தி யுள்ளவர்களாயிருக்கும் வரையில், சதியாலோசனைக்காரர்களைப்பற்றி ராஜா கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் குடிகள் எதிர்த்துக்கொண்டு துவேஷம் பாராட்டினால், அரசன் ஒவ்வொருவரிடத்திலும், ஒவ்வொரு விஷயத்துக்கும் பயப்பட வேண்டியதுதான். ஒழுங்கான ராஜ்யங்களும், அறிவாளியான ராஜாக்களும், பிரபுக்களை நம்பிக்கையிழந்து துணிச்சலாய்ப் போகும்படி விட்டு விடாமலும், ஜனங்களைத் திருப்திப் படுத்தவும் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். இது ஒரு அரசன் செய்யவேண்டிய காரியங்களெல்லாவற்றிலும் மிக முக்கியமானது.

நம் காலத்தில் ஒழுங்காக நிர்வகிக்கப்படும் ராஜ்யங்களில் பிரான்ஸ் ஒன்று. அங்கே அரசனுடைய பத்தி

ரத்துக்கும் சுதந்திரத்துக்கும் பொறுப்பாக அநேக ஸ்தாபனங்களிருக்கின்றதைப் பார்க்கிறோம். பிரதானமான பாதுகாப்பு பார்லிமெண்டும் அதன் அதிகாரமும். ஏனெனில் அந்த ராஜ்யத்தை ஸ்தாபித்தவன் பிரபுக்களுடைய பேராசையையும் அலக்ஷிய புத்தியையும் அறிந்தவனாகையால் பிரபுக்களைக் கட்டுப்பாட்டில் வைப்பதற்குத் தன்னிடமும் கொஞ்சம் அதிகார மிருக்கவேண்டுமென்றெண்ணினான். இன்னொரு பக்கம் ஜனங்கள் பிரபுக்களிடம் வெறுப்பும் பயமும் உடையவர்களாயிருப்பதை உணர்ந்து, அவர்களை வசப்படுத்தவேண்டியிருப்பதால் பார்லிமெண்டை அரசனுடைய நேரான கண்காணிப்பில் வைக்கவில்லை. பிரபுக்களை ஆதரித்தால், ஜனங்களுக்கும் ஜனங்களிடம் தயவு காண்பித்தால், பிரபுக்களுக்கும் அரசன்மேல் அதிருப்தி உண்டாவதைத் தடுப்பதற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகையால் அரசனுடைய நேர்முகமான கட்டளைகளைச் செலுத்தாமல் மூன்றாவது மத்தியஸ்தனொருவனைப் பார்லிமெண்டுக்குத் தலைவனாக வைத்து, அவன் மூலமாகப் பெரிய மனிதர்களைக் கட்டுக்குள் வைத்துக் சாமான்யர்களைத் தட்டிக் கொடுத்து வரப்பட்டது. அரசனையும் அவனது ராஜ்யத்தையும் பாதுகாப்பதற்கு இதைவிடப் புத்திசாலித்தனமும் பத்திரமுள்ளதுமான சிறந்த ஏற்பாடு வேறெதுவுமில்லை. இதிலிருந்து இன்னொரு நியமத்தையும் தெரிந்து கொள்ளலாம். ராஜாக்கள், பொது ஜனங்களுக்கிஷ்டமில்லாத கடமைகளை மூன்றாவது மனிதர்களைச் செய்யவிட்டு நன்மைகளைத் தானே நேரில் வழங்கவேண்டும். அரசர்கள் பிரபுக்களைக் கௌரவிக்க வேண்டும். ஆனால் பொது ஜனங்களால் வெறுக்கப் படக்கூடாது.

பல ரோமச் சக்கரவர்த்திகளின் வரலாறுகளில் என் அபிப்பிராயத்துக் கெதிரிடையான உதாரணங்களிருப்பதாய்ச் சிலருக்குத் தோன்றலாம். பெருந்தன்மையும் திடசித்தமும் உள்ள சிலர் ராஜ்யத்தை இழந்து பிரஜைகளால் சதியாலோசனை மூலம் கொல்லப்பட்டதை அவர்

கள் எடுத்துக் காட்டலாம். இந்த ஆக்ஷேபணைகளுக்குப் பதிலாகச் சில சக்கரவர்த்திகளுடைய குணநிசயங்களைப் பற்றி விவரிக்கிறேன். அவர்களுடைய அழிவுக்குக் காரணம் நான் கூறியவற்றிற்கு முரணானதன்று என்பதைக் காண்பிப்பதுமன்றி, இக்காலத்து நடவடிக்கைகளைப்பற்றி வாசிப்பவர்களும் இதைக் கவனித்தல் நலமெனக் கருதுகிறேன். தத்துவஞானி மார்க்கஸ் (Marcus) லிலிருந்து மாக்ஸிமினஸ் (Maximinus)வரையிலுமிருந்த எல்லாச் சக்கரவர்த்திகளையும் எடுத்துக்கொள்வோம். மார்க்கஸ், அவன் மகன் கம்மோடஸ் (Commodus) பெர்டினக்ஸ் (Pertinax) ஜுலியானஸ் (Julianus) ஸெவரஸ் (Severus) அன்டொய்னஸ் (Antoinus) அவன் மகன் கர்ரகல்லா (Caracalla) மாக்ரினஸ் (Macrinus) ஹெலியோகபாலஸ் (Heliogabalus) அலெக்ஸாண்டர் (Alexander) மாக்ஸிமினஸ் (Maximinus) முதலியவர்களைப்பற்றி யோசிப்போம். முதலில் குறிப்பிடத்தக்க விஷயம் யாதெனில் மற்ற அரசர்களுக்குப் பிரபுக்களுடைய பேராசையையும், குடிகளுடைய பதட்டத்தையும் சமாளிப்பது போதுமானதாயிருக்க ரோமச் சக்கரவர்த்திகளுக்கு மூன்றாவது கஷ்டம் ஒன்றிருந்தது. அவர்கள் தங்கள் போர்வீரர்களுடைய குரூரத்துக்கும், பேராசைத்திரத்துக்கும் இடங்கொடுக்க வேண்டியிருந்தது. சிப்பாய்களுடைய அந்தத் தன்மைகள் பலருடைய நாசத்துக்குக் காரணமாயிருந்தன. ஜனங்கள், சிப்பாய்கள் இருதரத்தாரையும் சந்தோஷப்படுத்த அரசனால் முடியாமற் போயிற்று. ஏனெனில் ஜனங்கள் அமைதியை விரும்புகிறவர்களாகையால், சாத்வீகமான அரசனை வேண்டுகிறார்கள். போர்வீரர்களோ வெனில், துடுக்கு, கடூரம், பணப பேராசை, ஆகிய குணங்களையுடைய ராணுவ மனப்பான்மை கொண்ட ராஜாவைத்தான் விரும்புகிறார்கள். தங்களுக்கு இரட்டிப்புச் சம்பளம் கிடைப்பதற்காக, அரசன் இக்குணங்களை ஜனங்கள் மீது பிரயோகிக்க வேண்டுமென்று அவர்கள் ஆவலுடையவர்களாயிருக்கிறார்கள். அவர்களுடைய குரூரத்தனத்தை வெளிக் காண்பிப்பதற்கும், பகாசுரப் பேராசையைத்

தீர்த்துக் கொள்வதற்கும் பணம் அவசியமாயிருக்கிறது. போர் வீரர்கள், குடிகள் இவ் விருதிறத்தினரையும் கட்டில் வைத்து அடக்கியாளச் சக்தியில்லாத சக்கர வர்த்திகள் எல்லாரும் அழிவை அடைந்தார்கள். அவர் களில் அநேகர் புதியவர்கள்; இவ் விரு கட்சிகளின் முரண் பாடுகளையும் அவர்களைத் திருப்தி செய்வதிலுள்ள கஷ் டங்களையும் பார்த்து விட்டு இவ் விரண்டில் சிப்பாய் களைச் சந்தோஷப்படுத்துவதே நல்லதென்று கண்டு கொண்டு, ஜனங்கள் துன்புறுத்தப்படுவதை அலக்ஷிய மாக நினைத்தார்கள். அரசர்கள் ஏதாவது ஒரு பகுதி யினரின் துவேஷத்தைப் பெற்றுத்தான் ஆகவேண்டி யிருந்ததால், அவர்கள் தேர்ந்தெடுத்த வழி அவ சியமாகத்தான் இருந்தது. அரசர்கள் முதலில் பொது மக்களுடைய வெறுப்பை யடையாதிருக்க முயலவேண் டும். அது முடியாவிட்டால் இருப்பவற்றுக்குள் பல மிக்க வையான கட்சிகளின் துவேஷத்திலிருந்து தப்ப ஒவ் வொரு மார்க்கத்தையும் கைக் கொள்ளவேண்டும். புதிய வர்களான இந்தச் சக்கரவர்த்திகள் அசாதாரணமான ஆதரவை வேண்டியவர்களாயிருந்தமையால், ஜனங்களை விட்டுப் போர் வீரர்களையே பெரிதும் சார்ந்திருக்கலானார் கள். இதனால் கிடைத்த பலன்கள், போர் வீரர்களிடை யில் அவர்களுக்குத் தம் மதிப்பை எந்த மட்டும் காப் பாற்றிக்கொள்ளத் தெரிகிறது என்பதைப் பொறுத்தி ருந்தன. மார்க்கஸ், பெர்டினக்ஸ், அலெக்ஸாண்டர், இம் மூவரும் அடக்கமான வாழ்க்கையும் நியாயத்தில் ஆர் வமும், கொடுமையில் வெறுப்பு முடையவர்களாய்த் தயா ளிகளாயும் சாந்தஸ்வரூபிகளாயும் திகழ்ந்தனர். அப்படி யிருந்தும் மார்க்கஸ் தவிர மற்றவர்கள் துக்ககரமான முடிவை எய்தினர். தன் பதவிக்காகச் சிப்பாய்களுக்கோ ஜனங்களுக்கோ கடமைப் பட்டிராமல் பரம்பரை பாத்தி யதையால், அரசனானவகையால் மார்க்கஸ் கௌரவ மாயும் மதிப்புடனும் இருந்தான். அதுவும் தவிர, அவன் மக்களின் வணக்கத்தைப் பெறத்தக்க பல நற்குணங் களைப் பெற்றிருந்ததுடன் தான் இருக்கும் வரையில் இரண்டு கட்சிகளையும் வைக்கிறவிடத்தில் வைத்து

வந்தாறுதலின் அவனை ஒருவரும் வெறுக்கவாவது அவமதிக்கவாவது இல்லை. பெர்டினக்ஸ் சிப்பாய்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக அரசனானவன். கம்மோடஸின் கீழ் மனம் போனபடி நடந்துவந்த சிப்பாய்களுக்குப் பெர்டினக்ஸின் கீழ் அடங்கிக் கௌரவமாயும் நாணயமாயும் வாழ்க்கை நடத்தப் பிடிக்கவில்லை. பெர்டினக்ஸ் சிப்பாய்கள் தன்னை வெறுக்கும்படி செய்து கொண்டது மன்றி வயோதிகனாயுமிருந்ததால், ஆட்சியின் தொடக்கத்திலேயே அழிந்துவிட்டான்.

இதிலிருந்து, தீய செயல்களைப் போலவே நல்ல செய்கைகளாலும் துவேஷம் விளைகிறது என்று ஏற்படுகிறது. ஆகையால் நான் முற்கூறியபடி ஒரு ராஜ்யத்தைப் பரிபாலிக்கும் அரசனுக்குத் தீங்கு செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது. அவனுடைய பதவி நிலைக்கும் பொருட்டு, அவனுக்கவசியமான கட்சி, பொது மக்கள், சைனியம், பிரபுக்கள், எவருடைய கட்சியாயினும் சரி, அது, கெட்ட தன்மைகளை யுடையதாயிருந்தால் அதை அவனும் பின் பற்றித் திருப்திப் படுத்தவேண்டும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் நல்ல செயல்கள் ஆபத்தை தருபவை. அலெக்ஸாண்டர் சங்கதியைப் பார்ப்போம். அலெக்ஸாண்டர் உத்தம புருஷன். அவன் பெற்ற பல புகழ்களில் அவன் அரசாண்ட பதினான்கு வருஷங்களில் நியாயமான விசாரணையின்றி ஒருவருக்குக் கூட மரண தண்டனை விதித்ததில்லை என்பதொன்று. இப்படியிருந்தும் சேனைகள் அவனைப் "பெண் தன்மை" யுடையவனென்றும், தாயார் கட்டளைப்படி நடக்கிறவனென்றும் அலக்ஷியம் செய்து சூழ்ச்சியால் கொன்றுவிட்டார்கள்.

கம்மோடஸ், ஸெவரஸ், அன்டாய்னஸ், கர்ரகல்லா, மாக்ஸிமினஸ், முதலியவர்கள் குரூரமும் பணத்தாசையும் மிக்கவர்கள். போர்வீரர்களைச் சந்தோஷப்படுத்துவதற்காக ஜனங்களை அவர்கள் படுத்தாதபாடு பாக்கி இல்லை. ஸெவரஸ் தவிர மற்றெல்லோர் கதியும் தீமையாகவே முடிந்தது. ஸெவரஸ் அரிய திறமை வாய்ந்தவன். ஆகை

யர்ல் ஜனங்களை வருத்தினாலும் பலமிக்க கட்சியினரான சிப்பாய்களுடைய நட்பைப் பெருக்கி வந்ததால், சந்தோஷமாக அரசாண்டுவர முடிந்தது. அவனுடைய குணங்கள் சிப்பாய்கள், ஜனங்கள், இருபிரிவினரும் சிலாகிக்கத் தக்கவையாயிருந்தன. ஜனங்கள் அவனுடைய தன்மைகளைக் கண்டு ஆச்சர்யமும் பிரமிப்பும் கொண்டவர்களாயிருந்தார்கள். சிப்பாய்கள் அளவற்ற மரியாதையும் திருப்தியும் காண்பித்தனர்.

இந்த ராஜாவின் செயல்கள் அருமையாயும் புதிய அரசன் கவனிக்கத்தக்கவையாயும் இருந்தன. சிங்கம், நரி இவற்றின் இயற்கைகளை அவன் எவ்வளவு நன்றாக அனுசரிக்கக் கூடியவனாக இருந்தான் என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். ஜூலியானஸ் சக்கரவர்த்தியின் சோம்பேறித்தனத்தை யறிந்த ஸெவரஸ், ஸ்லாவோனியா (Slavonia)வில் சேனைத் தலைமை வகித்த போது தன் போர் வீரர்களை, "ப்ரேடோரியன்" சைனிகன் (Practorian gaurd) ஒருவன் பெர்டினாக்ஸைக் கொன்றதற்காகப் பழி தீர்த்துக்கொள்ளுமாறு தூண்டி விட்டான். சிம்மாசனத்தின் மீதிருந்த தன நோக்கத்தை மறைத்துக்கொண்டு, இந்த சாக்கில் ரோமுக்குத் தன் சேனைகளை நடத்திச் சென்றான். அவன் புறப்படும் செய்தி ரோமுக்கு எட்டுமுன், அவன் அங்கே போய்ச் சேர்ந்தான். அவன் வந்தவுடனே ஸெனேட் பயந்துபோய் அவனைச் சக்கரவர்த்தியாகத் தேர்ந்தெடுத்து ஜூலியானஸைக் கொன்றது. இந்த ஆரம்பத்துக்குப் பிறகு பூர்ண அதிகாரத்தை வகிப்பதற்கு இரண்டு கஷ்டங்களை அகற்ற வேண்டியிருந்தது. ஒன்று ஆசியாவில், ஆசியச்சைனியத்தின் தலைவனான நிக்ரினஸ் (Nigrinus) தன்னைச் சக்கரவர்த்தியென்று பிரகடனம செய்து கொண்டிருந்தான். இன்னொன்று மேற்கே ஆல்பினஸ (Albinus) சாமராஜ்யத்தின் மேல் கண்வைத்திருந்தான். இவ்விருவரையும் ஒருங்கே பகைத்துக் கொள்வது அபாயமென்று கண்ட ஸெவரஸ், நிக்ரினஸைத் தாக்கவும் ஆல்பினஸை ஏமாற்றவும் வேண்டியதென்று தீர்மானித்து, அதற்கொரு யுக்தி

செய்தான். ஸெனேட்டால் சக்கரவர்த்தியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் தான் அந்தக் கௌரவத்தை ஆல்பினஸுடன் பங்கிட்டுக்கொள்ள விரும்புவதாக ஒரு கடிதம் எழுதி, ஆல்பினஸுக்கு ஸீஸர் என்னும் பட்டத்தையும் வழங்கி, ஸெனேட்டின் அதிகாரத்துடன் ஆல்பினஸைத் தன் துணைவன் என்று பஹிரங்கம் செய்தான். இவையெல்லாம் உண்மையென்றே ஆல்பினஸ் நம்பினான். ஸெவரஸ் நிக்ரினஸைத் தோற்கடித்துக் கொன்று விட்ட பின் கிழக்கே அமைதியைப் பரவச் செய்து ரோமுக்குத் திரும்பிவந்து ஆல்பினஸ் மீது தான் செய்த நன்றிகளை மறந்து தன்னைத் துரோக சிந்தையுடன் கொல்லப்பார்த்ததாக ஸெனேட் முன் குற்றஞ் சாட்டி, செய் நன்றி கொன்றதற்காக அவனைத் தண்டிக்கப் போவதாகத் தெரிவித்தான். பிறகு பிரான்ஸில் ஆல்பினஸை எதிர்த்து அவன் பதவி, ஆவி, இரண்டையும் போக்கினான்.

ஸெவரஸின் நடவடிக்கைகளை ஆராய்வோர் அவன் பயங்கரமான சிங்கமாயும் தந்திரமுள்ள நரியாயும் இருந்ததைக் காண்பார்கள். அவனிடம் எல்லோரும பயபக்தியுடன் இருந்ததையும், சைனியம் அவனைத் துவேஷிக்காமலிருந்ததையும் அறிவார்கள். ஒரு புதிய அரசனாயிருந்து அவன் இவ்வளவு அதிகாரத்தைப பெற்றதில் ஆச்சர்யமில்லை. ஏனென்றால் அவனுடைய பணத்தாசை ஜனங்கள் மனதில் விளைவித்திருக்கக் கூடிய வெறுப்பை அவனுடைய பெரும புகழ் எப்போதும் தடுத்து வந்தது. அவனுடைய மகன அன்டோனைனஸும் மிகவும கெட்டிக்காரன். ஜனங்களுடைய பாராட்டுதலையும் சிப்பாய்களுடைய அன்பையும அடையக்கூடிய தன்மைகள் அவனிடமிருந்தன. அவன் ராணுவ மனப்பான்குள்ளவன். கடுமையான கஷடங்களைச் சகிக்க வல்லவன். நல்ல உணவு முதலிய சுக சௌக்கியங்களை லக்ஷியம் செய்யாதவன். இக்காரணங்களினால் போர் வீரர்கள் அவனை நேசித்தனர். இருந்தாலும அவனுடைய குரூரமும் முரட்டுத்தனமும் கண்டும் கேட்டுமிராதவை.

அவன் பல தனிமனிதர்களைக் கொலைதண்டனைக்குள்ளாக்கியதுமன்றி, ரோமிலும் அலெக்ஸாண்டிரியா (Alexandria) விலும் திரள்திரளான ஜனங்களைக் கொல்வித்ததால் உலகம் அவனை வெறுக்கலாயிற்று. அவனைச் சேர்ந்தவர்களே அவனிடம் அஞ்சினர். கடைசியில் அவன் தன் சேனைகளின் மத்தியிலேயே ஒரு ரோம சைனிகனால் (Centurian) கொன்று வீழ்த்தப்பட்டான். இம்மாதிரி துணிந்து ஒருவன் கொல்வதைத்தடுக்க அரசர்களால் முடியாது. உயிருக்குத்துணிந்த எவனும் அதைச் செய்யக்கூடும். ஆனால் அரசன் இதைப்பற்றி அதிகமாய்ப் பயப்படவேண்டியதில்லை. அம்மாதிரி உயிரைத் துரும்பாக மதிப்பவர்கள் இருப்பது மிகவும் அருமை. அன்டாய்னஸ் மாதிரி தனக்கு உபயோகமாயிருப்பவர்களையும், தன்னுடைய உத்தியோகஸ்தர்களையும் வருத்தாமல் ஜாக்கிரதையாகவிருக்கவேண்டும். அன்டாய்னஸ் தன்னைக்கொன்ற ரோமவீரனுடைய சகோதரனைக் கொலைபுரியச் செய்திருந்தான். அப்படியிருக்கையில் அவ்வீரனை நாள்தோறும் பயமுறுத்திக்கொண்டே தன் மெய்க்காப்பாளர் கூட்டத்தில் வைத்துக்கொண்டு இருந்தது பெரிய முட்டாள்தனம்.

கம்மோடஸ் தன் ராஜ்யத்தைச் சுலபமாக ஆண்டு வந்திருக்கலாம். மார்க்கஸின் புதல்வனானதையால், பரம உரிமை பாத்தியதையுடையவன். ஜனங்களையும் போர்வீரர்களையும் திருப்தி செய்யத் தன் தகப்பனாரைப் போலவே நடத்திருக்கலாம். ஆனால் குரூரசித்தமும மிருக ஸ்வபாவமுமுடையவனானதையால், ஜனங்களைக் கொள்ளையடிப்பதற்காகப் போவீரர்களுடைய உதவியை நாடி, அவர்களுக்கு அளவற்ற சுயேச்சையை அளித்தான். தன் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ளாமல் அரங்கங்களில் கத்திச் சண்டைக்காரர் (Gladiators)களுடன் சண்டை போடுவதும் இன்னும பல அவமதிப்பான காரியங்களைச்செய்வதுமாக ராஜாவுடைய அந்தஸ்துக்குத் தகாத காரியங்களில் ஈடுபட்டுப் போர்வீரர்களுடைய அருவருப்பையும் அடைந்தான். ஒருபுறம் பகைமையும

மற்றொருபுறம் அவமதிப்பும் ஒன்று சேரவே சதியாலோசனையால் கொல்லப்பட்டான்.

இன்னும் மாக்ஸிமினஸைப்பற்றிச் சொல்லவேண்டியது பாக்கி இருக்கிறது. அவன் போர்புரிவதில் மிகுதியான உத்சாகம் கொண்டவன். அலெக்சாண்டருடைய "பெண் தன்மை"யைக்கண்டு சைனியங்கள் எரிச்சலடைந்திருந்ததால், மாக்ஸிமினஸை சக்கரவர்த்தியாகத் தேர்ந்து கொண்டன. இரண்டு விஷயங்கள் அவனை துவேஷத்துக்கும் அலக்ஷியத்துக்கும் ஆளாக்கியபடியால் அவன் வெகுகாலம் ஆளவில்லை. அவன் திரேஸில் (Thrace) இடையனாக இருந்தது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகையால் அவனைக் கண்டால் அவர்களுக்கு இளப்பமாகவிருந்தது. இன்னொரு காரணம் அவன் தனது ஆட்சி ஆரம்பித்த உடனே ரோமுக்குச் சென்று சிம்மாசனத்தைக் கைப்பற்றிக் கொள்ளாமலிருந்து விட்டான். குரூரத்துக்குப் பெயர் போனவனாயிருந்தான். ரோமிலும் சாம்ராஜ்யத்தின் மற்ற பாகங்களிலும் தன் ராணுவத்தலைவர்கள் மூலம் பல கொடுமைகளைச் செய்தான். உலகம் முழுவதும் அவனுடைய தாழ்ந்த பிறப்பைக்கண்டு ஆத்திரமும், முரட்டுக் குணத்தைப் பார்த்து வெறுப்பும் அடைந்தது. முதலில் ஆப்பிரிக்காவும் பிறகு ஸெனேட்டும், ரோமர்களும் இத்தாலியின் மற்றபாகங்களிலுள்ள மக்களும் அவனுக்கு விரோதமாகச் சதியாலோசனை செய்தனர். அவனுடைய சொந்தப் போர்வீரர்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். அக்விலீயா (Aquileia)வை ஆக்கிரமித்து அபஜயமடைந்தபோது, அவனுடைய கொடுமைகளை சகிக்க முடியாமற்போயின. கடுங்கோபங் கொண்ட படைகள் அவனுக்குப்பல விரோதிகளிருப்பதைக் கண்டு பயங்குறைந்தவர்களாய் அவனைக் கொலை செய்து விட்டனர்.

ஹெலியோகபாலஸ், மாக்ரினஸ், ஜூலியானஸ், இவர்களைப் பற்றிக் கூறவேண்டியதில்லை. இவர்கள்

மிக்வும் வெறுக்கத்தக்கவர்களாயிருந்ததால், விரைவில் ஒடுக்கப்பட்டுவிட்டனர். ஒன்றுமட்டும் கூறி இதை முடிக்கிறேன். இம்மன்னர்களைப்போல் போர்வீரர்களை அசாதாரணமான வழிகளில் அளவுக்கு மிஞ்சித் திருப்தி செய்யவேண்டிய அவ்வளவு அவசியம் இந்தக்காலத்து அரசர்களுக்குக் கிடையாது. இப்போதும் போர்வீரர்களை மதித்து நடக்கவேண்டியதவசியமாய்த்தானிருக்கிறதென்றாலும், அவர்களுடன் ஏதேனும் தகரார் வந்தால் அதை விரைவில் தீர்த்துக்கொள்ள வழி உண்டு. ஏனெனில் ரோம சாம்ராஜ்யத்திலிருந்ததைப்போல் இந்த ராஜாக்களுடைய சைனியங்கள் நிர்வாகத்தோடும் மாகாணங்களின் பரிபாலனத்தோடும் இணைக்கப்பட்டிருக்கவில்லை. அக்காலத்தில் குடிகளைவிடப் போர்வீரர்கள் பெரிதாக மதிக்கப்பட்டார்களென்றால், போர்வீரர்கள் ஜனங்களைவிடக் காரியத்தைச் சாதிக்கும் ஆற்றல் அதிகமுடையவர்களா யிருந்தார்களென்பதால்தான். இக்காலத்தில் துருக்க அரசனையும் ஸுல்தானையும் (கலீபாவையும்) தவிர மற்றெல்லோரும் சிப்பாய்களைக் காட்டிலும் குடிகளை அதிகமாகத் திருப்திப்படுத்த வேண்டியிருக்கிறது. ஏனெனில் இப்போது சிப்பாய்களைவிட மக்கள் அதிக வல்லமையுடையவர்கள். துருக்க அரசனைத் தவிர என்று எதற்குச் சொன்னேனென்றால் அவன் தன்னோடு எப்போதும இரண்டாயிரம் காலாட்களையும் பதினையாயிரம் குதிரைப்படைகளையும, வைத்துக்கொண்டிருக்கிறான். அவனுடைய ராஜ்யத்தின் பத்திரமும பலமும் அவர்கள் பொறுப்பிலிருக்கின்றன. அவர்களுடைய சிநேகத்தை நிலைநாட்டிக்கொள்வதற்காக மற்றெல்லா விஷயங்களையும் ஒத்திப்போடவேண்டியிருக்கிறது. ஸுல்தானின் ராஜ்யமும் அப்படித்தான். அவ்விராஜ்ய முழுவதும் சிப்பாய்கள் கைவசமேயிருப்பதால், ஜனங்களை மதிக்காமல் சிப்பாய்களுடைய நட்பையே பெரிதாகப் பாராட்ட வேண்டியிருக்கிறது. ஸுல்தானின் ராஜ்யம் மற்றெல்லா ராஜ்யங்களிலின்றும் வேறுபட்டது. அது போப்பின் சமஸ்தானத்தை ஒத்தது. அதைப் பரம்பரையான ராஜ்யமென்றும் சொல்லமுடியாது. புதிய சமஸ்தான

42—8

மென்றும் நினைக்க முடியாது. இறந்த அரசனுடைய மக்கள் அவனுடைய வாரிசுகளல்லர். அதிகாரம் பெற்றவர்களால் கிறிஸ்தவப் போப்மாரைப்போல் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களே அப்பதவிக்கு அருகர்கள். இந்த ஒழுங்குமுறை புராதனமானதாகையால், அதைப் புதிய ராஜ்யமென்று சொல்லமுடியாது. புதிய ராஜ்யத்திலுள்ள கஷ்டங்களொன்றும் இதில் கிடையாது. ராஜா புதியவனானாலும், சட்டங்கள் மிகப் பழையவையாயும் ஒழுங்கானவையாயும் இருப்பதால், பரம்பரையரசனைப் போலவே அவை அவனை வரவேற்கின்றன.

நிற்க, இதுவரை கூறிவந்தவற்றை ஆலோசிப்பவர்கள் இந்தச் சக்கரவர்த்திகள் அழிந்ததற்குப் பகைமை அல்லது அவமதிப்புக் காரணமாயிருந்திருப்பதைக் காண்பார்கள். சிலர் ஒரு விதமாயும் மற்றுஞ்சிலர் வேறு விதமாயும் நடந்துகொண்டனர். இரண்டு வழிகளிலும் அதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமுமான முடிவுகள் நேர்ந்திருக்கின்றன. பெர்டினாக்ஸும் அலெக்ஸாண்டரும் புதிய அரசர்களாகையால், பரம்பரை மன்னனான மார்க்கஸைப் பின்பற்ற முயன்றிருந்தால் அவர்கள் தீமையடைந்திருப்பார்கள். அம்மாதிரியே காரகல்லா, கம்மோடஸ், மாக்ஸிமினஸ், முதலியவர்கள் ஸெவரஸைப்போல் நடக்கப் பார்த்திருந்தால், நஷ்டமுண்டாயிருந்திருக்கும். அவனைப் பின்பற்றக்கூடிய யோக்கியதை அவர்களுக்குக் கிடையாது. ஆகவே ஒரு புது சமஸ்தானத்தில் ஒரு புது அரசன் மார்க்கஸின் செயல்களை அனுசரிக்கவியலாது. ஸெவரஸைப்போல் நடப்பதும் அவசியமில்லை. ஆனால் ராஜ்யாதிகாரத்தை ஸ்தாபித்துக்கொள்வதற்கு ஸெவரஸ் மேற்கொண்ட உபாயங்களை அவனிடமிருந்து எடுத்துக்கொள்ளவேண்டும். நன்றாக நிலைத்துப் பத்திரமாயிருக்கும் ராஜ்யத்தைப் பரிபாலிப்பதற்குப் புகழத்தக்கவையும் சிரேஷ்டமானவையுமான முறைகளை மார்க்கஸைப் பார்த்துக் கற்றுக்கொள்ளவேண்டும்.

# இருபதாவது அத்தியாயம்

**அரசர்கள் அமைக்கும் கோட்டைகளும் மற்றவையும் லாபகரமானவையா அல்லவா என்பதைப் பற்றியது.**

தங்கள் ராஜ்யங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகச் சில அரசர்கள் நகரவாசிகளை நிராயுதபாணிகளாக்கி விடுகின்றனர். சிலர் தங்கள் ஆட்சிக்கடங்கிய நாடுகளைப் பலபாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். சிலர் தங்கள் ஆட்சியின் தொடக்கத்தில் சந்தேகிக்கக் கூடியவர்களாயிருந்தவர்களை வசப்படுத்த முயல்கிறார்கள். மற்றும் சிலர் தமக்குள் பகைமையை வளர்க்கிறார்கள். சிலர் கோட்டைகளைக் கட்டுகிறார்கள். மற்றவர்கள் கோட்டைகளை இடித்துத் தரைமட்டமாக்குகிறார்கள். இம்மாதிரியான பல முறைகளை உபயோகிப்பதற்கு ஏற்படும் காரணங்களை விவரமாய் அறிந்துகொள்ளாமல் தீர்மானமாக ஒன்றும் கூற வியலாதென்றாலும், கூடியமட்டும் பொதுவான முறையில் சொல்லுகிறேன்.

ஒரு புதிய அரசன் தன் குடிகளை நிராயுதர்களாக்க மாட்டான். அதற்குப் பதிலாக அவர்கள் ஆயுதமில்லாதவர்களாயிருந்தால், அவர்களுக்கு ஆயுதங்களைக் கொடுத்துத் தரிக்கச் செய்வான். ஏனெனில் அவர்கள் ஆயுதபாணிகளாயிருப்பது அரசனுக்குப் பலம். அவர்களுடைய ஆயுதபலம் அரசனுக்கே சொந்தம். இதன் மூலம் அரசனால் சந்தேகிக்கப் பட்டவர்கள் நம்பகமுள்ளவர்களாயும், ஏற்கனவே விசுவாசமுள்ளவர்கள் நிலை மாறாமலும் இருக்கிறார்கள். இதுவரை வெறும் குடிகளாக மட்டுமிருந்தவர்கள், ராஜாவுடைய சொந்த மனிதர்களாய் விடுகிறார்கள். எல்லோரையும் ஆயுதந்தரிக்கச் செய்வது இயலாது. சிலருக்கு மாத்திரம் அவ்வுரிமையை வழங்குவதால், மற்றவர்களுடன் பத்திரமாக விவகாரம் நடத்தலாம். அவ்வுரிமையைப் பெற்றவர்கள் தங்களை அரசன் மற்றவர்களைக் காட்டிலும் மதிப்புடன் நடத்தினதற்காக அவனிடம் கடமை பட்டிருப்பார்கள். இதரர் ஆயுதவுரிமை அளிக்கப்பட்டவர்களுக்கு ஆபத்துக்களும்

கடமைக்கும் அதிகமாகையால், கௌரவமும் அதிகம் கொடுக்கப்படுகிறது என்று நினைத்து அரசனை மன்னித்துவிடுவார்கள். ஆனால் ஏற்கனவே ஆயுதந் தரித்திருந்த ஜனங்களை நிராயுதர்களாக்கினாலோ, அவர்கள் கடுங்கோபம் கொள்கிறார்கள். அப்படிச் செய்வதால் அரசன் பயங்கொள்ளித் தனத்தினாலோ அல்லது அவ நம்பிக்கை கொண்டோ, ஜனங்களைச் சந்தேகிப்பதாகக் காட்டிக் கொள்கிறான். அவ்விரண்டு குணங்களும் அரசனிடம் குடிகளுக்குத் துவேஷமுண்டாவதற்குக் காரணமாகின்றன. அரசனும் ஆயுதபலமின்றி இருக்க முடியாதாகையால், கூலி சைன்யத்தை வைத்துக் கொள்ளும்படி நேருகிறது. அதனுடைய சமாசாரந்தான் நமக்கு முன்னமே தெரிந்திருக்கிறது. அது நல்லதாயிருப்பதாக வைத்துக்கொண்டால்கூட பலம் மிகுந்த சத்ருக்களிடமிருந்து அரசனைப் பாதுகாக்க அதற்கு ஆள்பலம் போதாது. ஆகவே புதிய நாட்டை ஆளும் புதிய அரசன் தன் குடிகளை ஆயுதமுள்ளவர்களாகவே இருக்கச் செய்ய வேண்டும். சரித்திரத்தில் இதற்கு எவ்வளவோ உதாரணங்களிருக்கின்றன.

ஆனால் ஒரு அரசன் தன் பழைய ராஜ்யத்துடன் ஒரு புதிய நாட்டைச் சேர்த்துக்கொண்டால், அந்த நாட்டை ஜயிக்கும்போது, தனக்கு உதவியவர்களுடைய ஆயுதங்களைத் தவிர மற்றவர்களுடையவற்றைப் பிடுங்கிவிடவேண்டும். அரசனை ஆதரிப்பவர்களைக்கூடச் சமயோசிதம்போல் பலஹீனப்படுத்தி அவர்களுடைய ஆண்மையைக் குறைக்க வேண்டும். புதிய தேசத்திலிருக்கும் ஆயுத சக்தி முழுவதும் தன் பழைய ராஜ்யத்தில் தன்பாலிருக்கும் போர்வீரர்களுடைய கையில் இருக்கும்படியாக ஏற்பாடுகள் செய்துகொள்ள வேண்டும்.

பிஸ்டோர்யாவில் கக்ஷிபேதங்களைத் தூண்டிவிடுவதும் பைஸாவில் கோட்டை கட்டுவதும் அவ்விடங்களில் அரசர்கள் தங்கள் ஆட்சிச் சுலபமாக நிலைபெறச் செய்வதற்கு அவசியமானவை என்று நம் முன்னோர்களும் இன்னும் அறிவிற் சிறந்த பெரியோர்களும் கூறுவது

வழக்கம். இதற்காகச் சிலர் தம் வசமுள்ள நாடுகளில் பிரித்தாளும் தந்திரத்தை உபயோகித்தார்கள். அக்காலத்தில், இத்தாலியின் பல ராஜ்யங்கள் சமமான பலம் பொருந்தியிருக்கையில், இம்முறை நன்றாக உபயோகிக்கப்பட்டது. ஆனால் அது இக்காலத்துக்கேற்ற நீதியல்ல. இம்மாதிரியாகச் சிருஷ்டிக்கப்பட்ட பிரிவுகள் நன்மையைத் தருவதேயில்லை. அதற்கு மாறாகச் சத்ரு வருமபோது, இம்மாதிரிக் கட்சி பேதங்களையுடைய நகரங்களை உடனே இழக்க நேரிடும். பலஹீனமான கட்சி எதிரியுடன் சேர்ந்துகொள்ளும். மற்றக் கட்சி நிலைநிற்காது.

வெனிஷியர்கள் மேற்குறிப்பிட்ட உத்தேசங்களால் தூண்டப்பட்டுத்தானோ என்னவோ, தங்கள் ஆட்சியின் கீழிருந்த நாடுகளில் குவெல்ப் (Guelf) கட்சியினரையும் கிப்பலின் (Ghibbeline) பிரிவினரையும் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தனர். இரத்தம் சிந்துவதற்கு இடந்தரவில்லை என்றாலும், ஜனங்கள் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொள்வதற்கு ஊக்கமளித்து வந்தார்கள். அவர்களுக்குள்ளேயே சச்சரவு செய்துகொண்டிருந்தால், தங்களுக்கெதிராகக் கிளம்பமாட்டார்களென்று வெனிஷியர்கள் குடிகளுடைய வேற்றுமைகளுக்குத் தூபம் போட்டு வளர்த்துக்கொண்டு வந்தார்கள். இதனால் பலன் கிடைக்கவில்லை. வாய்லாவில் தோல்வியடைந்தவுடன், அக்குடி மக்களில் ஒரு பகுதியினர் துணிவடைந்து ராஜ்ய முழுவதையும் கைப்பற்றிக் கொண்டுவிட்டனர். மித்திரபேதம் செய்வது அரசனுடைய பலக்குறைவைக் காண்பிக்கிறது. ஏனெனில் பலமுள்ள நாடுகளில் இவ்வேற்றுமைகள் அனுமதிக்கப்படமாட்டா. இவை சமாதான காலங்களுக்குத்தான் சரி. அப்போது இவ்வுபாயங்களினால் குடிகளை நிர்வகிப்பது எளிதாயிருக்கும். யுத்தம் நேர்ந்துவிட்டால் இக்கொள்கையின் பயனற்ற தன்மை உடனே விளங்கிவிடும்.

கஷ்டங்களையும் எதிர்ப்பையும் ஜயிப்பதால், அரசர்கள் சந்தேகமின்றிப் பெருமையடைகிறார்கள். பரம்பரையரசனைவிடப் புதிய மன்னனுக்குக் கீர்த்தி அதிக அவ

சியமாக விருக்கிறதாகையால், அதிர்ஷ்ட தேவதை ஒரு புதிய அரசனைச் சிறப்புறச்செய்ய விரும்புங்கால், அவனுக்கு விரோதிகளை உண்டாக்கி, அவனை யுத்தம் புரியும்படி கட்டாயப் படுத்துகிறது. அவன் யுத்தத்தில் வெற்றிமாலை சூடிப் பகைவர்களால் கொண்டுவந்து வைக்கப்பட்ட புகழேணியின் வழியே ஏறிச்சென்று கீர்த்தியின் சிகரத்தை அடைகிறான். ஆகையால் ஒரு அரசன் சமயம் வாய்த்தபோது துவேஷத்தைத் தூண்ட வேண்டும். அந்தத் துவேஷத்தை அடக்குவதால் அவனுடைய கீர்த்தி பெருகும் என்று பலர் கருதுகிறார்கள்.

அரசர்கள், சிறப்பாகப் புதியவர்கள் தாங்கள் புதிதாக ராஜ்யத்தை ஜயித்த சமயத்தில் தங்களிடம் உண்மையுடன் நடந்துகொண்டவர்களைவிடத் தாங்கள் சந்தேகத்துடன் நோக்கியவர்களை அதிக விசுவாசமும் உபயோகமும் உள்ளவர்களாகக் காண்கிறார்கள். ஸீனா (Scina)வின் அரசனாகிய பாண்டால்போ பெட்ருசி (Pandolfo Petrucci) இதரர்களுடைய உதவியைக் காட்டிலும் தான் முதலில் சந்தேகித்தவர்களுடைய சகாயத்தையே அதிகமாய்ப் பெற்றுத் தன்ராஜ்யத்தை ஆண்டுவந்தான். இதைப்பற்றி அதிகம் கூறினால், இடைச்செருகல் ஆகும். இதுமட்டும் கூறுவேன். புதிய அரசாங்கத்தின் ஆரம்பகாலத்தில் பகைவர்களாயிருந்தவர்கள் தங்களுடைய நிலைமையைக் காப்பாற்றிக் கொள்வதற்கு ஆதரவு வேண்டுகிறவர்களாயிருந்தால், அரசன் அவர்களை எளிதில் வசப்படுத்திக் கொள்ளலாம். தங்களைப் பற்றி அரசன் கொண்டிருக்கும் கெட்ட அபிப்பிராயத்தைத் தங்கள் செய்கைகள் மூலம் மாற்ற வேண்டியவர்களாயிருப்பதால், அவர்கள் நன்றி விசுவாசத்துடன் உழைத்தாகவேண்டும். ஒருவிதப்பயமுமின்றிப் பத்திரமாகவிருந்து அரசனுக்குச் சேவை செய்கிறவர்கள் அவனுடைய அக்கரைகளில் அசட்டையாகவிருப்பார்கள்.

ஒரு புதிய நாட்டை அந்நாட்டினரின் இரகசிய உதவியினால் கைப்பற்றிய ஒரு புதிய அரசன், அந்நாட்டி

னர் எந்த நோக்கங்களைக் கொண்டு தனக்கு ஆதரவளித்தார்கள் என்பதை நன்றாக யோசிக்கவேண்டும் என்பதை இங்கே ஞாபக மூட்டுகிறேன். அரசன்பாலுள்ள இயற்கையான அன்பினாலன்றி ஏற்கனவே தங்களுடைய அரசாங்கத்தின் தன்மையைக் கண்டு அதிருப்தியுற்றுப் புதிய அரசனுக்குடந்தையாக விருந்தார்களென்றால், அவர்களுடைய நட்பைக் காத்துக்கொள்வது சிரமமாயிருக்கும். ஏனெனில், அவர்களைத் திருப்திசெய்வது முடியாத காரியம். இதன் காரணத்தைப் பழையனவும் புதியனவுமாகிய திருஷ்டாந்தங்களைக்கொண்டு பரீக்ஷித்துப் பார்ப்போமாயின், பழைய நிலைமையில் திருப்தியுடனிருந்து முதலில் அரசனுடைய பகைவர்களாயிருந்தவர்களுடைய நல்லுறவைப் பெறுவது, திருப்தியற்றவர்களாயிருந்து அரசனுடைய சிநேகிதர்களாய் அவன் ராஜ்யத்தை ஜயிப்பதற்குத் துணைபுரிந்தவர்களுடைய நட்பைப் பாதுகாத்தலைவிட, எவ்வளவோ எளிது என்பது விளங்கும்.

தங்கள் ராஜ்ய பாரத்தைப் பத்திரத்துடன் வகிக்கவும், சூழ்ச்சி செய்பவர்களை ஊறத்துக்குள் வைப்பதற்கும், திடீரென்று எதிரிகள் தாக்குதல் ஏற்பட்டால் பத்திரமான அடைக்கல ஸ்தலமாக உபயோகிப்பதற்கும், கோட்டைகள் கட்டுவது மன்னர்களுடைய வழக்கம். இது பழையகாலாய் வழக்கமாகையால், இதை ஒப்புக்கொள்ளவேண்டும். இருந்தாலும் நம் காலத்தில் மெஸ்ஸர் நிகோலோ விடல்லி, ஸிட்டாடி காஸிலோ (cittadi castello)வைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அங்கே இரண்டு கோட்டைகளை இடித்தான். விஸர் போர்ஜியாவால் நாட்டைவிட்டு விரட்டப்பட்டிருந்த அர்பினோ சிற்றரசனை கிட் உபால்டோ (Guid' Ubaldo) தன் சமஸ்தானத்தைத் திரும்பி வந்தடைந்ததும், அம்மாகாணத்திலிருந்த கோட்டைகளையெல்லாம இடித்துத் தகர்த்துவிட்டான். அவையில்லாதிருந்தால் பகைவர்கள் தன்னைத் தோற்கடிக்க முடியாதென்று நினைத்தான். பென்டிவோக்லிகளும் பொலோனுவுக்கு வந்ததும் அப்படித்தான் செய்தார்கள். ஆகையால் கோட்டைகள் சந்தர்ப்

..த்துக்குத் தக்கபடி உபயோக்முள்ளவையாயும் உப யோகமற்றவையாயும் போகின்றன. ஒருவிதத்தில் நன்மையாயிருந்தால், இன்னொருவிதத்தில் கெடுதியாக விருக்கின்றன. ஆகையால் இதை இவ்வாறு விவரிக்க லாம்; அன்னியரைக் காட்டிலும் தம் சொந்தக் குடி களையே கண்டஞ்சுபவர்களுக்குக் கோட்டைகள் அவசி யம் வேண்டியவை. தன் ஜனங்களைவிட அயலாரிடத்தில் அதிகம் பயப்படுகிறவர்களுக்குக் கோட்டைகள் கூடாது. பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா கட்டிய மிலன் கோட்டை, அவனுடைய வம்சத்தினருக்கு எல்லாவற்றையும்விட அதிகத்தொந்தரவுகளைக் கொடுத்து வந்திருக்கிறது. இனியும் கொடுத்துக்கொண்டுதான் இருக்கும். ஆகை யால் அரசனுக்கு மிகச் சிறந்த அரணாயிருப்பது மக்க ளின் நல்லுணர்ச்சிதான். மக்கள் பகைத்தனராயின் மற்ற கோட்டைகள் அரசனைக்காக்கும் வலிமைபெற் றவையல்ல. மக்கள் அரசனை எதிர்த்தனராயின், அவர் களுக்குத் துணைபுரிய வரும் அயல் நாட்டார்களுக்குக் குறைவிராது. நமகாலத்தில் கோட்டைகள் எந்த அரச னுக்கும் பிரயோஜனமாக இருக்கக்காணோம். போர்லி சீமாட்டி (Countess of Forli)க்கு மாத்திரம் கோட்டை பயனுள்ளதாயிருந்தது. அவள் தன் கணவனை ஜிரோ லாமோ (Girolamo) பிரபு இறந்தவுடன் பொதுஜன எழுச்சியினின்றும் தப்பவேண்டி, மிலனிலிருந்து உதவி வரும் வரையில் கோட்டைக்குள் பத்திரமாயிருந்து சகா யம் கிடைத்ததும், மறுபடியும் ராஜ்யத்தைப் பிடித்துக் கொண்டாள். அந்த சமயம் குடிகளுக்கு அயல் நாட்டி லிருந்து துணைகிடைப்பதற்கு அனுகூலமாயில்லாமலிருந் தது. ஆனால் பிற்பாடு ஸீஸர் போர்ஜியா அவளை எதிர்த்தபோது, கோட்டைகள் பிரயோஜனமற்றுப் போயின. மக்கள் அவளிடம் வெறுப்புக்கொண்டிருந்த படியால், எதிரியுடன் சேர்ந்துகொண்டு விட்டார்கள். அப்பொழுதும் அதற்கு முன்னும் அவளுக்குக் கோட்டைகளைவிடக் குடிகளின் நல்லெண்ணம அதிகப் பாதுகாப்பை அளித்திருக்கும். ஆகையால் கோட்டை கள் கட்டுவோர், கட்டாதிருப்போர், எல்லோருமே புகழப் பட வேண்டியவர்களென்றே கூறுவேன். ஆனால் கோட்டைகளை நம்பிக் குடிகளுடைய பகைமையை லக்ஷி யம் செய்யாமலிருப்பவர்கள் குற்றங்கூறத் தக்கவர்கள்.

# இருபத்தோராவது அத்தியாயம்

## அரசன் கீர்த்தி பெறும் வழி

துணிகரமான காரியங்களில் பிரவேசித்துத் தன் தோள் வலியின் மாண்பைக் காட்டுவதுபோல் மன்னனுக்கு மதிப்பையளிக்கும் விஷயம் வேறில்லை. நம்காலத்தில் அரகான் சிற்றரசனும் ஸ்பெயின் அரசனுமான பெர்டினண்ட் (Ferdinand) இருக்கிறான். அவனை அநேகமாய்ப் புதிய அரசன் என்றே சொல்லலாம். ஏனெனில் சாமான்யமான அரசனாயிருந்தவன் கிறிஸ்தவ உலகிலேயே முதன்மையானவன் என்று சொல்லத்தக்க பேரும் புகழும் அடைந்திருக்கிறான். அவன் செயல்களெல்லாம் மிகப்பெருமை வாய்ந்தவையாயும், அவற்றிற் சில, அபூர்வமானவையாயுமிருக்கின்றன. தன் ஆட்சியின் ஆரம்பத்தில் க்ரானடா (Granada)வைத் தாக்கினான். அந்தத் துணிகரமான செயல்தான் அவனுடைய அரசாட்சிக்கு அஸ்திவாரம். முதலில் அவன் பிறர் தலையிடுவார்களென்ற பயமில்லாமல் சாவகாசமாக இதைச் செய்தான்; காஸ்டில் (Castile) பிரபுக்களை இந்தக் காரியத்தைக் கைக்கொள்ளச்செய்து அவர்கள் மனதுக்கு வேலை கொடுத்தான். யுத்தத்தைப் பற்றியே அவர்கள் நினைத்துக் கொண்டிருந்ததால், புதிய மாறுதல்களைக் குறித்து அவர்கள் நினைப்பதற்கில்லாமல் போயிற்று. பெர்டினண்ட் அரசனுக்கு அவர்களறியாமலே அவர்களிடம் அதிகாரமும் கீர்த்தியும் கிடைத்தன. சர்ச், ஜனங்கள், முதலியவர்களுடைய பணத்தைக் எடுத்துத் தன் சைனியங்களைப் பராமரிக்கலானான். அந்த நீடித்த யுத்தத்தின் பயனாய்த் தன் ராணுவ பலத்துக்கு அடிகோலிக் கொண்டான். அதுதான் பிற்காலத்தில் அவனுக்குப் பெரும் புகழ் தந்தது. மதவுணர்ச்சி என்ற சாக்கை வைத்துக்கொண்டு, இன்னும் பெரிய யுத்த முயற்சிகளை மேற் கொண்டதுடன் பக்தியின் பெயரால் பல கொடுமைகளை இழைத்துத் தன் ராஜ்யத்திலிருந்த மூர் (Moor) ஜாதியினரைக் கொள்ளையடித்து நாட்டைவிட்டுத் துரத்தினான். இதைவிடத் துக்ககரமானதும

விசித்திரமானதுமான வேறொரு திருஷ்டாந்தத்தைக் காண முடியாது. இதே சாக்கை வைத்துக்கொண்டு ஆப்பிரிக்கா மேல் படையெடுத்தான். இத்தாலியை ஆக்கிரமித்தான். சமீபத்தில் பிரான்ஸைத் தாக்கினான். இப்படி இடை விடாமல் ஏதேனும் பெரிய முயற்சிகளில் இவன் ஈடுபட்டிருப்பது, மக்களுடைய மனதை ஆச்சரியத்தில் ஆழ்த்தி ஸ்தம்பிக்கச் செய்திருக்கிறது. இம் முயற்சிகளின் பலன் என்னவாகும் என்று எதிர் பார்க்கிறதிலேயே அவர்களுடைய நினைவு இருக்கிறது. இவ் வீரச் செயல்கள் ஒன்றின் மேல் ஒன்றாய்க் கிளம்பிக் கொண்டே யிருக்கிறபடியால், ஜனங்களுக்கு அரசனை எதிர்க்கலாமென்று நினைப்பதற்குக்கூட அவகாசமே யில்லை.

மிலன் நகரத்தைச் சேர்ந்த மெஸ்ஸர் பேர்னபோ (Messer Bernabo)வைப்போல் உள் நாட்டு நிர்வாகத்திலும் தன் திறமையை நிரூபிப்பது அரசனுக்கு லாபகரமானது. நகர மாந்தர்களில் யாராவது ஒருவன் அசாதாரணமான நற்செய்கையோ அல்லது விபரீதமான கொடுஞ் செயலோ புரிந்தானென்று வைத்துக் கொள்வோம். அதற்குத் தக்கபடி அவனுக்கு அரசன் அளிக்கும் சம்மானம் அல்லது தண்டனை ராஜ்ய முழுவதும் அதே பேச்சாயிருக்கும்படி மிகவும் பெரிதாயிருக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக அரசன் ஒவ்வொரு விஷயத்திலும் சிலாக்கியமானவன் என்று புகழப் படவேண்டும்.

ஒரு அரசன் உண்மையான சிநேகிதன், அல்லது உண்மையான சத்ருவாயிருப்பதால், அதாவது ஒளிவு மறைவின்றிப் பட்டவர்த்தனமாகச் சிலருக்கு ஆதரவாயும், சிலருக்கு விரோதமாயும் இருப்பதால், அதிகமாகக் கௌரவிக்கப் படுவான். இரண்டு மில்லாமல் நடு நிலைமையிலிருப்பதை விட இக் கொள்கை, அதிக லாபமுள்ளது. இரண்டு அயல் அரசர்கள் ஒருவரோடொருவர் அடிதடியில் இறங்கும்போது, ஜயிக்கிறவன் அஞ்சக் கூடியவனாயிருந்தாலுமிருப்பான். இல்லாமலுமிருப்பான்.

எப்படியிருந்தாலும் இந்த அரசன் வெளிப்படையாக அவர்கள் சண்டையில் பிரவேசிக்க வேண்டியதுதான், ஏனென்றால் வெற்றியடைந்தவன் அச்சுறுத்தக் கூடிய வனாயிருந்தால், இவன் பாடு ஆபத்தாகும். வெற்றி பெற்றவனுடைய பொறிக்குள் இவன் சிக்கிக்கொள்வான் இதைக் கண்டு தோற்றவன் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைவான். இந்த ராஜாவுக்கு அடைக்கலமளிக்கவும், வரவேற்கவும் எவரும் முன்வர மாட்டார்கள். கஷ்ட காலத்தில் உதவிக்கு வராமல் சந்தேகப்படும்படியான நிலைமையிலிருந்தவனை, ஜயித்தவன் சிநேகிதனைப் பெற விரும்பமாட்டான். தனக்குப் பரிந்துகொண்டு யுத்தத்துக்கு வராததால், தோற்றவனும் அவனை வரவேற்க மாட்டான்.

ரோமர்களைத் துரத்துவதற்காக ஆன்டியார்கஸ் ஏதோலியர்களால் கிரீஸுக்கு அனுப்பப் பட்டான். அவன் ரோமர்களின் நண்பர்களான அக்கேயர்களிடம் ஆரடர்களை (orators) (வாக்கு வல்லமையுள்ள தூதர்களை) அனுப்பி அக்கேயர்களை நடு நிலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்டான். ரோமர்களோ அவர்களைத் தங்கள் பக்கம் சேர்ந்து போர் புரியுமாறு வேண்டிக் கொண்டார்கள். இவ் விஷயம் அக்கேயர்களுடைய சபையில் எடுத்துக் கூறப்பட்டது. அங்கே ஆண்டியாகஸின் தூதன் அவர்களை நடுநிலைமை வகிக்கும்படி வேண்டினான் அதற்கு ரோமர்களுடைய ராய பாரி அக்கேயர்களை நோக்கி, எங்களுடைய சண்டையில் நீங்கள் தலை நுழைத்துக் கொள்ளக் கூடாதென்று சொல்லப்பட்டது. அது உண்மைக்குப் புறம்பானது. இதில் நீங்கள் தலையிடாமலிருந்தீர்களானால், எல்லா ஆதரவும் மதிப்பும் போய் ஜயித்தவனுடைய பரிசு ஆய்விடுவீர்கள் என்றான்.

எப்போதும் சிநேகிதனாயில்லாதவனே ஒருவனை நடு நிலைமையிலிருக்கும்படி கோருவான், நண்பனாயிருப்பவன் தனக்குத் துணையாகக் கையில் ஆயுதமெடுத்துத் தன்னிடமிருக்கும் சிநேகத்தை ருஜிக்கும்படியே கேட்பான்.

திடசித்தமில்லாத அரசர்கள் அவ்வப்போது நேரும் அபாயங்களினின்றும் தப்பினால் போதுமென்று நடு நிலைமை உபாயத்தைத்தான் சாதாரணமாகக் கடைப் பிடிப்பார்கள். அதனால் பெரும்பாலும் தீங்கே விளைகிறது. ஒரு அரசன் பஹிரங்கமாய் ஒருவன் பக்கம் சேர்ந்து, அப்படி சேர்ந்த கட்சிக்கு ஜயம் கிடைத்ததாயின் ஜயித் தவன் இவனிடம் இவன் செய்த உபகாரத்துக்காகக் கடமைப் பட்டவனாகிறான். ஜயித்தவன் பலசாலியாயும் இந்த அரசன் அவனுடைய தயவில் இருப்பவனாயிருந் தாலும் பாதகமில்லை. இவனிடம் அவனுக்குச் சிநேக பந்தம் ஏற்பட்டுவிட்டது மல்லாமல் இப்படிப்பட்ட உப காரத்தை மறந்து, தீங்கிழைக்கத் துணியான். மனிதர்கள் அவ்வளவு நன்றிகெட்ட பதர்களல்லர். அதுவுமன்றி வெற்றி கிடைத்துவிட்டால், அதுவே எல்லாப் பாக்கியங் களையும் கொடுத்துவிடாது. ஜயித்தவன் நியாயத்தையும் நீதியையும் மதித்துத்தான் ஆகவேண்டும். அப்படியின்றி இந்த அரசன் சேர்ந்திருந்த கட்சி தோற்றுப் போனால் அப்போதும் அவன் இவனைத் தன் நிழலில் வைத்துப் பாதுகாக்கிறான். முடிந்தவரையில் உதவி செய்கிறான். மறுபடியும் அவன் தலையெடுத்தால் இவனைத் துணைவனாய்க் கொள்கிறான். இருவரில் எவன் ஜயித்தாலும் பயமில்லை என்றால் அப்போதும் ஒரு கட்சி யில் சேருவதுதான் இன்னும் புத்திசாலித்தனம். ஏனென்றால், இருவரில் ஒருவன் அடங்கிப் போவது இவனுக்கு லாபம், ஜயிக்கிறவன் அது தெரியாமல் சண்டை போட்டுக்கொண்டு எதிரியை அழித்துத் தன் பலத்தைக் குறைத்துக் கொள்கிறான், அவன் தான் காப் பாற்றிவிட வேண்டியிருப்பவனை அழிக்கிறான். அம் முயற்சிக்குத் துணை புரிவது இந்த ராஜாவுக்கு நல்லது. இவன் சேரும் கட்சி ஜயிக்காதென்று சொல்ல முடியாது. வெற்றி கிடைத்தபின் ஜயித்த மன்னன் இவன் கைக்குள் இருப்பான்.

ஒரு அரசன் நிர்ப்பந்தம் ஏற்பட்டாலன்றி தன்னிலும் பலசாலிகளுடன் சேர்ந்துகொண்டு ஒருவரை வருத்தக் கூடாது என்பதைக் கவனிக்கவேண்டும்.

ஏனென்றால் வலியவன் ஜயித்தால் இவனை அடக்கி ஆள்வான். அரசர்கள் கூடிய மட்டும் ஒருவர் இஷ்டத்துக்குக் கட்டுப்பட்டிருப்பதைத் தவிர்க்கவேண்டும். வெனிஷியர்கள் பிரான்ஸுடன் சேர்ந்து மிலன் டியூக்கை எதிர்த்தார்கள். அந்தக் கூட்டுறவை அவர்கள் ஏற்காமலிருக்கலாம். அதனால் வெனிஷியர்களுக்குப் பெரு நஷ்டம் விளைந்தது. ஆனால் போப்பும், ஸ்பெயினும் லாம்பார்டியைத் தாக்கச் சென்றபோது, பிளாரன்டின்களுக்கு நேர்ந்ததுபோல் விலக்கமுடியாத சந்தர்ப்பம் உண்டானால் மேற்குறித்தபடி ஒரு கட்சியில் சேரவேண்டும். எப்போதும் பத்திரமான முறைகளையே கையாளலாமென்று ஒரு ராஜாங்கமும் இறுமாப்படைய முடியாது. எல்லா முறைகளும் சந்தேகமானவை என்றே நினைப்பது நலம், இயற்கை விதிப்படி ஒரு கஷ்டத்தைத் தடுக்க முயன்றால் இன்னொன்றில் போய் மாட்டிக்கொள்ள வேண்டியிருக்கிறது. கஷ்டங்களின் இயல்பை அறிந்து இருப்பவற்றிற்குள் குறைந்த ஆபத்தைத்தரும் கஷ்டத்தைச் சுகமென்று கொள்வதுதான் புத்திமான்கள் சுபாவம்.

ஒரு அரசன் பிறருடைய திறமையை ரஸிப்பதாகக் காட்டிக் கொள்ளவேண்டும். சாமர்த்தியசாலிகளுக்குப் பக்ஷபாதம் காண்பித்துக் கலைகளிற் சிறந்தோரைக் கௌரவிக்க வேண்டும். தன் குடிகளை வியாபாரம், விவசாயம், இன்னும் அவர்கள் கைக்கொள்ளும் எல்லாத் தொழில்களையும், அமைதியுடன் பின்பற்றுவதற்கு ஊக்க மளிக்கவேண்டும். தன் வசமிருக்கும் நாட்டை பிறர் அபகரித்து விடக்கூடும் என்ற பயத்தால் நாட்டின் நலனை வளமுறச் செய்யாமல் இருந்து விடக் கூடாது. ஜனங்களும் வரிச்சுமைக்கஞ்சித் தத்தம் தொழில்களை ஆரம்பிக்காமலிருந்து விடலாகாது. இத்தொழில்களை நலமுறச் செய்வோருக்கும், நாடு அல்லது நகர முன்னேற்றத்துக்காக உழைப்பவர்களுக்கும் பரிசுகள் வழங்கவேண்டும். இதெல்லாம் தவிர வருஷம் முழுவதும் சௌகரியமான காலங்களில் திருவிழாக்களும் கண்காட்சிகளும் நிகழ்த்தி அதில் ஈடுபடச்

செய்வதும், ஜனங்களுக்கு உற்சாகமூட்டவேண்டியதும் அவசியம். ஒவ்வொரு நகரமும் சங்கங்களாக (Guilds)வும் வகுப்பு (Classes)களாகவும் பிரிந்திருப்பதால், அரசன் இக் கூட்டங்களை நன்கு கவனித்து அடிக்கடி அவர்களோடு பழகித் தன் மனிதத் தன்மையையும் தாராள புத்தியையும் வெளிக் காண்பிக்கவேண்டும். தன் ராஜ தோரணையை மட்டும் எந்த சந்தர்ப்பத்திலும் நழுவ விட்டு விடக்கூடாது.

## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

### அரசர்களின் அமைச்சர்கள்.

அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பது லேசான காரியமல்ல. அவர்கள் நல்லவர்களாயிருப்பதும், பொல்லாதவர்களா யிருப்பதும் அரசனுடைய திறமையில் இருக்கிறது. ஒரு அரசனைப் பார்த்தவுடன், அவனைப்பற்றி ஏற்படும் முதல் அபிப்ராயம், அவனோடுகூடவிருக்கும மனிதர்களைப் பார்த்து உண்டாகிறது. அவர்கள் தகுதியும் நம்பகமும் உடையவர்களாயிருந்தால் அரசனை அறிவாளி என்று நினைக்கலாம். ஏனெனில் அவன் அவர்களுடைய யோக்கியதையை அறிய வல்லவனாயும், அவர்களை விசுவாசத்துடன் இருக்கும்படி செய்யக்கூடிய சக்தியுடையவனாயும் இருக்கிறான். அமைச்சர்கள் இதற்கு நேர்மாறா யிருந்தால், அரசனைப்பற்றி மட்டமான அபிப்ராயமே உண்டாகிறது. அவன் செய்கிற முதல் தப்பிதம், தகுதியற்ற அமைச்சர்களைப் பெருக்கிக் கொள்வதுதான்.

ஸீனாவின் அரசனான மெஸ்ஸர் பான்டல்போ பெட்ருசி, மெஸ்ஸர் அன்டோனியோடா வெனப்ரோ (Messer Antonioda Venofro)வைத் தன் மந்திரியாகத் தெரிந்து கொண்டதற்காக அன்டோனிடோவைத் தெரிந்தவர்களால் புத்திமான் என்று போற்றப்பட்டான். புத்தியில் மூன்று விதங்களுண்டு; பிறருதவியின்றியே விஷயங்களைக் கிரகித்துக் கொள்ளுவது ஒன்று, பிறர் எடுத்துக் காட்டினால் தெரிந்துகொள்ளும் சக்தியுடையது மற

ஒன்று. தனக்காகவும் தெரியாது, சொன்னாலும் தெரியாது என்னும் விதம் மூன்றாவது. முதலாவது மிகச் சிறந்தது, இரண்டாவதும் சிறந்ததே, மூன்றாவது விதம் மோசமானது. ஆக்வே பாண்டால்போ முதல்தரமானவனா யில்லாவிட்டாலும் இரண்டாந்தரமானவனாய் இருந்தானென்று ஏற்படுகிறது. பிறர் செய்கைகளில் நல்லது கெட்டது எவை என்று அறிந்துகொள்ளும் சக்தி சுயமாக இல்லாவிட்டாலும் அயலார் மூலமாக வருவதால் தன் மந்திரியின் காரியங்களிலும் நியாய அநியாயங்களை உணர்ந்து, நியாயமானவற்றிற்கு ஊக்கமளித்து அநியாயங்களைத் திருத்தமுடிகிறது. மந்திரி அப்படிப்பட்ட அரசனை ஏமாற்ற முடியாதாகையால் நல்லவனாக இருந்துதான் ஆகவேண்டும்.

அமைச்சனை அறிந்துகொள்ள விரும்பும் அரசனுக்குத் தவறாத முறை ஒன்றிருக்கிறது. அவன் தனது அரசனை விட்டுத் தன்னையே பெரிதாக மதித்து அரசனுடைய லாபத்தில் அக்கறையின்றித் தன்னுடைய லாபத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பதாகத் தெரிந்தால், அப்படிப்பட்டவன் ஒருக்காலும் நல்ல மந்திரியாகமாட்டான். அவனை நம்பவே முடியாது. பிறருடைய ராஜ்யத்தை நிர்வகிக்கிறவன், தன்னைப் பற்றி நினைக்கவேகூடாது, அரசனுடைய நன்மையையே நாடவேண்டும். அரசனுக்குச் சம்பந்தமில்லாதவற்றில் கவலை எடுத்துக் கொள்ளக் கூடாது. அரசனும் அமைச்சனுடைய விசுவாசத்தை ஸ்திரமாக்கிக் கொள்வதற்காக அவனைக் கௌரவித்துச் செல்வங்களை அளிக்கவேண்டும். இவனை அன்புடன் நடத்தி பெருமைகளை வழங்கிப் பொறுப்பான வேலைகளை அவனிடம் ஒப்புவிக்கவேண்டும். வேறுசெல்வங்களையும் கௌரவங்களையும் அவன் தேடிச்செல்லாத முறையில் அவனுக்கு எல்லாம் குறைவறச்செய்து வரவேண்டும். அரசனும் அமைச்சனும் இவ்வித உறவை மேற்கொண்டவர்களாயிருந்தால் பரஸ்பரம் நம்பிக்கையுடன் இருக்கலாம்; அப்படியில்லாவிட்டால் இருவரில் ஒருவருக்கு எப்போதும் கெடுதல்தான்.

# இருபத்து மூன்றாவது அத்தியாயம்.

## முகஸ்துதி செய்வோரைத் திரஸ்கரிப்பதின் அவசியம்.

நான் இங்கு ஒரு முக்கியமான விஷயத்தைக் கூறத் தவறலாகாது. அரசர்கள் மிகவும் சிரமப்பட்டே தடுக்கக்கூடிய ஒரு தவறைக் குறிப்பிடவேண்டும். அது அவர்கள் பகுத்தறிவை உபயோகிக்காமல் தகுதியற்றவர்களைத் தங்களோடு சேர்த்துவைத்துக் கொள்வதால் விளைவது. இது முகஸ்துதி செய்வோரைப் பற்றியது. ராஜ சபையில் முகஸ்துதிக்காரர்களுக்குக் குறைவிராது. மனிதர்களுக்கு சகஜமாகவே தங்களுடைய காரியங்களைப் பற்றிப் பெருமையுண்டு; அக்காரியங்களின் மேன்மையைப்பற்றித் தங்களைத்தாங்களே ஏமாற்றிக் கொள்வார்கள். ஆகையால் இக்கொடிய நோயினின்றும் தப்புவது கஷ்டம். இந்நோயினின்றும் தப்ப விரும்புவோர், பிறருடைய அலக்ஷியத்துக்கு உள்ளாக வேண்டிவரும். முகத்துக்கெதிராக உள்ளதைச் சொன்னால் கோபம் வராது என்று தெரியப்படுத்துவதைத் தவிர முகஸ்துதியைத் தடுப்பதற்கு வேறு வழி இல்லை. ஒவ்வொருவனும் அரசனுடைய முகத்துக்கெதிராக உண்மையை உரைக்கக் கூடுமானால், அரசன் அவர்களுடைய மரியாதையை இழக்க நேரிடும். ஆகவே அறிவாளியான அரசன் மூன்றாவது வழியைக் கடைப்பிடிக்க வேண்டும். தன் சபையில் அறிவிற்சிறந்தவர்களை அழைத்து வைத்துக்கொள்ளவேண்டும். அவர்களுக்கு மட்டுமே தன்முன்னிரில் உள்ளதை ஒளியாமல் உரைக்கும் உரிமையைத் தரவேண்டும். அதுவும் அரசன் எதைப்பற்றிக் கேட்கிறானே, அதைப்பற்றிமாத்திரம் அபிப்பிராயம் கூறும் சுதந்திரத்தைக் கொடுக்கவேண்டுமே தவிர, மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசவிடக்கூடாது. ஆனால் அரசன் அவர்களுடைய அபிப்பிராயத்தை எல்லா விஷயங்களிலும் கலந்து கொண்டு பிறகு தன்னிஷ்டப்படி முடிவுக்கு வந்து தன் நிர்மானத்தில் உறுதியுடனிருக்கவேண்டும். இந்தச் சபைகளிலும் தனித் தனியாக ஒவ்வொருவரிடமும் அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு யதார்த்தமாகப் பேசு

கிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு அது தனக்குப் பிரியமான்து என்பதைத் தெளிவுறக் காண்பிக்க வேண்டும். அவர்களைத் தவிர வேறெவரையும் யோசனை கேட்கக் கூடாது. தானே ஆற அமரயோசித்து உறுதியாகத் தீர்மானிக்கவேண்டும். அப்படியில்லாமல் இதற்கு மாருக நடக்கிறவன், முகஸ்துதிக்கு வசப்பட்டு அவசர புத்தியுடன் நடக்கிறவனென்றும் விதவிதமான யோசனையைக் கேட்டுச் சபலசித்தமுடையவனுயிருப்பவன் என்றும் பழிக்கப்படுவான்.

நவீன காலத்திய திருஷ்டாந்தம் ஒன்று கொடுக்கிறேன். இப்போதிருக்கும் சக்கிரவர்த்தி மாக்ஸிமிலியனுக்கு வேண்டியவனுன ப்ரிலுகா (PreLuca) என்பவன் சக்கிரவர்த்தியைக் குறித்துப் பேசுகையில், "மாக்ஸிமிலியன் ஒருவரையும் ஆலோசனை கேட்பது கிடையாது. தன்னிஷ்டப்படியும் ஒன்றும் செய்தது கிடையாது" என்று சொன்னுன். இது முன் சொல்லப்பட்ட நீதிக்கு விரோதமாய் நடந்ததால்வந்தது. அந்தச் சக்கிரவர்த்தி இரகசியமாயிருக்க விரும்புகிறவனுகையால் தன் யோசனைகளை ஒருவரிடமும் சொல்லுவதுமில்லை, ஒருவருடைய புத்திமதியைக் கேட்பதுமில்லை. ஆனுல் அவன் தன் எண்ணங்களை நிறைவேற்றப் புகும்போது அவை வெளிப்பட்டுவிடுவதால் அவனைச் சுற்றி யிருப்பவர்கள் அதை எதிர்த்து அரசன் அந்த யோசனைகளைக் கை விட்டுவிடும்படி எளிதில் செய்து விடுகிருர்கள். இவ்வண்ணம் ஒருநாள் செய்கிற காரியத்தை மறுநாள் மாற்றும்படி ஆகிறது. அவன் என்ன செய்ய நினைக்கிருன், எதை விரும்புகிருன் என்பது யாருக்குமே தெரிகிறதில்லை. அவனுக்கு நிதான புத்தி யிருக்கிறதா என்பதையும் நம்ப முடிவதில்லை.

ஆகையால் அரசன் ஆலோசனை கேட்கவேண்டும், ஆனுல் தனக்கெப்பொழுது இஷ்டமோ, அப்பொழுது கேட்கவேண்டுமே தவிர, மற்றவர்கள் வேண்டும்பொழுதல்ல. தானுக ஆலோசனை கூற வருவோருக்கு இடந்தாலாகாது. அவன பெரிய கேள்விக்காரனுக

இருக்க வேண்டும். தான் விசாரிக்கும் விஷயங்களைக் குறித்த உண்மைகளைப் பொறுமையுடன் கேட்க வேண்டும். உண்மையான பதிலை உரைக்க முன்பின் பார்ப்பவர்களிடம் அரசன் மிகவும் கோபம் கொள்ள வேண்டும். அரசன் புத்திமானென்று பெயர் பெறுவது அவனுடைய சுயபுத்தியாலன்று, நல்ல அமைச்சர்கள் இருப்பதால்தான் என்று சிலர் எண்ணுகிறார்கள். அது தவறான எண்ணம். சுயமாகவே புத்தி இல்லாதவன் இதரர்களுடைய நல்ல ஆலோசனைகளைக் கேட்கமாட்டானென்பது மறுக்கமுடியாத உண்மை. ஒருவேளை, சகல விஷயத்திலும் அடக்கியாளும் புத்திமான் ஒருவன் கையில் தன்னை ஒப்புவித்திருந்தால் என்னவோ, அப்படியிருந்தால் அவன் நன்றாய் ஆட்டுவிக்கப்படலாம். ஆனால் அது நீடித்து நிற்காது. அந்த அதிகாரி சீக்கிரத்தில் ராஜாவை ராஜ்யத்தை விட்டுத் துரத்திவிடுவான். அரசன் மிகுந்த புத்திமானாகவில்லாவிட்டால் பலர் கூடிய சபைகளில் ஒற்றுமையை ஏற்படுத்தி ஒருமனப்பட்ட அபிப்பிராயங்களைப் பெறவியலாது. அவர்களெல்லோரும் சுயநலத்தையே கருதுவார்கள். சாதாரண அறிவுள்ளவனுக்கு அவர்களைத் திருத்தவாவது புரிந்துகொள்ளவாவது சாமர்த்தியம் இருக்காது. அது அப்படித்தான் இருக்க முடியும். ஏனெனில் உண்மையுடனிருக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டாலொழிய, மக்கள் கபடிகளாய்த்தான் இருப்பார்கள். ஆகையால் நல்ல ஆலோசனைகளுக்கெல்லாம் அரசனுடைய சிறந்த புத்திதான் ஆதாரமென்றும், பிறருடைய புத்திமதிகளால் அரசன் அறிவாளியாய்விடவில்லையென்றும் முடிவாக ஏற்படுகிறது.

# இருபந்தினான்காவது அத்தியாயம்

## இத்தாலியின் அரசர்கள் தங்கள் ராஜ்யங்களை இழந்த காரணம்

இதுவரை கூறிவந்தபடி திறமையாக நடந்து வந்தால், புதிய அரசன் பரம்பரை மன்னனைப்போல் காணப் படுவதுமன்றி, தொன்று தொட்டு நாட்டில் அரசு செலுத்தும் பரம்பரையினரை விடப் பத்திரமும் உறுதியு முடையவனு யிருப்பான். பரம்பரை அரசனை விடப் புதிய ராஜா ஜனங்களால் அதிகமாய்க் கவனிக்கப்படு கிறான். அவனுடைய செயல்கள் நல்லவையா யிருந்தால் மக்கள் சுலபத்தில் வசப்பட்டுவிடுகிறார்கள். அவன் புராதானமான வம்சத்திலிருந்து வந்திருந்தால், இருக்கக் கூடியதைவிட அதிகமாக அவன் நற்செய்கைகள் ஜனங்களை அவனிடம் அன்பு பாராட்டச் செய்கின்றன. ஏனென்றால், மக்கள் சென்றுபோனவற்றைக் குறித்து அதிகமாய்க் கவலைப்படுவதில்லை. தற்கால நிலைமை நன்று யிருந்துவிட்டால் அவர்கள் சௌக்கியமாக அதற்கு மேல் ஒன்றையும் தேடாமல் இருந்துவிடுகிறார்கள். அரசன் மற்ற விஷயங்களில் குறையுள்ளவனுயில்லா விட்டால் அவனைப் பாதுகாப்பதற்காக ஜனங்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். அரசனுக்கு இரட்டிப்புக் கீர்த்தி கிடைக்கும். புதிய ராஜ்யத்தை நிறுவியது ஒன்று, அந்த ராஜ்யத்தை நல்ல சட்டங்கள் நல்ல சேனுபலம், நல்ல சிநேகிதர்கள், நல்ல திருஷ்டாந் தங்கள் முதலியவற்றால், அழகுபடுத்தி உறுதி செய்தது மற்றொன்று. பிறவியினால் ராஜாவாயிருப்பவன் பகுத் தறிவுடன் நடந்து மேறகூறிய நீதிகளை அனுசரித்து வராவிட்டால், ராஜ்யத்தைத் தோற்று இரட்டிப்பு அவ மானத்தையடைவான்.

நம்முடைய காலத்தில் இத்தாலியில் ராஜ்யாதிகா ரத்தை யிழந்த நேபிள்ஸ் அரசன், மிலன் டியூக், போன்ற வர்களைப் பற்றி யோசித்தால், அவர்களெல்லாரிடமும் பொதுவாகச் சேனுபலம் சம்பந்தமான குறையிருந்

தனைதக் காண்கிறோம். அவர்களிற் சிலருக்கு ஜனங்கள் விரோதமாக விருந்தார்கள். அல்லது ஜனங்கள் நல் லுணர்ச்சியுடனிருந்தால், பிரபுக்களை நம்பமுடியாமலிருந் தது. இந்தக் குறைகள் மட்டுமில்லாதிருந்தால் யுத்த ரங்கத்தில் படைகளை வைத்து நிர்வாகம்செய்யப் போதிய பலமுடைய தேசங்கள் தோற்றுப்போகமாட்டா. மாஸி டோன் நாட்டைச் சேர்ந்த பிலிப் (மஹா அலெக்ஸாண்ட ருடைய தந்தையல்ல, டைஸ்க்வின் டினஸைால் ஜயிக்கப் பட்டவன்) தன்னை ஆக்கிரமித்த தேசங்களான ரோமுக் கும் கிரீஸுக்கும் சமானமான பெரிய ராஜ்யத்தையுடைய வனுயில்லை. ஆனால் போரில் உத்ஸாகமும், ஜனங்களை நல்லதனப் படுத்தும் சாமர்த்தியமும், பிரபுக்களைப் சரிப் படுத்தி வைக்கும் சாதுர்யமும் இருந்ததால், அந்தத் தேசங்களுடன் நேர்ந்த யுத்தத்தைப் பல வருஷங்கள் தாக்குப் பிடித்துவந்தான். கடைசியில் சில நகரங்களை இழக்கும்படி ஆயிற்று. என்றாலும் தன் ராஜ்யத்தை யாவது மிகுத்திக் கொள்ள முடிந்தது.

ஆகவே நம் அரசர்கள் பல வருஷங்களாகத் தம் வசமிருந்த ராஜ்யங்களைத் தோற்றதற்குத் தங்கள் விதியை நிந்தித்துக்கொள்வதற்குப் பதிலாகத் தாங்கள் கடமை களை அலக்ஷியம் செய்த பிழையையே நொந்துகொள்ள வேண்டும். அமைதியான காலங்களில் காலம் மாறும் என்ற யோசனையே இல்லாமலிருந்துவிட்டு (மனிதர்களே, சாதாரணமாகக் காற்று சாந்தமாக வீசுகையில் புயலைப் பற்றி நினைப்பதில்லை) கஷ்ட காலம் வந்தபோது, தற் காத்துக்கொள்ளவும் முயலாமல் ராஜ்யத்தை விட்டு ஓடிப்போக மனங்கொண்டனர். ஜயித்தவர்கள் செய்கிற அட்டூழியங்களைக் கண்டு ஆத்திரமடைந்துக் குடிகள் மறுபடியும் தங்களை அழைப்பார்களென்று எதிர்பார்த் தார்கள். மற்ற வழிகள் ஒன்றுமே இல்லாவிட்டால் இந்த முறை சரிதான்; ஆனால் வேறெவ்விதமாயும் முயன்று பார்க்காமல் ராஜ்யங்களை மாற்றானுக்கு விட்டு விட்டு ஓடியது மன்னிக்க முடியாத தவறு. யாராவது தன்னைத் தூக்கிவிட வருவார்களென்று நம்பி, ஒருவரும்

கீழே விழ விரும்புவதில்லை. ஜனங்கள் மறுபடியும் அழைத்தாலும் அழைக்கலாம்; இல்லாவிட்டாலும் இல்லை. அப்படி அவர்கள் மறுபடி அழைத்து வைத்துக்கொண்டால் கூட, அதில் பத்திரம் இருக்காது. ஏனெனில் அரசன் தன் முயற்சியால் ராஜ்யத்தைப் பெற வகையின்றிக் கோழையைப்போல் பிறர் சகாயத்தால் பெற்றவனாகிறான். அரசன் தன் திறமையினால் தன்னந்தனியனாக நின்று தற்காத்துக்கொள்ளுதலே நன்று. அதுவே நிச்சயமும் நிலையானதுமான தற்காப்பு.

## இருபத்தைந்தாவது அத்தியாயம்

### மக்களுடைய காரியங்களில் விதியின் செயலும் அதை வெல்லும் விதமும்

இவ்வுலகில் நடைபெறுவதெல்லாம் விதியும் கடவுளும் ஆட்டிவைத்தபடி நடக்கிறதென்றும் அதை மனிதர்கள் மதியால் மாற்றமுடியாதென்றும் நம்பி, அதற்கு மாற்றே கிடையாதாகையால், அதை நிவர்த்திப்பதற்கு வீண்முயற்சி செய்யாமல் அதிர்ஷ்டம்போல் நடக்கட்டுமென விட்டுவிட வேண்டியதே என்றும் பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இதுகாறும் நடந்திருப்பவையும் நடப்பவையுமான மனித யத்தனத்துக்குப் புறம்பான மகத்தான மாறுதல்களைக்கண்டு, நம் காலத்தினர்கள் இக்கொள்கையை மிக மிக உறுதியாக நம்புகிறார்கள். சில சமயங்களில் யோசித்துப் பார்க்கும்போது எனக்கும் அதைக் கொஞ்சம் நம்பத்தோன்றுகிறது. இருந்தாலும் நமது இச்சா சக்தியையும் அடியோடு அழித்துவிடலாகாது. நமது காரியங்களில் பாதியை விதி செலுத்துகிறது என்பது உண்மையே. ஆனால் மற்றப் பாதியை நாமே நடத்திக்கொள்ள அதிர்ஷ்டம் இடந்தருகிறது. விதி பூர்ண பிரவாகத்திலிருக்கும் ஒரு நதியைப் போன்றது. வெள்ளம் உக்கிரத்துடன் கரைபுரண்டோடும்போது, மாடமாளிகைகளையும்

கரைக் குடிசைகளையும் அழித்து, வானளாவிய விருக்ஷங்களை வேருடன் வீழ்த்தி, மண்ணையும் வண்டலையும் இக்கரையிலிருந்து அக்கரைக்கும், எதிர்க்கரையிலிருந்து இக்கரைக்கும் கொண்டு சேர்க்கிறது. வெள்ளத்தின் முன் நிற்கமாட்டாமல் அனைவரும் பயந்தோடுகின்றனர். அதன் வேகத்தை எதிர்க்க முடியாமல் ஒவ்வொரு வஸ்துவும் தாழ்ந்து போகவேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட சுபாவமுள்ளதாயிருந்தாலும்கூட, அந்தி சாந்தமாகவிருக்கையில், மனிதர்கள் கரைகள், அணைகள், முதலியவற்றால் பாதுகாப்புகளைச் செய்துகொள்ளக்கூடும். அப்போது வெள்ளம் புரண்டு வருங்கால் தண்ணீர் வாய்க்கால்களுக்குப் பாய்ந்து வேகம் குறைந்திருக்கும்; அல்லது அதன் தீக்ஷண்யம் அவ்வளவு பயங்கரமும் அபாயமுமாய் இல்லாமலிருக்கும். அம்மாதிரியேதான் விதியின் சமாசாரமும். அதை எதிர்க்க ஒரு உபாயமும் தேடப்படாமலிருக்குமிடத்தில் அது தன் சக்தியைக் காட்டுகிறது. தன்னையடக்குவதற்குக் கரைகளும் அணைகளும் இல்லை என்று தெரிந்தவிடத்தில் அது தன் கோபாவேசத்தைத் தங்குதடங்கலின்றிச் செலுத்துகிறது. மாறுதல்களை யிருப்பிடமாகக் கொண்ட இத்தாலி எவ்விதக் கரைகளும் அணைகளும் இல்லாத தேசம் என்பதைக் காண்கிறோம்.

ஜெர்மனி, ஸ்பெயின், பிரான்ஸ், ஆகிய நாடுகளைப் போல் தகுந்த முறைகளில் காக்கப்பட்டிருந்தால், இந்தக் கரைபுரண்ட வெள்ளம் இம்மிகப் பெரிய மாறுதல்களை விளைவித்திருக்காது; ஒருவேளை வெள்ளமே வந்திராமற் கூட விருந்திருக்கும்.

பொதுவாக விதியை எதிர்ப்பதைப் பற்றி இவ்வளவு கூறியது போதும். குறிப்பிட்ட சிலரைக் குறித்துக் கூறுகிறேன். ஒரு அரசன் தன் நடவடிக்கைகளிலும் பிறவற்றிலும் மாறுமலிருக்கும்போதே, இன்று அதிர்ஷ்டசாலியாயிருக்கிறவன் நாளை அழிவை அடைகிறான். அதற்குக் காரணம் இதுவரை விவரித்தது தான் என்பது என் எண்ணம். விதியின் மீதே பாரத்தைப் போட்டு

விட்டுச் சும்மா உட்கார்ந்திருக்கிற ராஜா அதிர்ஷ்டம் மாறும்போது நாசத்தை யடைகிறான். ஒருவனுடைய நடவடிக்கைகள் காலத்தின் ரீதிக்கு ஒத்தவாறிருந்தால் அவன் அதிர்ஷ்டசாலி யென்றும், காலத்தின் போக்குக்கு மாறாக விருந்தால், அவன் துரதிர்ஷ்ட சாலி யென்றும் நம்பவேண்டி யிருக்கிறது. மனிதன் தன் லக்ஷியத்தை யடைவதற்கு, அதாவது கீர்த்தியும் செல்வமும் பெறுவதற்குப் பல துறைகளிற் செல்கிறான்; ஒருவன் எச்சரிக்கையாயும், மற்றவன் ஆத்திரத்துடனும். ஒருவன் கடுமையாயும், மற்றவன் தந்திரமாயும்; ஒருவன் பொறுமையாகவும், மற்றவன் அதிற்கெதிரிடையாயும் நடக்கிறார்கள். இம் மாதிரி நேர்மாறான வழிகளிற் செல்வோரனைவருமே, தங்கள் லக்ஷியத்தைப் பெறலாம். அதிக ஜாக்கிரதையுடன் நடக்கும் இருவரில் ஒருவன் தான் நினைத்ததைப் பெறுகிறதையும், மற்றவன் முயற்சி வீணாவதையும் பார்க்கிறோம். அம்மாதிரியே வெவ்வேறான வழிகளில், ஒருவன் அதிக ஜாக்கிரதையுடனும், மற்றவன் ஆத்திர புத்தியுடனும் நடந்தும் இருவருக்கும் காரியம் ஜயமாக முடிவதையும் காண்கிறோம். இது காலத்தின் கதியைப் பொறுத்தது. அவர்கள் கையாளும் முறை அந்தக் காலத்தின் நிலைமைக்கு ஒத்ததாகவோ அல்லாமலோ இருப்பதுதான் அவர்கள் முயற்சியின் பலனுக்குக் காரணம். நான் இது வரையில் எடுத்துக் கூறியபடி, இதிலிருந்து வித்யாசமான வழிகளிற் சென்ற இருவர் ஒரே காரியத்தில் சித்திபெறுவ துண்டென்றும் ஒரே வழியில் முயன்ற இருவரில் ஒருவர் வெற்றியும் ஒருவர் தோல்வியும் அடைகிறது சகஜமென்றும் தெரிகிறது. அதிர்ஷ்டத்தின் வித்தியாசம்கூடக் காலத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது. உலகானுபவத்தை ஒட்டிச் சாவதானத்துடன் நடப்பவனுக்குக் காலமும் சந்தர்ப்பமும் ஒத்துக்கொண்டால் ஜயம் கிடைக்கும், காலமும் சந்தர்ப்பமும் பொருந்தாவிட்டால், நஷ்டம் கிடைக்கும். ஏனெனில் அவன் காலத்துக் கேற்றபடி தன் வழியை மாற்றுவதில்லை. சமயோசிதமாக நடக்கத் தெரிந்த புத்திமான்களைக் காண்பதே அரிது. இயற்

கைக்கு மாருக நடக்க வியலாததாலோ அல்லது இது வரை அனுசரித்த முறைகளில் வெற்றியைக் கண்டதால் அவற்றைக் கைவிட மனம் வராததாலோ அவர்கள் தங்கள் வழிகளை மாற்றிக் கொள்வதில்லை. ஆகையால் எச்சரிக்கை யுள்ளவனுக்குத் திடீரென்று ஒரு காரியத்தை உடனே செய்ய வேண்டிய சமயம் வந்தால், அதை எப்படிச் செய்வதென்று தெரியாது. அதனால் அவனுக்கு நஷ்டமுண்டாகும். ஒருவன் தன் இயற்கையைச் சமயோசிதம்போல் மாற்றிக்கொள்ளக்கூடுமானல் அதிர்ஷ்டம் மாறவே மாருது.

போப் இரண்டாவது ஜூலியஸ் ஒவ்வொரு விஷயத்திலும் அதிக அவசரக் காரனாயிருந்தான். காலம் ஒத்துக் கொண்டதால், எப்போதும் நல்ல பலனே கிடைத்து வந்தது. மெஸ்ஸர் ஜியோவானி பென்டி வோக்லி உயிருடனிருக்கும்போதே, பொலோனாவுடன் அவன் தொடுத்த முதல் யுத்தத்தை எடுத்துக் கொள்வோம். வெனிஷியர்களுக்கு அந்த யுத்தம் பிடிக்கவில்லை. ஸ்பெயின் அரசனுக்கும் அது இஷ்டமில்லை. பிரான்ஸ் அதைக் குறித்துப் பேச்சுக்கள் நடத்திக் கொண்டிருந்தது. அப்படியிருந்தும் போப் ஆவேசமும் ஆத்திரமு முடையவனாகையால் ஒருவரையும் எதிர்பார்க்காமல் தானே நேரில் அப்போரில் இறங்கிவிட்டான். இது ஸ்பெயினையும் வெனிஷியர்களையும சற்று நிதானிக்கச் செய்தது. வெனிஷியர்கள் பயந்து போனார்கள். ஸ்பெயின் நேபிள்ஸ் ராஜ்யத்தை மறுபடியும் அடைய வேண்டும் என்று ஆவலாயிருந்ததால், போப்பை எதிர்த்துக்கொள்ளத் தயங்கியது போப், பிரான்ஸ் அரசனுடைய துணையைப் பெற்றான். பிரான்ஸ் மன்னன் வெனிஷியர்களை அடக்குவதற்குப் போப்பின் சகாயத்தைப் பெற விரும்பியிருந்தானகையால் அவனுக்குத் தன் துருப்புகளைத் தர மறுப்பது வெளிப்படையாக மனஸ்தாபத்தைக் கிளப்புவதாகும் என்பதை அறிந்தவனாய்ப் போப்புக்கு உதவி புரிய முன் வந்தான். இவ்வாறு போப் ஜூலியஸ், தன் ஆத்திர புத்தியால், மஹா சாமர்த்தியசாலியான வேறு

எந்தப் போப்பும் செய்திருக்க முடியாத காரியத்தைச் சாதித்தான். வேறு பேர்கள் செய்திருக்கக் கூடிய மந்திரி ரோமை விட்டுப் புறப்படுமுன் சகல ஏற்பாடுகளையும் செய்து, எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி விட்டுப்போக வேண்டுமென்று, காத்திருந்தானாயின் அவன் எடுத்த காரியம் பலித்திராது. அப்போது போப்புக்குத் தன் உதவியை மறுக்கப் பிரான்ஸ் அரசனுக்கு ஆயிரம் சாக்குகள் கிடைத்திருக்கும். போப்பின் மனதில் மற்றவர்கள் ஆயிரம் வித பயங்களை ஊட்டியிருப்பார்கள். அவன் செய்த மற்ற காரியங்களும் இம் மாதிரியே அவசரத்துடன் செய்து முடிக்கப்பெற்றவை. அவற்றை இங்கே குறிப்பிடுதல் அவசியமில்லை. அவனுடைய அல்பாயுள்தான் எதிரிடையான பலனை அனுபவிக்கும் கதி அவனுக்கு வராமல் தடுத்தது. ஏனெனில் அவன் உயிரோடிருந்து சாவதானத்துடன் நடக்க வேண்டிய சமயம் தொடர்ந்து வந்திருந்தால் அவனுக்குத் தீங்கு விளைந்திருக்கும். அவனுடைய இயற்கையாக அமைந்து விட்ட ஆத்திர புத்தியை மாற்றிக் கொள்ள அவனால் முடிந்திராது.

முடிவாக, அதிர்ஷ்டம் மாறிக் கொண்டும் மனிதர்கள் ஒரே நிலையில் நின்று கொண்டும் இருப்பார்களாயின், அவர்களுடைய வழிகள் சந்தர்ப்பத்துக் கேற்றதாயின் வெற்றிகிடைக்கும், சந்தர்ப்பத்துக்கு விரோதமாயிருந்தால் தோல்வி கிட்டும். எச்சரிக்கையைவிட ஆத்திர புத்திதான் நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் அதிர்ஷ்ட தேவதை ஒரு ஸ்திரீ. அவளை அடிமை கொள்ளவிரும்புவோர் பலவந்தமாகத்தான் அவளை ஜயிக்கவேண்டும். நிதானமாக, ஏனோதானோ வென்றிருப்பவர்களை அவள் மதிப்பதில்லை; தைரியமும் வீரமும் உள்ளவர்களுக்கே அவள் தன்னை விட்டுக் கொடுக்கிறாள். ஒரு ஸ்திரீயைப் போலவே யௌவன புருஷர்களுடைய சகியாகவிருக்கிறாள். ஏனெனில் யுவர்கள் எச்சரிக்கை குறைந்தவர்கள், உக்கிரமும் ஆவேசமும் மிகுந்தவர்கள். அவளைத் துணிகரத்துடன் அடக்கி ஆட்கொள்வார்கள்.

# இருபத்தாருவது அத்தியாயம்

## முரட்டர்களான அன்னியரிடமிருந்து, இத்தாலியை விடுவிக்க வேண்டுகோள்.

இதுவரை கூறப்பட்ட விஷயங்களை யெல்லாம் நீச யோசித்த பின் எனக்குள்ளாகவே, இத்தாலியில் ஒரு புதிய அரசன் வருவதற்கு இது தக்க சமயமல்லவா வென்றும், விவேகமும் தக்க யோக்கியதையும் வாய்ந்த ஒருவனுக்குப் பெருமையைத் தருவதும் ஜனசமூகத்துக்கு க்ஷேமகரமாயுமுள்ள ஒரு புதிய ராஜாங்கத்தை நிறுவதற்குச் சந்தர்ப்பமளிப்பதாய் இத்தாலியின் நிலைமை இப்பொழுதிருக்கவில்லையா வென்றும் நினைத்துப் பார்த்தேன். புதிய அரசனுக்கு எத்தனையோ விஷயங்கள் அனுகூலமா யிருப்பதாயும், அத்தகைய முயற்சிக்கு இதை விட ஏற்ற சமயம் வேறு இருக்க முடியா தென்றும் எனக்குத் தோன்றுகிறது. நான் முன்னமே எடுத்துக் காட்டியபடி மோஸஸின் சக்தி வெளிப்படுவ தற்கு இஸ்ரவேலின் ஜனங்கள் எகிப்தில் அடிமைப் பட்டும், ஸைரஸின் மகத்துவமும் தீரமும் இடம் பெறு வதற்காகப் பாரசீகர்கள் மேதியர்களால் துன்புறுத்தப் பட்டும், தீஸியஸின் பெருமையைக் காட்டுவதற்கு ஆத னியர்கள் சிதறடிக்கப்பட்டும் இருந்தது அவசியமாயிருந் திருந்தால், தற்சமயம் ஒரு இத்தாலிய மேதாவியின் வல்லமை பிரகாசிப்பதற்காக இத்தாலி இப்பொழுது அடைந்துள்ள நிலைமைக்குத் தாழ்வது அவசியமாக இருந்தது. ஹிப்ருக்களைவிடக் கேடு கெட்ட அடிமைக ளாயும், பாரசீகர்களைவிட அதிகக் கொடுமைக்காளாகிய வர்களாயும், ஆதனியர்களைக் காட்டிலும் சிதறுண்டவர்க ளாயும், தலைமை, ஒழுங்கு, ஒன்றும் பெற்றிராமல் அடி பட்டும், கொள்ளையிடப்பட்டும் இத்தாலியர்கள் ஒவ் வொரு விதத்திலும் கஷ்டமனுபவித்து வருகிறார்கள்.

இதற்கு முன்னால் ஒருமுறை இத்தாலியை மீட்பதற் குக் கடவுள் ஒருவனை நியமிப்பார் என்ற நம்பிக்கையின் ரேகை ஒளிவீசியது. தன் முயற்சியின் சிகரத்திலிருக்கும்

போது அதிர்ஷ்ட தேவதை அவனை ஒரு புறமாய்த் தள்ளிவிட்டாள். இப்போது இத்தாலி குற்றுயிராயிருக்கிறது. லொம்பார்டியில் நடக்கும் கொள்ளையை அடக்கி, நேபிள்ஸிலும் டஸ்கனியிலும் தலைவிரித்தாடும் பணப்பேயின் அட்டகாசத்தையும் பகற்கொள்ளையையும் ஒழித்து, நெடுநாட்களாக ஆறாமலிருக்கும் புண்களை யாராவது வந்து ஆற்றமாட்டார்களா என்று காத்துக் கொண்டிருக்கிறது. இந்த முரட்டுத்தனமான கொடுமைகளையும் அவமானங்களையும் அகற்றித் தன்னை விடுவிப்பதற்கு யாரையாவது அனுப்பும்படி இத்தாலி கடவுளை இரந்து வேண்டுவதை பாருங்கள்! யாராவது வழி காட்டினால் எந்தத் தியாகத்துக்கும் முழுமனதுடன் சித்தமாயிருப்பதைப் பாருங்கள்! தன்னுடைய மீட்சிக்கு வேறுவழியின்றி இத்தாலி தங்கள் தலைமையையே நம்பியிருக்கிறது. தங்கள் வம்சம கடவுள் கிருபையையும் சர்ச்சின் ஆதரவையும் பெற்று, அதிர்ஷ்டமும் அதிகாரமும் மிக்கதாக விருப்பதுடன் சர்ச்சிற்கே இப்போது அதிகாரியாயும் இலங்குகிறது.

நான் இதுவரை சொல்லிவந்தவர்களுடைய வரலாறுகளையும் செயல்களையும் ஆலோசித்தீர்களாயின், இது ஒரு கஷ்டமாகத் தங்களுக்குத் தோன்றும். அவர்கள் அபூர்வமும அற்புதமுமானவர்கள் என்றாலும் அவர்களும் மனிதர்கள்தானே? அவர்களெல்லோருக்கும் இப்போதிருப்பதைப்போல் சமயானுகூலம் இருக்கவில்லை, ஏனெனில் அவர்கள் மேற்கொண்ட காரியங்களில் இவ்வளவு நியாயம் கிடையாது. அவர்கள் எடுத்த காரியங்கள் இதைவிடச் சுலபமானவையுமல்ல. கடவுள் அவர்களிடம் இவ்வளவு கிருபை வைக்கவுமில்லை. இது நியாயமான காரியம் "instum enim est bellum quibus necessarium, et pia arma ubinulla nisi in armis spes est" இங்கே ஜனங்களுடைய மனமார்ந்த ஒத்துழைப்பு இருக்கிறது. நான் தங்களுக்குத் திருஷ்டாந்தங்களாக எடுத்துச் சொன்ன வழிகளைமட்டும் அனுசரித்து வந்தீர்களாயின் மக்கள் மனதார ஒத்துழைக்கும்போது கஷ்டம் ஒன்று

மிருக்க கியாயமில்லே. இதைத் தவிர உபமானம் கூற முடியாத அதிசயங்கள் இங்கே கடவுளால் நிகழ்த்தப் பட்டிருக்கின்றன. கடல் திறக்கப்பட்டிருக்கிறது. ஒரு மேகத்திரள் தங்களுக்கு வழி காண்பித்திருக்கிறது. பாறையிலிருந்து தண்ணீர் பெருக்கெடுத்திருக்கிறது அமிருதமழை பொழிகின்றது. ஒவ்வொன்றும் தங்கள் மகத்துவத்தை விருத்தி செய்வதாகவே யிருக்கிறது. மற்றவை தங்களால் செய்யப்படவேண்டியவை. நமது இச்சா சக்தியை உபயோகிப்பதைத் தடுக்க விரும்பாமலும், நாமும் கொஞ்சம் கீர்த்தியில் பங்கெடுத்துக் கொள்வதற்காகவும் கடவுள் எல்லாவற்றையும் தாமே செய்யாமல் சிறிது பாகத்தை நாம் செய்யட்டுமென்று விட்டுவைக்கிறார்.

இதுவரை நான் குறிப்பிட்ட மன்னர்கள் எவரும் தங்கள் வம்சத்தார் செய்து முடிப்பார்களென்று நம்பப் படும் காரியம் எதையும் செய்யவில்லை. இது ஒரு ஆச்சரியமன்று. இத்தாலியில் இத்தனை ராஜீயப் போராட்டங்களிலும், யுத்த நடவடிக்கைகளிலும், ராணுவத் திறமை அடியோடு காணப்படவில்லை யென்றால், அதற்குப் பழைய ராணுவ முறைகள் நன்றாயிராததுதான் காரணம். புதிய வழிகளைக் கண்டுபிடிக்கத் தெரிந்தவர்கள் ஒருவரும் இல்லை. புதிதாகக் கண்டுபிடிக்க முன்வரும் மனிதனுக்கு, தான் ஏற்படுத்தும் புதிய சட்டங்களையும் நடைமுறைகளையும்போல் கௌரவ மளிக்கக்கூடியது வேறொன்றுமில்லை. இவை உறுதி யுள்ளவையாயும் பெருமை தரக்கூடியவையாயுமிருந்தால் மக்கள் அவனை வணங்கிப் போற்றுகிறார்கள். இத்தாலியில் ஒவ்வொரு துறையிலும் புதிய சீர்திருத்தத்துக்கு ஏராளமான இட மில்லாமற் போகவில்லை. தலைவர்களுக்குத் திறமை குறைவாயிருந்தபோதிலும் தனி மனிதர்கள் அபாரத் திறமையுள்ளவர்கள். இருவர் புரியும் (duel) சண்டைகளிலும், சிலருக்குள் நடக்கும் சச்சரவுகளிலும் இத்தாலியர்கள் எவ்வளவு பலம், சாமார்த்தியம், புத்தி கூர்மை, முதலியவற்றைக் காண்பிக்கிறார்கள்! ஆனால் பட்டா

ளங்கள் முழுமோசமாக விருக்கின்றன. அதற்குத் தலைவர்களின் திறமையின்மையும் பலஹீனமுந்தான் காரணம். ஏனெனில் ரொம்பத் தெரிந்தவர்களுக்கு ஒருவரும் கீழ்ப்படியமாட்டார்கள். அவர்கள் தங்களை ரொம்பத் தெரிந்தவர்களாய் நினைத்துக்கொண்டிருக்கிருர்கள். இதுவரையில் மற்றவர்களை வணங்கும்படி செய்யக்கூடிய வீரமும் அதிர்ஷ்டமும் உடைய உன்னதஸ்திதிக்கு எவரும் வரவில்லை. ஆகையால் நெடுங்காலமாக, இருபது வருஷங்களாக நடந்த யுத்தங்களிலெல்லாம் இத்தாலியர் மட்டும் அடங்கிய சைனியங்கள் கேவலமாக விருந்து வந்திருக்கின்றன; தாரோ (Taro) அலெக்ஸாண்ட்ரியா (Alexandria) காபுவா (Capua) ஜினேவா (Genoa) வாய்லா (Vaila) பொலோஞா (Bologna) மெஸ்ட்ரி (Mestri) முதலியவை இதற்கு சாக்ஷி.

சுதேசத்தை விடுதலை செய்த மஹா புருஷர்களைப் பின்பற்றுவதற்குத் தாங்கள் விருப்பங்கொண்டால், முதலில் சொந்தச் சைனியத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அதுதான் பலமான அஸ்திவாரம்; ஏனெனில் சொந்தப் போர்வீரர்களைப்போல் விசுவாசமும் உண்மையுமுடையவர்கள் கிடைக்கமாட்டார்கள். அவர்கள் தனித்தனியாகப் பார்க்கப் போனாலே மிகச் சிறந்த வீரர்கள். இன்னும் தங்கள் மன்னருடைய தலைமையில் ஒன்று சேர்ந்து அவருடைய ஆதரவையும் மதிப்பையும் பெற்றால் அவர்கள் மேலும் சிறந்து விளங்குவார்களென்பதற்கையமில்லை. ஆகையால் இத்தாலியரின் தோள்வலியைக் கொண்டே இந்நாட்டை அன்னியரின் ஆதிக்கத்தினின்றும் மீட்பதற்கு சொந்தச் சேனைகளைத் தயார் செய்துகொள்வது அவசியம். ஸ்விஸ், ஸ்பானியக் காலாட்படைகள் மிகப் பயங்கரமானவை எனக் கருதப்படுகின்றனவாயினும், அவற்றிலும் கெடுதல்கள் இருக்கத்தான் இருக்கின்றன. மூன்ருவது விதமான அணிவகுப்பினால் அவர்களை எதிர்க்கமுடிவதுமட்டுமின்றி வெற்றி பெறவும் நம்பிக்கையிருக்கிறது. ஏனென்ருல் ஸ்பானியர்கள் குதிரைப் படையைத் தாக்குப் பிடிக்கமாட்டார்கள்.

  

ஸ்விஸ்களோ தங்களுக்கிணையான பராக்கிரமமும் உறுதியும் கொண்ட காலாட்படைகளுக்கு அஞ்சவேண்டியவர்கள். அனுபவத்தின்படி பிரெஞ்சுக்காரர்களின் குதிரைப்படைத் தாக்குதலை ஸ்பானியர்களால் தாங்கமுடியவில்லை. ஸ்விஸ்கள் ஸ்பானியர்களுடைய காலாட்களால் துரத்தியடிக்கப் படுகிறார்கள். கடைசியில் சொன்னதற்குச் சரியான உதாரணம் காணப்படாவிட்டாலும், ராவன்னு யுத்தத்தில் ஸ்விஸ் படைகளைப்போலவே வகுக்கப்பட்டிருந்த ஜெர்மன் பட்டாளங்களை ஸ்பானியக் காலாட்படைகள் தாக்கியபோது, நடந்த ஒரு சம்பவம் இதன் உண்மையை விளக்குவதாக விருக்கிறது. ஸ்பானியர்கள், தங்கள் சரீரம் சொன்னபடி கேட்பதாலும், கவசங்களின் உதவியாலும், ஜெர்மானியர்களுடைய வேல்களினூடே புகுந்து புறப்பட்டு, எதிரிகள் தற்காத்துக்கொள்ளக் கூடாமலும், ஆனால் தாங்கள் பத்திரமாயிருந்தும் சண்டை செய்தனர். ஜெர்மானியர்கள் குதிரைப்படைகளைக் கொண்டுவந்திருக்காவிட்டால், ஸ்பானியர்களால் அடியோடழிக்கப்பட்டிருப்பார்கள். இந்த இருவகையான காலாட்படைகளையும் பற்றிய குறைபாடுகளைத் தெரிந்துகொள்வதால் குதிரைப்படையைத் தடுக்கவல்லதும், காலாட்களைக் கண்டஞ்சாததுமான மூன்றாவது வகையொன்று நிருமிக்கப்படக் கூடும். சேனைகளை நன்றாகப் பொறுக்கி யமைப்பதாலும், புதிய ஒழுங்கு முறையை ஏற்படுத்துவதாலும், இது சாத்தியமாகும். இவை புதிதாக ஏற்படுத்தப் படும்போது அரசனுக்குப் பெரும் புகழும் மகிமையும் கிடைக்கும்.

ஆகையால் இத்தாலி தனக்கு விடுதலை யளிக்கும் வீரனைப் பெறக்கூடிய இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிடக்கூடாது. முரடர்களான அன்னியர்களுடைய முற்றுகைகளுக்காளாகித் துன்புற்ற மாகாணங்களிலெல்லாம் இவ்வரசன் எவ்வளவு ஆர்வத்துடன் வரவேற்கப்படுவான் என்பதை விவரிக்க இயலாது. எவ்வளவு பழிவாங்கும் தாகமும், உறுதியான விசுவாசமும், அன்பும நன்றியறிவும் அவனை ஆவலோடு எதிர்

கொள்ளும் என்பதை வர்ணிக்கவே முடியாது. அவனை எவர்தான் வரவேற்க மாட்டார்கள்? யார்தான் கீழ்ப் படியாமலிருக்க மனங்கொள்வர்? எவருடைய பொறுமை அவனை எதிர்க்க வல்லது? எந்த இத்தாலியன்தான் தனது கடமையைச் செலுத்தாமலிருப்பான்? இந்த முரடர்களின் அதிகாரம் ஒவ்வொருவருக்கும் வெறுப் பைத் தருகிறது, ஆகவே தர்ம நியாயமான காரணங்களை முன்னிட்டு சகஜமாக உண்டாகும் தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் கீர்த்தி மிக்க தங்கள் வம்சம் இக்காரியத்தை மேற்கொண்டு அதன் கொடியின்கீழ் நம் தந்தையர் நாடு உயர்வடைந்து தங்கள் ஆதரவில் பெட்ரார்க் (Petrarch)குடைய பின்வரும் சொல்லை மெய்ப்பிக்கட்டும் :

Valour against fell wrath
Will take up arms : and be the combat
quickly sped !
For sure, the ancient worth
That in Italians stirs the heart, is
not yet dead.

(வீரம் செறிந்த இத்தாலியர்கள் ரோஷத்துடன் ஆயுத மெடுத்தெழுவார்கள் ; போர் துரிதமாக வரட்டும்! இத் தாலியர் ஹிருதயத்தில் துடித்துக் கொண்டிருக்கும் பழம் பெரும் தீரம் இன்னும் மடிந்து போகவில்லை).



# குறிப்புகள் (Notes)

**பக்கம்–23.** லோரேன்ஸோ—பிளாரன்ஸ் நகரத்தின் முடிசூடா மன்னர்களாகிய மெடிஸி வம்சத்தாரின் பரம்பரையில் வந்த அர்பினோ டியூக் லொரென்ஸோ இத்தாலிக்கு விடுதலையளிக்கக் கூடியவன் என்று நம்பி மக்கியவெல்லி "ப்ரின்"ஸை அவனுக்கு அர்ப்பணம செய்தான். லொரென்ஸோவின் தயவால் தான் ஏதேனும் உத்தியோகம் பெறலா மென்பதும் அவன் அவா.

**பக்கம்–24.** கொடிய விதி—மக்கியவெல்லிக்கு எப்போதும் பணக் கஷ்டம் அதிகம்.

**பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா**—மிலன் நகரத்துச் சிற்றரசை (duchy) ஸ்தாபித்தவன். அவன் மகனை லூடோவிகோவின் ஆளுகையில் மிலன் பலமிருந்த ராஜ்யமாயிற்று. ஸ்பெயின் அரசன்—பெர்டினண்ட், இவனுடன் தான் பிரான்ஸ் மன்னன் நேபிள்ஸைப் பங்கிட்டுக் கொள்வதற்காக் க்ரானடாவில் உடன்படிக்கை செய்து கொண்டான்.

**பக்கம்–25.** குடியரசைப்பற்றி etc—"மக்கியவெல்லி எழுதிய" "The discourses on the first decade of Titus livius" என்பது ரோமக் குடியரசின் சரித்திரத்தினுடைய விரிவுரை. அதிலிருந்து திருஷ்டாந்தங்களை எடுத்துத் தன் காலத்தவருக்குத் திட்டங்களைக் கூறியிருக்கிறான். "வேறோரிடத்தில் சொல்லியிருக்கிறேன்" என்பது அந்த புத்தகத்தைத்தான்.

**பக்கம்–26.** பொரரா—இத்தாலியின் ராஜ்யங்களிலொன்று. இது ஆஸோ (Azzo)வின் கீழ் செல்வத்திலும், அதிகாரத்திலும மிகவும் முன்னேறியது. ஆஸோ கி. பி. 1300-ல் இறக்கும் தருணத்தில் வாரிசு பாத்தியதையைப் பற்றித் தகராறு ஏற்பட்டது. வெனிஷியர்களும போபபும் தனித்தனி அபேக்ஷகர்களை நிறுத்தினார்கள். அதனால் வெனிஷியர்களுக்கும் போப்புக்கும் சண்டை வந்தது. வெனிஸின் அதிகாரியான பீட்ரோ (Pietro) பெரராவைக் கைப்பற்றினான். போப் அவனை ஜாதிப்பிரஷ்டம் செய்து, தன துருப்புக்களை யனுப்பிப் பெரராவிலிருந்து வெனிஷியர்களை வெளியேற்றும்

படி உத்தர விட்டான். பீட்ரோ் தோல்வியடைந்து போப்புடன் சமாதானம் செய்து கொண்டான் (1311 கி.பி.) ஆயினும் வெனிஸின் அதிகாரம் வெகு நாள் வரையில் பொராராவில் சென்று கொண்டிருந்தது. கி. பி. 1481-ம் வருஷம் பொராராவின் டியூக்கான ஆல் பான்ஸோ (Alfonso) வை, தங்கள் உரிமைகளில் தலையிடுகிறான் என்பதற்காக, வெனிஷியர்கள் தாக்கினார்கள். ஆனால் ஆல்பான்ஸோவின் உதவிக்குப் போப்பும் நேபிள்ஸ் அரசனும் வந்து விட்டதால், வெனிஸ் சீக்கிரத்திலேயே சமாதானத்தைக் கோர நேர்ந்தது. போப் ஜூலியஸ் கி. பி. 1510-ம் வருஷம் பொராராவை ஜயித்தான், ஆனால் இரண்டு வருஷங்களுக்குள் ஆல்பான்ஸோ அதைப் போப்பிடமிருந்து விடுவித்து விட்டான்.

பக்கம்–26. போப் ஜூலியஸ் II—மிகத் திறமை வாய்ந்த போப்களிலொருவன். சர்ச்சின் லௌகிக பலம் பெருகுவதற்குத் தடையாயிருந்த வெனிஷியர்களை ஒடுக்குவதற்காக, அவன் கி. பி. 1508-ல் பிரான்ஸ், ஸ்பெயின் மன்னர்களுடனும், ரோம சக்கிரவர்த்தி மாக்ஸிமிலியனுடனும் "காம்ப்ரே" உடன் படிக்கை (The league of Cambray) என்ற பெயருள்ள ஒப்பந்தத்தைச் செய்துகொண்டு, வெனிஷியர்களை எல்லோருமாகத் தாக்கினார்கள். வெனிஷியர்கள் உடனே பணிந்து விட்டனர். அவர்களுக்குப் பல சமயங்களில் கிடைத்திருந்த பிரதேசங்களை ஜயித்தவர்களுக்குள் பங்கு போடப்பட்டன. அதன்படி பிரான்ஸுக்கும் சில நகரங்கள் கிடைத்தன. வெனிஷியர்களை அடக்கிய பிறகு போப் பிரஞ்சுக்காரரை இத்தாலியை விட்டுத் துரத்துவதற்காக வெனிஸ், ஸ்பெயின், ஜெர்மன் சக்கிரவர்த்தி, இங்கிலாந்து அரசனான எட்டாவது ஹென்றி, முதலியவர்களுடன் கலந்து ஒரு உடன் படிக்கை (ஹோலி லீக்) செய்து கொண்டான். பிரஞ்சுக்காரர்கள் மெல்ல இத்தாலியைவிட்டு விரட்டப்பட்டனர். போப் ஜூலியஸ், லீஸர்போர்ஜியாவைச் சாமர்த்தியமாகச் சிறை பிடிக்கச் செய்தான். அவன் சர்ச்சின் லௌகிக சக்தியின் விருத்திக்குக் காரணமாயிருந்தான்.

பக்கம்–27. பன்னிரண்டாவது லூயி—எட்டாவது சார்லஸுக்கு அடுத்த பிரான்ஸ் மன்னன். (கி. பி. 1498—1515) அவன் தன் சேர்ந்த ஜனங்களை நன்றாக ஆண்டு

வந்ததால், அவனுக்குத் "தேசத்தின் தந்தை" என்ற பெயர் கிடைத்திருந்தது. சார்லஸைப் போலவே அவனும் இத்தாலியை ஜயிக்க விரும்பினான். அவனுக்கும் முதலில் வெற்றி உண்டாவது போலிருந்து, பிறகு தோல்விகள் ஏற்பட்டலாயின. அவன் முதலில் மிலனை ஆக்கிரமித்து, (1499) பிறகு நேபிள்ஸிடம் திரும்பினான். ஸ்பெயினுடன் சேர்ந்து நேபிள்ஸ் அரசனைக் கைதியாக்கிய பின்னர் ஸ்பெயின் அரசனுடன் நேபிள்ஸைப் பாகம் செய்து கொண்டான். லூயி 1515ல் இறந்த பின் முதலாவது பிரான்ஸிஸ் (Francis) பட்டத்துக்கு வந்தான்.

(இப்புத்தகத்தில் "பிரான்ஸின் இப்போதைய அரசன்" என்று குறிப்பிடுவது 12-ஆவது லூயியைத்தான்.)

முக்கிய வெல்வி இங்கே லூயி மிலனை ஜயித்ததைக் குறிக்கிறான். (6-10-1499) ஜயித்த பின் நகர நிர்வாகத்தைத் தன் அதிகாரிகளிடம் ஒப்புவித்து விட்டு லூயி நேபிள்ஸை நாடிச் சென்றான். பிரஞ்சுக்காரர்களால் மிலன் வாசிகளை அடக்கி வைக்க முடியவில்லை. டியூக் லுடோவிகோ பிரஞ்சுக்காரர்களைத் துரத்திவிட்டு, மிலனைத் திரும்பவும் பிடித்துக் கொண்டான். (5-2-1500) பிரஞ்சுக்காரர்களின் தோல்விக்கு முக்கிய காரணம் மிலன் வாசிகள், அவர்களை வெறுத்துக் கலகம் செய்ததுதான். ஆனால் லுடோவிகோ மிலனை வெகு நாள் வைத்துக்கொள்ள முடியவில்லை. பிரஞ்சுத் துருப்புகள் மறுபடியும் மிலனைத் தாக்கி லுடோவிகோவைச் சிறைப் படுத்தினர், லூயி ஸ்பெயின் அரசன் பெர்டினன்டின் சகாயத்துடன் இத்தாலி முழுவதையும் கைப்பற்றியும அந்த வெற்றி நிலைக்கவில்லை. "ஹோலி லீக்"கின் எதிர்ப்பினால் பிரஞ்சுக்காரர்கள் இத்தாலியை விட்டோடும்படியாயிற்று. கி. பி. 1513-ம வருஷக் கடைசிக்குள் பிரஞ்சுக்காரர்கள் இத்தாலியிலிருந்த உரிமைகளெல்லாவற்றையும இழந்தனர்.

லுடோவிகோ—மிலன் நகரத்து டியூக். பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸாவின் புதல்வர்களுக்குள் மிகத் திறமையுள்ளவன். அக் காலத்திய அரசியல் விவகாரங்களில் நிபுணனும், எந்தக் கஷ்டத்தையும் எதிர்க்க வல்ல புத்தி கூர்மையுடையவனாயு மிருந்தான். இத்தாலியில் தன் அதிகாரத்தை ஸ்தாபிக்க விரும்

பிறான். நேபிள்ஸ் அரசனைத் தண்டிப்பதற்காகப் பிரான்ஸின் உதவியைக் கோரி இத்தாலியில் பிரஞ்சுப் படையெடுப்புக்கு வழி காட்டியவன் அவன் தான். ஒரு முறை ஜயிக்கப்பட்டுத் திரும்பவும் லுடோ விகோ அதைக் கைக் கொண்ட பின் இரண்டாமுறையும் பிரஞ்சுக்காரர்களிடம் தோற்றான். லுடோ விகோ பிரசித்தி பெற்ற சித்திரக்காரனாகிய லியனார்டோ டா விஞ்ஜி (Leonardo da Vinci) யை ஆதரித்தவன்.

பக்கம்–29. பர்கண்டி முதலியன பிரான்ஸிலுள்ள ராஜ்யங்கள்.

பக்கம்–29. துருக்கன்—The Grand Turk. கி. பி. 1452-ல் கிரீஸை ஆக்கிரமித்த ஆட்டோமன் அரசன் மகம்மது. பத்து வருஷங்கள் கிரீஸ் துருக்கரிடம் அடிமைப் பட்டிருந்தது. கிரேக்கர்கள் அடிமைகளாக்கப்பட்டும், கான்ஸ்டான்டிநோபிளுக்குக் குடியேற்றப் பட்டும், இன்னும் பலவிதமாகத் துருக்கரிடம் துன்புற்றனர். (39-ம் பக்கக் குறிப்புகளையும் பார்க்கவும்.)

பக்கம்–32. இத்தோலியர்கள்—கி. மு. மூன்றாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில், கிரீஸில் பல நகரங்கள் இத்தோலியன் லீக் (Aetolian league) என்ற பெயருடன் ஒன்று சேர்ந்து கொண்டன. இத்தோலியன் லீகின் உத்தேசம் அன்னியர் ஆக்கிரமிப்பைத் தடுப்பது தான். அந்த லீகைச் சேர்ந்த நகரங்களெல்லாம் சமமான சுதந்திர முடையவை யென்றாலும், முக்கியமான அதிகாரத்தை வகிக்கும் "ஜெனரல்" ஒருவன் உண்டு. இந்த ராஜாங்கத்தில் குறிப்பிடத்தக்க அம்சம் எல்லா நகரங்களிலிருந்தும் பிரதி நிதித்துவம் வாய்ந்த சபை (council) இருந்ததாகும். பிரதி நிதித்துவம் என்ற கொள்கை அப்போதுதான் முதல் முதல் அங்கிகரிக்கப்பட்டது. கொள்ளையும், திருட்டுந்தான் இத்தோலியன் லீகுக்குப் பிரியமான உத்தியோகம். மத்திய கிரீஸில் பல ராஜ்யங்கள் இத்தோலியன் லீகுடன் சேர்ந்து கொண்டன. ஸ்பார்ட்டாவிலுள்ள பல ஜாதியினர்கள் ஒன்று கூடி, அக்கேயன் லீக் (Achaean league) கை நிறுவினார்கள். இரண்டு லீகுகளுக்கும் போட்டி பலத்து ரோம் அதில் தலையிட்டது.

ஐயங்கொண்டவர்கள் தாங்கள் ஜயித்த மக்களை நிராயுதர்களாக்க வேண்டுமென்று, மக்கிய வெல்லி கருதுகிறான். ரோமர்கள்தான் ஜயசாலிகளின ஆதர்சம் என்கிறான். ரோமர்கள் குடியேற்ற நாடுகளில் அதிகாரம் நிலைப்பதற்காக, எந்த முறையையும் பிரயோகிக்கலாமென்ற அபிப்பிராய முடையவர்கள்.

பக்கம்—32. அக்கேயர்கள் கிரீஸை ஆதியில் ஆக்கிரமித்தவர்கள். கி. மு. மூன்றாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரீஸில் அக்கேயன் லீக் ஏற்பட்டது. அது பல விஷயங்களில் இத்தாலியன் லீகைப் போலவேயிருந்தது. லீகைச் சேர்ந்த மக்கள் எல்லோருக்கும் லீகிலுள்ள நகரங்கள் எல்லாவற்றிலும், சமமான பிரஜா உரிமை இருந்தது. அச்சமயம் கிரீஸுக்கு அதிகமாய் வேண்டியிருந்த சமாதானத்தைக் கொண்டு வரத்தக்க சக்தி அதற்கிருந்தது.

மாஸிடோனியா—அலெக்ஸாண்டரின் தந்தையான பிலிப் அரசனுனபோது (கி. மு. 359) பிரபல மாயிற்று. பிலிப் தன் மகனுடைய திக்விஜயங்களுக்கு அஸ்திவாரமாக மிகவும சக்தி வாய்ந்த ராஜ்யத்தை விட்டுப் போனான்.

ஆன்டியோகஸ்—ஸிரியாவின் அரசன், கி.மு. 192-ல் கிரீஸில் பிரவேசித்துத் தன் அதிகாரத்தை ஸ்தாபிக்க முயன்ருன். ஆனால் ஆன்டியாகஸ் கிரீஸில் அதிகாரம் பெறுவது, தங்களுக்குப் பலக் குறைவெனக் கருதிய ரோம் கி. மு. 191-ல் தன் சேனைகளைக் கிரீஸுக்கனுப்பி தெர்மாபிலே (Thermopylae) யில் நடந்த மஹா யுத்தத்தில் அவனைப் புற முதுகிட்டோடச் செய்தது.

பிலிப்—மாஸிடோனிய மன்னனன ஐந்தாவது பிலிப் ஸிரியர் தேசத்து ஆன்டியாகஸுடன் சேர்ந்து கொண்டு கிரீஸின காரியங்களில் தலையிட்டான். ரோம் பிலிப்பைத் தோற்கடித்துத் துரத்தியது (கி. மு. 197.)

பக்கம்—34. சார்லஸ்—எட்டாவது சார்லஸ் காலத்தில் பிரான்ஸ் மற்றெல்லா நாடுகளையும்விடப் பல மிக்கதாயிருந்தது. போரில் ஆர்வமுடைய மக்களும மிகப் பெரிய சைனியங்களும் முழுதும் ராஜாவின் கைவசமே யிருந்தனர். அவன் பெரிய பிரயத்தனங்களில் ஈடுபட விரும்பினுனதலில், இத்தாலிமீது

அவன் கவனம் சென்றது. நேபிள்ஸ் ராஜ்யத்தில் பிரான்ஸுக்குச் சிறிது உரிமையிருந்தது. அது சட்டப்படி செல்லாதாயினும், இத்தாலிமேல் படையெடுப்பதற்கு அது போதிய சாக்காகவிருந்தது. கி. பி. 1494-ல் லுடோவிகோ பிளாரன்ஸின் ஆக்கிரமிப்பிலிருந்து தப்புவதற்காக, அவன் உதவியைக் கோரினான். சார்லஸ் உடனே சம்மதித்து இத்தாலிக்குள் நுழைந்து அத்தீபகற்ப முழுவதையும் அநேகமாய் ஜயித்துவிட்டான். ஆனால் அவனால் வெகுநாள் அங்கே அதிகாரம் செலுத்த முடியவில்லை. மிலன், வெனிஸ், போப், பார்டினண்ட், ரோமசக்கிரவர்த்தி மாக்ஸிமிலியன் எல்லோருமாகக்கூடி எதிர்த்துச் சார்லஸைத் திரும்பிப் போய்விடும்படி செய்தார்கள். அவன் ஜயித்த பிரதேசங்கள் ஒன்றுகூடப் பிரான்ஸுக்குக் கிடைக்கவில்லை.

லூயி—எட்டாவது சார்லஸிற்குப் பிறகு சிம்மாசனம் ஏறிய பிரஞ்சு மன்னன், (27-வது பக்கம் குறிப்புப் பார்க்கவும்) சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கைகளைத் தானும் அனுசரித்து, மறுபடியும் இத்தாலியை ஜயிக்கப் பேராவல் கொண்டான். சார்லஸ், லூயி, ஆகிய இருவருடைய படையெடுப்புக்களையும் மக்கியவெல்லி நேரில் கண்டான். லூயியின் உபயோகமற்ற முறைகள் அவன் இத்தாலியைத் தோற்றதற்கு எவ்வளவு தூரம் காரணமாயிருந்தன வென்பதை எடுத்துக் காட்டுகிறான்.

**பக்கம்—37.** வெனிஷியர்கள்—வெனிஸ், இத்தாலியில் ஒரு பெரிய குடியரசு. பதினைந்தாம் நூற்றாண்டில் கிழக்கும் மேற்கும் ஏற்றுமதி இறக்குமதி செய்துகொள்ளும் பெரியவியாபார ஸ்தலமாகவிருந்தது. அக்காலத்திய இத்தாலியச் சரித்திரத்துடன் வெனிஸ் மகத்தான சம்பந்தம் பெற்றிருந்தது. கி. பி. 1300-ல் பெராராவை ஜயித்தது. அதனால் போப் கடுங்கோபங்கொண்டு, வெனிஸின் அதிகாரியை ஜாதிப்பிரஷ்டம் செய்தானாகையால், வெனிஷியர்கள் போப்பை வெறுத்தார்கள். மறுபடியும் கி.பி. 1481-ல் வெனிஸ் பெராராவை எதிர்த்தது. ஆனால் மிலன் டியூக், போப், நேபிள்ஸ் அரசன், எல்லோரும் வெனிஸுக்கு விரோதமாய்க் கிளம்பியதால், வெனிஸ் அம்முயற்சியைக் கைவிடவேண்டியதாயிற்று. இந்த யுத்தங்களால் வெனிஸ் பெருநஷ்டமடைந்து, எதிரிகள்

மேல் பழிவாங்க ஆத்திரம் கொண்டது. ஆகையால் வெனிஸியர்கள் எட்டாவது சார்லஸை இத்தாலி மீது படையெடுக்கும்படி ஏவினர். பிரஞ்சு அரசன் கி. பி. 1494-ல் இத்தாலியைத் தாக்கினான். (சார்லஸைப் பற்றிய குறிப்புக்களைப் பார்க்கவும்).

சார்லஸுக்குப் பிறகு பிரஞ்சு அரசனான லூயியுடன் அவர்கள் மிலனைப் பங்கிட்டுக்கொள்வதற்கு ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அதன் விளைவாக லூயி இத்தாலி முழுவதையும் ஜயித்தான். வெனிஸின் தவறான முறைகள் எவ்வாறு இத்தாலியில் அன்னியர் ஆட்சிக்குக் காரணமாயின என்பதை மக்கியவெல்லி இங்கே குறிப்பிடுகிறான்.

**பக்கம்—35.** போப் அலெக்ஸாண்டர்—கி. பி. 1492—ல் போப்பானான். 1503—ல் அவன் இறக்கும் வரையில் வலிமை மிக்கவனாயும் பழிபாவத்துக்கஞ்சாதவனாயும் இருந்தான். தன் குடும்பத்தார்களை முன்னுக்குக் கொண்டுவருவதிலேயே கருத்தாயிருந்தான். தன் காலத்து அரசியல் நிபுணர்களில் ஒருவன்; அரசியல் தர்மத்தை மதிக்காதவன்.

அலெக்ஸாண்டர், எட்டாவது சார்லஸின் படையெடுப்பை நேரில் கண்டவன். சார்லஸ் ரோமில் பிரவேசித்தபின்னும், (31-12-1494) அலெக்ஸாண்டரைப் போப்பாகவிருக்கும்படி அனுமதித்தான். பிரஞ்சு மன்னன் இத்தாலியை விட்டுப் போனபோது, போப் தன் பலத்தை விருத்தியாக்கிக் கொள்ளலானான். தன் குமாரன் ஸீஸர் போர்ஜியாவுடன் சேர்ந்து ரோமாபுவிலும் மிலனிலும் தன் அதிகாரத்தை வேரூன்றச் செய்தான். கி. பி. 1503-ல் திடீரென்று மரணமடைந்தான்.

டஸ்கனி—இத்தாலியில் ஒரு மாகாணம்.

**பக்கம்—36.** நேபிள்ஸ் ராஜ்யம்—பன்னிரண்டாவது லூயி ஸ்பெயின் மன்னனான பெர்டினண்டுடன் கி.பி. 1500-ல் க்ரானடா உடன்படிக்கை யென்று சொல்லப்படும் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டு, இருவருமாக நேபிள்ஸைப் பங்கிட்டுக்கொண்டனர். லூயி அப்படிச் செய்திருக்கலாகாது என்று இங்கே மக்கியவெல்லி கூறுகிறான்.

  

பக்கம்–**38.** ஸீஸர் போர்ஜியா—அலெக்ஸாண்டர் வஞ்சகத்துக்கும் துரோகத்துக்கும் பெயர்போனவன். ஸீஸர் போர்ஜியா தந்தைக்கேற்ற மகனாயிருந்தான். அலெக்ஸாண்டர் தன்னுடைய பாதுகாப்புக்கு வேண்டியதற்குமேல் வெற்றிகளை நாடவில்லை. ஆனால் ஸீஸர் போர்ஜியா பேராசை மிக்கவன். அவன் தலையெடுத்தது முதல் ராஜ்ய விஸ்தாரந்தான் போப்பின் கொள்கையாயிருந்தது. தன் மகனுக்கு ராஜ்யம் சம்பாதித்துக் கொடுப்பது சாத்தியமாகும் பொருட்டு, இத்தாலியில் அன்னியர் படையெடுப்பதைப் போப் வரவேற்றான். அப்போதிலிருந்து தான் போப்பின் ஆத்மீக பலத்துக்குத் துணையாக லௌகீக சக்தியைப் பெருக்குவதென்ற கொள்கை ஆரம்பித்தது.

மக்கியவெல்லிக்கு ஸீஸர் போர்ஜியாவின் குரூரமும் கபடமும் உகந்தனவாகவே தோன்றின. அவன் இத்தாலியைக் காப்பாற்றியிருக்கக்கூடிய யோக்கியதையுடையவன் எனக் கருதினான். அலெக்ஸாண்டர் இறந்தவுடனே போர்ஜியாவின் அதிர்ஷ்டம் மங்கவாரம்பித்தது. போப் ஜூலியஸ் அவன் ஜயித்தவற்றையெல்லாம் பிடுங்கிக்கொண்டு அவனைக் கொல்லாமல் நேபிள்ஸுக்குப் போக அனுமதித்தான். அங்கே அவன் சிறைப்படுத்தப்பட்டு ஸ்பெயினுக்கு அனுப்பப்பட்டான். தந்திரமும் துரோகமுமே உருக்கொண்ட போர்ஜியாவின் கதி கடைசியில் இவ்வண்ணமாயிற்று.

டாரயஸ்—(கி. மு. 522-486). பாரசீக மன்னன். இவனுடைய விசாலமான சாம்ராஜ்யத்தில் இந்தியாவின் மாகாணங்களான ஸிந்து, வடமேற்கு மாகாணத்திலொரு பாகம், பஞ்சாபில் பெரும்பாகம், முதலியவையும் அடங்கியிருந்தன. அவனுடைய சாம்ராஜ்யத்தில் மொத்தம் இருபதிலிருந்து இருபத்தைந்துக்குட்பட்ட மாகாணங்கள் இருந்தன. இங்கு குறிப்பிடப்படுவது அவனுடைய சந்ததியைச் சேர்ந்த மூன்றாவது டாரயஸ். (அலெக்ஸாண்டரைப் பற்றிய குறிப்புகளில் பார்க்கவும்).

அலெக்ஸாண்டர்—மஹா அலெக்ஸாண்டர் மாஸிடோனிய அரசனான இரண்டாவது பிலிப்பின் குமாரன். அவன் தன் 13-வது வயதிலிருந்து 16-வது வயதுவரையில் அரிஸ்டாடில் (Aristotle) என்ற கிரேக்க ஞானியிடம்

கல்வி பயின்ருன். கத்தியும் ஹோமருடைய காவியமான "இலியட்"டும் தான் அவனுக்குப் பிரியமானவை. யுத்தத்தையும் வித்தையையும் பெரிதும் விரும்பினுன். அவன் தந்தை கொல்லப்பட்டுபோன பின் தன் இருபதாவது வயதிலேயே மாஸிடோனியாவின் அரசனுய்விட்டான். அவன் பெருந்தன்மையும் ஸ்திரீகளிடம் மரியாதையும் உள்ளவன். அவனுக்குத் தந்தையிடமிருந்து ஒரு ஐக்கியமுள்ள ராஜ்யமும் முதல்தரமான சைனியமும் கிடைத்திருந்தன. அவன் ராஜ்யம் கிரீஸிலும் பரவியிருந்தது. கிரீஸில் எழுந்த ஒரு கலகத்தை அடக்கிவிட்டபின் ஆசியாவில் படையெடுத்தான். அதற்கு அவனுடைய சைனியத்தின் பலமும் அவனுடைய சாமார்த்திய மிக்க தலைமையும், பாரசீக சாம்ராஜ்யம் பலங் குன்றி யிருந்ததும், காரணமாயிருந்தன. மூன்ருவது டாரயஸ் தகுதியற்றவனுயிருந்ததும் ஒரு காரணம். கி. மு. 331-ல் உலக சரித்திரத்திலேயே பிரசித்திபெற்ற அர்பிலா (Arbela) யுத்தத்தில் டாரயஸைத் தோற்கடித்து, அவனுடைய சாம்ராஜ்யத்தை அலெக்ஸாண்டர் அடைந்தான். டாரயஸ் அதற்கடுத்த வருஷம் மரணமடைந்தான். கி. மு. 330—ல் எக்படானு (Ecbatana) வெற்றியுடன் அலெக்ஸாண்டருடைய திக்விஜயம் முடிந்தது. பாரசீக சாம்ராஜ்யத்தால் இழக்கப்பட்டிருந்த இந்திய மாகாணத்தை ஜயிப்பதற்காகக் கிழக்கே சென்று ஜீலம் யுத்தத்தில் போரஸின் படைகளை தோற்கடித்துக் கொஞ்சக் காலத்துக்கு இந்தியாவில் மாஸிடோனிய ஆட்சியை நடத்தினுனென்ருலும், அவனுடைய சொந்தப் போர்வீரர்களே கலகம் செய்ததால், அவன் இந்தியாவை விட்டுத் திரும்பிப் போகும்படியாயிற்று. கி. மு. 325, அக்டோபரில் இந்தியாவைவிட்டுப் புறப்பட்டான். கி. மு. 323 ஜூன் மாதத்தில் பாபிலோனில் இறந்தான்.

பக்கம்—39. துருக்கராஜ்யம்—இதில் குறிப்பிடப்பட்டது துருக்கியின் கிழக்கிலும் மேற்கிலும் பரவியிருந்த ஆட்டோமன் சாம்ராஜ்யம். அந்த சாம்ராஜ்யத்தை ஆண்ட சக்கிரவர்த்திகள் எதிர்ப்புகளை லக்ஷியம் செய்யாமல் உறுதியுடன் இருந்தார்களாகையால் அவர்களுடைய ராஜ்யம் ஐரோப்பாவிலும் பரவிற்று. முகம்மதுவின் தலைமையில் கான்ஸ்டாண்டி

நேரில் ஐயிக்கப்பட்டது. (1453 கி. பி.] கான்ஸ்டன்டைன் சக்கிரவர்த்தி முற்றுகை யிடப்பட்டிருந்த நகருக்குள்ளேயே மடிந்தான். பிறகு ரோமும் கிரீஸும் சாம்ராஜ்யத்தின் அங்கங்களாயின. ஸுலேமானின் ஆட்சியில் பாக்தாத், அல்ஜியர்ஸ், ஹங்கேரியில் பெரும்பாகம், முதலியவை ஐயிக்கப்பட்டன.

இங்கே மக்கியவெல்லி துருக்க சாம்ராஜ்யம் நிலைத்து நின்றதற்குக் காரணம், அந்த சாம்ராஜ்யத்தில் பிரான்ஸ் மாதிரி பிரபுக்கள் இல்லாமையும், சக்கிரவர்த்தியின் கண்டிப்புள்ள ஆட்சியுந்தான் என்கிறான்.

**பக்கம்—42.** பைரஸ்—கிரீஸின் ராஜ்யங்களிலொன்றான எபிரஸ் அரசன் பைரஸ் (கி. மு. 275) இத்தாலியிலும் ஸிஸிலியிலும் பல வெற்றிகளைப் பெற்றும் ஜனங்களுடைய ஆதரவின்மையால் அங்கே தன் வெற்றிகளை நிலைநாட்டக் கூடாமல் போயிற்று. (ஆகையால் நிலைத்து நிற்காத வெற்றிக்கு "பைரிக் விக்டரி" என்ற பழமொழி ஆங்கிலத்தில் இருக்கிறது.)

**பக்கம்—42.** ஸ்பார்த்தர்கள்—ஸ்பார்த்தா கிரீஸில் ஒரு ராஜ்யம். ஸ்பார்த்தர்கள் போரில் உற்சாகமுடையவர்களாயும் ஐயிக்கப்படக் கூடாதவர்களாயுமிருந்தார்கள். பிலோபனேஷியன் யுத்தத்தில் ஏதென்ஸ் தோற்கடிக்கப்பட்டு, அதனுடைய சாம்ராஜ்யம் ஸ்பார்த்தாவுக்குக் கிடைத்தது. ஏதென்ஸில் ஸ்பார்த்தர்கள செய்யாத கொடுமைகள் இல்லை. ஏதென்ஸும் தீப்ஸும் மிக்கவும் துன்புற்றன. கடைசியில் தீப்ஸ் அரசனை ஏபமினண்ட்ஸ் ஸ்பார்த்தர்களை ஐயித்து அந்நாடுகளை விடுவித்தான்.

**பக்கம்—42.** ஏதென்ஸ், தீப்ஸ்—கிரேக்க நகரங்கள்.

**காபுவா, நுமந்தியா**—ரோம ராஜ்யங்கள்.

**கார்த்தேஜ்**—ஆப்பிரிக்கக் கடற்கரையோரமுள்ள ஒரு நகரம். கிரீஸில் டயர் (Tyre) என்ற விடத்திலிருந்து வந்த வியாபாரக்கூட்டத்தாரால் அமைக்கப்பட்டது. அவர்களுடைய தலைவி, வர்ஜில் எழுதிய காவியமொன்றின் கதாநாயகியாகிய டிடோ என்பவள். அவளுடைய புருஷனைப் பிக்மாலியன் கொன்று சிம்மாசனத்தையும் அபகரித்துக் கொள்ளவே, அவ

னுடைய கொடுங்கோன்மைக் கஞ்சிய அக்கூட்டத்தார், அந்நாட்டைவிட்டுக் கார்தேஜுக்கு குடியேறி விட்டதாக ரோமாபுரிப் பழங்கதை கூறுகிறது.

**பக்கம்-45.** மோஸஸ்—எகிப்து நாட்டு யூதர்களுக்கு ஒழுங்கும் தர்மமும் கற்பித்தவன். யூதமக்களைக் 'கடவுளால் அவர்களுக்கென சிருஷ்டிக்கப்பட்ட பாலுந்தேனும் பெருகியோடும் ஜெருஸலேம் நகருக்கு' அழைத்துப் போகும் வரையில், அவன் ஜீவித்திருக்கவில்லை. மக்களுக்கு அவர்களுடைய மதமான யூத மதத்தில் விசுவாசத்தையும் ஊக்கத்தையும் ஊட்டினன். யூதர்கள் எகிப்தில் அந்நாட்டு மன்னர்களால் அடிமைகளாக வைத்துக் கொள்ளப்பட்டிருந்தவர்கள். அவர்கள் மோஸஸின் சகாயத்தால் அந்த அரசர்களுடைய கொடுங்கோன்மையினின்றும் தப்பினார்கள். மோஸஸ் அபூர்வமான வீரனாயிருந்திருக்க வேண்டும். அடிமைகளைத் தங்கள் விடுதலைக்காகப் போராடச் செய்வதென்ற அபூர்வமான காரியத்தை மோஸஸ் சாதித்தான்.

யூதர்களை ஐக்கியப்படுத்தி தேனும பாலும் பெருகும் பாலஸ்தீனத்துக்கு அழைத்துச் செல்லும்படி கடவுள் வந்து கூறுவதாக மோஸஸ் அடிக்கடி கனவு கண்டான். இங்கே அதைத்தான் மக்கியவெல்லி குறிப்பிடுகிறான்.

மோஸஸ், ஸைரஸ், ரோமுலஸ், தீஸியஸ், முதலியவர்கள் அதிர்ஷ்டத்தின் காரணமாயின்றிச் சந்தர்ப்பத்தின் துணையினால் வெற்றிபெற்றதாக மக்கிய வெல்லி நினைக்கிறான். மக்களுடைய காரியங்களுக்கு அதிர்ஷ்டமும் காரணமெனபது மக்கியவெல்லியின நம்பிக்கை. 7-வது அத்தியாயத்தில் 50-ஆவது பக்கத்தில் ஸிஸர் போர்ஜியாவின் வீழ்ச்சிக்கு அதிர்ஷ்டத்தின் விபரீதமே காரணமென எழுதப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

ஸைரஸ்—அக்கெமேனியன் சாம்ராஜ்யமான ஈரானின் சக்ரவர்த்தி (கி. மு. 559) அவன் மேதியர்களுடைய ராஜ்யத்தை ஜயித்துத் தன் சாம்ராஜ்யத்துடன் சேர்த்துக்கொண்டான். கிழக்கே அவன் தனது பாரசீக சாம்ராஜ்யத்தை இந்தியாவின் எல்லை வரையில் விஸ்தரித்துவிட்டான். கி. மு. 538ல் பாபிலோனை ஜயித்தான். கி. மு. 529ல் இறந்தான்.

அவனுடைய சமாதி இன்னும் "நான்தான் அக்கேமெனியனான ஸைரஸ் அரசன்" என்ற வாக்கியத்துடன் காணப்படுகிறது.

நீடித்த அமைதியினால் மேதியர்கள் பலங்குன்றியிருந்ததும், பாரசீகர்கள் அவர்களை வெறுத்ததுந்தான் ஸைரஸின் ஜயத்திற்குக் காரணமென்று மக்கியவெல்லி நினைக்கிறான்.

ரோமுலஸ்—ரோமுலஸும் அவன் சகோதரன் ரீமஸும், ரோமாபுரியை நிருமித்தவர்களென்று கருதப்படுகிறார்கள். இரட்டையர்களான, ரோமுலஸும் ரீமஸும் குழந்தைகளாக இருக்கும்போது, டைபர் நதியில் மிதக்கவிடப்பட்டு போனதையும் அவர்களை ஒரு ஆடு பாலூட்டி வளர்த்ததையும், பிறகு அவர்கள் ஒரு ஆட்டிடையனால் கண்டெடுக்கப்பட்டு அவன வீட்டில் வளர்ந்ததையும், அவர்கள் பெரியவர்களானபின் ரோமாபுரியை நிருமித்ததையும் ரோமாபுரியின் பழங்கதை கூறுகிறது.

தீஸியஸ்—க்ரீட் நகரத்திலிருந்த மைனோடார் (Minotar) என்ற ராக்ஷஸனைக் கொன்று ஆதனியர்களை க்ரீட் அரசனின் கொடுமையினின்றும் விடுவித்த ஆதனிய வீரன், ஆதனியர்களை ஒற்றுமைப் படுத்தியவன் தீஸியஸ் என்பது பொதுவான நம்பிக்கை.

**பக்கம்—46.** மேதியர்கள்—மேதியர்களும் பாரசீகர்களும் ஈரானின் மலைப்பாங்கான மேற்குப் பிரதேசங்களில் வசித்த இரண்டு ஜாதியினர். அவ்விரு ஜாதியினரும் சேர்ந்து ஒரு சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். அது பாரசீக சாம்ராஜ்யத்திலிருந்து கருங்கடல் வரையில் வியாபித்திருந்தது. கி. மு. 559ல் ஸைரஸ் என்ற பாரசீக சக்கிரவர்த்தி தன் தேசமக்களை ஒற்றுமைப்படுத்தி ஐந்து வருஷகாலத்துக்குள் மேதியர்களுடைய ராஜ்யத்தையும் பிடித்துக் கொண்டான்.

மேதியர்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையிலிருந்த இடைவிடாத சண்டைகளை அடக்கி மேதியர்களை ஸைரஸ் வெற்றிகொண்டதை, இங்கு மக்கியவல்லி குறிக்கிறான்.

**பக்கம்—47.** ஸவோனரோலா—ரோமன் சர்ச்சில் மதத்தின் பேரால் செய்யப்படும் அட்டூழியங்களை எதிர்த்து ஜனங்களிடையே நல்லொழுக்கத்தையும், தூய்மை

யையும் உபதேசித்த ஒரு மதப்பிரசாரகன். அவன் உபதேசங்கள் மக்கள் மனதில் போப்புக்கு விரோதமாகப் புரட்சியை உண்டு பண்ணிவிட்டன, போப் அலெக்ஸாண்டர் அவனை ஜாதிப்பிரஷ்டம் செய்து கடைசியில் கொல்வித்தான்.

ஸவோனரோலா மக்களுடைய சுதந்திரம், உரிமை, வரிகள், மனிதர்களுடைய நடவடிக்கைகளில் பரிசுத்தம், முதலியவற்றைப் பற்றிப் பிரசாரம் செய்தான். அவன் சதுரனான ராஜதந்திரி யல்ல. ஆனால் அவனுடைய ஆத்மிக சக்தி அவனுக்குப்பின் வெகு நாள் மட்டும் ஜீவித்திருந்தது. சத்தியத்தில் ஆர்வம், பாபத்தில் வெறுப்பு, ஏழைகளிடம் கருணை, குழந்தைகளிடம் அன்பு, முதலிய அவனுடைய அருங் குணங்கள் எக் காலத்திலும் போற்றப் படுபவை.

இவ்வள விருந்தும் ஸவோனரோலா வெற்றி பெறாததற்குக் காரணம், அவன் பலாத்காரத்தை உபயோகிக்க முடியாமலிருந்ததுதான் என்று மாக்கியவெல்லி கூறுகிறான். மோஸஸ், ஸைரஸ், தீஸியஸ், முதலியவர்கள் ஆயுத பல மில்லாவிட்டால் தங்கள் ராஜ்யங்களை நிலை பெறச் செய்திருக்க முடியாது என்கிறான். மக்கியவெல்லி பலாத்காரத்தைப் போதிப்பதாகக் குற்றங் கூறப்படுகிறான். ஆனால் அவனுடைய வாதம் என்ன வென்றால் பலாத்கார மில்லாவிட்டால், ராஜ்ய நிர்வாகம் நிலைத்திருக்க முடியாது, ராஜாங்கத்தின் காரியங்களையும் நடத்த முடியாது என்பதாகும். ராஜாவோ அவன் அதிகாரிகளோ அதிகாரத்தைச் செலுத்த முடிந்தால் தான் நிர்வாகம் சரிவர நடக்கும். அந்த அதிகாரத்தைச் செலுத்துவதற்குப் பலாத்காரம் அவசியம் என்கிறான். பலாத்காரத்தை உபயோகிக்காமல் சட்டங்களைப் பின்பற்றும்படி மக்களை எப்படி வற்புறுத்தக்கூடும்? மனிதன் சட்டத்திற்கடங்கிப் பழகிப் போய் விட்டால் கூட தண்டனை என்ற பயம் இருக்க வேண்டுவது அவசியம். ராஜாங்கத்தை நிர்வகிக்கிறவர்களுக்குச் சமயத்தில் உதவுவதற்கு ஒரு சக்தி யில்லாவிட்டால், எந்த ராஜாங்கமும் நடக்காது என்பது மக்கியவெல்லியின் கருத்து.

இத்தாலியர் செய்த பாவத்தால் கடுங்கோபங் கொண்ட கடவுள் பிரான்ஸ் மூலமாக இத்தாலியைத் தண்டிக்கிறார் என்று ஸவோனரோலா கூறினான்.

**பக்கம்—48.** ஹீரோ—ஸிஸிலியில் கிரேக்கர்களின் நன்மையைப் பாதுகாத்த திறமையுள்ள அரசன். அவன் ரோமர்களுடைய நண்பன்.

**பக்கம்—50.** பேன்ஸா, ரிமினி—சர்ச்சுக்கு சேர்ந்தமான, ஆனால் வெனிஷியர்களுடைய கண்காணிப்பிலிருப்பவையுமான நகரங்கள்.

ஆர்ஸினி, கொலோனு—பரஸ்பர விரோதிகளான செல்வாக்கு மிகுந்த இரு பிரபு வம்சங்கள்.

**பக்கம்—51.** டியூக் வாலென்டின்—இங்கு குறிப்பிடப்படும் டியூக் வாலென்டின் என்கிற ஸீஸர் போர்ஜியா ஆருவது அலெக்ஸாண்டருடைய மகன். போர்ஜியா ரோமாஞவில் செய்தவற்றை யெல்லாம் மக்கிய வெல்லி பாராட்டுகிருன். பிரான்ஸில் போர்ஜியாவுக்கு ஆர்ஸினியரால் பேராபத்து நேரவிருந்தது. ஆனால் அந்தச் சூழ்ச்சி வெளிப்பட்டுப் போய், டியூக் ஸினிகாலியாவைக் கைப்பற்றியவுடன் (கி.பி. 1502) ஆர்ஸினி கட்சியின் தலைவர்களை யெல்லாம் தந்திரமாக வரவழைத்துக் கொன்றுன். அச் சமயம் பிரான்ஸின் தூதனுக டியூக்கிடம் வந்திருந்த மக்கியவெல்லி இதைத் தந்திரத்துக்கும் சாமர்த்தியத்துக்கும் ஒரு ஆதர்சம் என்கிறுன். டியூக் பிறர் பார்த்துப் பின்பற்றத்தக்க மஹத்துவம் வாய்ந்தவனென்பது மக்கியவெல்லியின் துணிபு.

**பக்கம்—57.** கார்டினல்—மதகுரு.

**பக்கம்—59.** ஹாமில்கார்—பிரசித்தி பெற்ற ஹானிபாலின் தந்தை.

**பக்கம்—67.** க்ராக்கி—டைபீரியஸ் க்ராகஸ் (Tiberius gracchis) காயஸ் க்ராகஸ் (Caius gracchis) என இரு சகோதரர்களும ரோமிலிருந்த சாமான்ய ஜனங்களின் (Plebians) பிரதிநிதிகள். அவர்கள் ரோமில் ராஜீயச் சீர்திருத்தங்களைக் கொண்டு வர முயன்று தோல்வியடைந்தனர். டைபீரியஸ் ரோமர்களுடைய நிலைமையை அவர்களுக்கு உணர்த்தி எழுச்சி பெறச் செய்வதற்காக மிகவும் கஷ்டப்பட்டான். "இத்தாலியில் திரிகிற மிருகங்களுக்கெல்லாம் தனதென்று இருப்பிடமும் மறை விடமும் இருக்கின்றன. ஜகத்துக்கெல்லாம எஜமானர்களென்று சொல்லிக் கொள்ளும் ரோமர்களாகிய நமக்கோ, நம்முடைய

  

தென்று சொந்தமாக ஒன்றுமே கிடையாது. என்றான். பாமரமக்கள் அவன் பேச்சை மதிக்க வில்லை. கி. மு. 133-ல் அவன் பொதுமக்களால் கொல்லப்பட்டான். பதினொரு வருஷங்களுக்குப் பிறகு காயஸுக்கும் அதே கதி நேர்ந்தது. பாமர மக்களை நம்பமுடியாதென்பதற்குக் க்ராக்கி சகோ தரர்கள் உபமானமாகக் கூறப்படுகிறார்கள்.

பக்கம்—67. ஜியார்ஜியோ ஸ்காலி—பிளாரன்ஸில் ஒரு பெரிய மனிதன்.

பக்கம்—75. பத்தாவது லியோ—மெடிஸி வம்சத்துப் போப்.

பக்கம்—78. எபாமினாண்டஸ்—தன் பாதுகாப்புக்காகக் கூலிப் படைகளை நம்பியிருக்கவேண்டிய அரசன் தோல்வியடைவான் என்பது மக்கியவெல்லியின் முடிவு. தீப்ஸ் நகரத்தை ஸ்பார்த்தர்களின் ஆதிக் கத்திலிருந்து தன் சொந்தச் சைனியங்களின் உதவி யால் காப்பாற்றிய தீப வீரன் எபாமினாண்டஸ், அதற்கு உதாரணமாகத் தரப்படுகிறான். அவன் இறந்த பின் தீபர்கள் மாஸிடோனியனான பிலிப்பை தங்கள் தலைவனாக்கிக் கொண்டனர். நாளடைவில் அவன் அவர்களுடைய ராஜ்யத்தை அபகரித்துக் கொண்டான்.

பிலிப்—(கி. மு. 359—336) மஹா அலெக்ஸாண்டருடைய தந்தை, உலக சரித்திரத்திலேயே திறமை பெற்றவர் களிலொருவன். தன் ராஜ்யத்தைப் பெருமை வாய்ந்த தாகச் செய்ய வேண்டுமென்ற ஆவலுடையவன். ஏதென்ஸூம் தீப்ஸூம பலங்குன்றி யிருந்ததால் கொஞ்சங் கொஞ்சமாய் கிரீஸை ஜயிப்பதற்கு அவ னுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஆதனியன் லீக்கைக் கலைத்து விட்டான். கி. மு. 336-ல் அவன் கொல்லப்பட்டான.

பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா—25-வது பக்கம் குறிப்பு பார்க் கவும்.

பக்கம்—78. அரகான்—பெர்டினண்ட்.

பக்கம்—79. ஸர் ஜான் ஹாக்வுட்—பிளாரன்ஸ் சைனியங் களுக்குத் தலைமை வகித்த ஆங்கில ஜெனரல்.

பக்கம்—79. பாலோ விடலி—பைஸாவைத் தாக்குவதற் காகப் பிளாரன்டின்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட

தளபதி (கி. பி. 1498.) விடலி பைஸாவைப் பிடிக்க முடியாததால், தன் உயிரை யிழக்க வேண்டிய தாயிற்று.

**பக்கம்–80.** கார்மந்னேலா—வெனிஷியர்களுடைய சேனைகளுக்குத் தலைமை வகித்த கூலித் தளபதி. அவன் தகுதி யற்றவனென்று கண்டபின் வெனிஷியர்கள் அவனைக் கொல்வித்தனர்.

**பக்கம்–83.** ஜூலியஸ்—(26-ம் பக்கம் குறிப்பு பார்க்கவும்)

கான்ஸ்டான்டிநோபிள் சக்கிரவர்த்தி—ஆட்டோமன் சக்கிரவர்த்தியாகிய இரண்டாவது மகம்மது.

ஹீரோ—(48-ம் பக்கம் குறிப்பு பார்க்கவும்)

**பக்கம்–85.** பழைய ஏற்பாடு—பைபிளில் கிறிஸ்து பிறக்கும் வரையில் யூதர்களின் வரலாற்றைக் கூறும் பாகம். தாவீது—கி. மு. 1000–ல் ஹீப்ருக்கள் அல்லது யூதர்கள் எனப் படுவோர் தங்களுடைய முதல் அரசனாக ஸால் என்பவனைத் தெரிந் தெடுத்தனர். அவன் ஒரு கூடாரத்தில் வசித்து யூதர்களைப் பார்த்து காத்து வந்தான். அவனுக் கடுத்தபடி அரசை யேற்ற தாவீது கூடாரத்தைக் காட்டிலும் நிலையான ஒரு குடியிருக்குமிடம் வேண்டிய அவசியத்தையும், நகரத்தின், தேவையையும் உணர்ந்து ஜெருஸலேம் நகரைக் கைப்பற்றினன். ஜெருஸலேமிலிருந்து பாலஸ்தீனத்தின் பெரும் பாகத்தை ஜயித்து விட்டான். அன்றிலிருந்து இன்று வரையில் ஜெருஸலேம் அந் நாட்டில் மிக முக்கியமான ஸ்தலமாக விளங்குகின்றது.

தாவீது ஹீப்ரு இலக்கியங்களில் ஒரு பெரிய வீரனாயும், கவிஞனாயும் கொண்டாடப் படுகிறான். அவன் வீரர்களுக்குள் வீரன்; சிறு பிள்ளையாயிருக்கையிலேயே பிலிஸ்தியர்களின் அரசனும் ராக்ஷஸ பல முடையவனுமான கோலியாத்தை ஜயித்தான்.

**பக்கம்–87.** காத்தியர்கள்—ஜெர்மன் நாட்டுப் பழங்குடிகள். இவர்கள் மூன்றாவது, ஐந்தாவது நூற்றாண்டுகளில் இத்தாலி, பிரான்ஸ், ஸ்பெயின், முதலிய நாடுகளில் ராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொண்டார்கள். ரோம சாம்ராஜ்யம் அவர்களுடைய கொள்ளைகளுக்கு இலக்காயிற்று.

பக்கம்—88. பிரான்ஸிஸ்கோ ஸ்போர்ஸா—25-ம் பக்கத்துக் குறிப்பைப் பார்க்கவும்.)

பக்கம்—89. பிலோபோமன்—அக்கேயன் லீகின் பலம் மிகுந்த தலைவன். அக்கேயசைனியத்தின் உபயோக மற்ற தன்மையைக் கண்டு, அச் சைனியத்துக்கு மிகச் சிறந்த பயிற்சியை அளித்தான். ஒன்றுக்கும் உதவாமலிருந்த சைனியத்தை சிரீஸிலேயே மிகச் சக்தி வாய்ந்ததும் ஒழுங்குள்ளதுமாகச் செய்து ஸ்பார்த்தர்களை வெற்றிகொண்டான். ஸ்பார்த்தர்கள் அக்கேயன் லீகுடன் கி. மு. 206—ல் சமர்தானம் செய்துகொண்டார்கள்.

பக்கம்—90. ஆகிலஸ்—"இலியட்" காவியத்தில் கூறப் பட்டிருக்கும் மிக்ச் சிறந்த வீரன்.

சைரஸ்—45-ம் பக்கத்துக் குறிப்பைப் பார்க்கவும்.

ஸீஸர்—ரோம சக்கிரவர்த்தியான ஜூலியஸ் ஸீஸர் பெரிய ஜயசாலி. ராஜ தந்திரத்திலும் ராஜ்ய நிர்வாகத்திலும் மிகச் சிரேஷ்டமானவன். அவன் ஒரு கான்ஸல் அதாவது மாஜிஸ்ட்ரேட்டாக வாழ்க்கையை ஆரம்பித்தான். பிறகு அவன் கால் (பிரான்ஸ்) பிரிட்டன், இரண்டையும் ஜயித்து எகிப்துக்குச் சென்றான். அங்குதான் க்ளியோபாட்ராவை சந்தித்தான். எகிப்தை வெற்றிகொண்டு ஆசியாமைனரில் பார்த்தியர்களையும் பிறகு ஸ்பெயினையும் ஜயித்தான். அவன் பல யுத்தங்களைப் புரிந்தான். நூல்களை எழுதினான். சட்டங்களை வகுத்துச் சாம்ராஜ்யத்தை நன்ருக நிர்வகித்தான். அப்போதைய உலக முழுவதையும் சுற்றிவந்து ஜய ஸ்தம்பம் நாட்டினான். ஆனால் ரோமுக்கு அவனைக் கண்டால் பிடிக்காமல் கி. மு. 441—ல் அவன் கொல்லப்பட்டான்.

ஸிபியோ—திறமை மிகுந்த ரோம வீரன். ஸ்பெயினில் கி. மு. 206-ல் கார்த்தஜினியர்களை ஜயித்து, அவர்களைத் துரத்திப் பிரசித்தி பெற்றான். அவ்வருஷம் ரோம் அவனுக்கு ஸிஸிலி மாகாணத்தைக் கொடுத்து, கார்த்தேஜ் ராஜ்யத்தை அங்கிருந்து எதிர்ப்பதற்குச் சௌகரியம் செய்தது. கி. மு. 204-ல் அவன் ஆப்பிரிக்காவில் பிரவேசித்து கி. மு. 202-ல்

ஜாமா (Zama) யுத்தத்தில் ஹானிபாலைத் தோற்கடித்தான். இதனால் அவனுக்கு ஆப்ரிகானஸ் என்ற பட்டப் பெயர் கிடைத்தது.

**ஸைரஸ்—இளையவன்.** இரண்டாவது டாரயஸின் இளைய மகனான ஸைரஸ், மேற்கு ஆசியா மைனரில் அரசு புரிந்தான். பரசிக சிம்மாசனத்தைத் தானே பெறும் ஆவல்கொண்டு, ஸ்பார்த்தத் தலைவன் லைஸாண்டருடன் நட்புக்கொண்டான். ஸ்பார்த்தா வெளிப்படையாக அவனுக்கு உதவி செய்யவில்லை யென்றாலும், இரகசியமாய் உதவி செய்தது. கி. மு. 401-ல் ஸைரஸ் லக்ஷம் ஆசியத் துருப்புகளும், பதின் மூன்றாயிரம் கிரேக்கக் கூலி வீரர்களையும் கொண்ட சைனியத்துடன், பாரசீகத்துக்குப் புறப்பட்டான். அந்த முயற்சியில் பங்கெடுத்துக்கொண்ட க்ஸினோபன் (Xenophon) அனபாஸிஸ் (Anabasis) என்ற புத்தகத்தில் ஸைரஸ் பாரசீகத்துக்குச் சைனியங்களை நடத்தி சென்றதையும், பாபிலோனுக்கருகில் ஆசியப் படைகளுடன் போராடியதையும், அவன் கொல்லப்பட்டு, சைனியங்கள் கலைந்து ஓடிவிட்டதையும் வர்ணித்திருக்கிறான்.

**க்ஸினோபன்—**பெயர் பெற்ற கிரேக்க சரித்திர ஆசிரியன். அவன் இலக்கியத்தில் ருசியுள்ள ஒரு சாதாரண கிராமவாசி. யௌவனத்தையும் நடுவயதையும் ராணுவசேவையில் கழித்தான். அவன் கண்ணால் பார்த்ததை அழகுபெற எழுதும் வன்மை பெற்றவன். அவனுடைய அனபாஸிஸ் என்னும் புஸ்தகம் இளைய ஸைரஸின் பாரசீகப் படையெடுப்பை விவரிக்கிறது. மெமோரபிலியா (Memorabilia) என்பது அவனுடைய மற்றொரு அருமையான நூல். அவன் நூல்களிலெல்லாம் சிறந்தது ஹெல்லனிகா (Hellenika) என்னும் கிரேக்க சரித்திரமாகும்.

**பக்கம்–90.** மஹா அலெக்ஸாண்டர் ஆகிலஸையும், என்று ஆரம்பிக்கும் வாசகம்:—மக்கியவெல்லியின் கொள்கைப்படி ஒரு ராஜா சரித்திரத்தைப் படித்தும், பெரிய அரசர்களுடைய செயல்களையும் போர்முறைகளையும் பற்றித் தெரிந்துகொண்டும், அவர்களுடைய வெற்றிக்கு உதவியாயிருந்த உபாயங்களைக் கைக்கொள்ள வேண்டும். மஹா அலெக்ஸாண்டர் பிரக்யாதிபெற்ற கிரேக்க வீரனான ஆகிலஸைப்

பின்பற்றியதால், வெற்றிபெற்றான். ஸீஸர் தன் திக் விஜயங்களில் அலெக்ஸாண்டரையும், ஹானிபாலை ஜயித்த ஸிபியோ ஆப்ரிகானஸ் தூய்மை, மனிதத் தன்மை, முதலிய குணங்களுக்கு ஸைரஸையும் பின்பற்றினார்கள்.

மனிதன் தானாக ஒன்றும் புதிதாய்ச் செய்துவிட முடியாதென்றும், பிறரை அநுசரிப்பதால்தான் மகத்தான காரியங்கள் சாதிக்கப் படுகின்றன என்றும் மக்கியவெல்லி கூறுகிறான்.

**பக்கம்—73.** தந்போதைய அரசன்—பன்னிரண்டாவது லூயி. 27-ம் பக்கக் குறிப்பு பார்க்கவும்.

**பக்கம்—91.** பதினைந்தாம் அத்தியாயத்தைப்பற்றி ஒரு குறிப்பு—

இந்த அத்தியாயந்தான் விமர்சகர்களால் எல்லாவற்றையும்விட அதிகமாய்க் குற்றங் கூறப்படுகிறது. இதில் தான் மக்கியவெல்லி ராஜதந்திரத்துக்கு மூலாதாரமான குணங்களை எடுத்துரைத்து, ஒரு அரசன் தன் ராஜ்யத்தை எவ்வாறு ஆண்டுவரவேண்டும், குடிகளுடன் எப்படிப் பழகவேண்டும், என்பவற்றை விளக்குகிறான். முன் அத்தியாயங்களில், சொந்த சைனியம் வைத்துக்கொள்வதும், பெரியோர் செயல்களை அநுசரிப்பதும் எவ்வளவு இன்றியமையாதது என்பதை விவரித்தான். இரயோசித்தபின் அவன், ஒரு ராஜா குரூர குணமுள்ளவனுயும், குடிகளால் அஞ்சப்படுகிறவனுயும், அவசியமானபோது பலாத்காரத்தைப் பிரயோகிக்கிறவனுயும், இருக்க வேண்டும், என்ற முடிவுக்கு வருகிறான். இதைப் பார்த்தால் அவன் எதேச்சாதிகாரத்தை ஆதரிப்பதாகத் தோன்றும். மனிதர்கள் இயற்கையில் பொல்லாதவர்களாயும் நன்றியற்றவர்களாயுமிருத்தலால், அவர்களை ஒரு வலிமையுள்ள அரசன்தான் ஆள வேண்டும். ஏனெனில் கட்டாயப படுத்தப்பட்டாலன்றி அவர்கள் கீழ்ப் படியமாட்டார்கள், என்ற முடிவுக்கு அவன் வந்த காரணம் அவனுடைய காலத்தில் இத்தாலியர்கள அத்தன்மையராய் இருந்தது தான். அவர்களுக்குள் ஐக்கியமுண்டாக்கிக் கைதூக்கிவிடுவது, அவர்களை யடக்கி, அச்சத்தில் வைத்து ஆளும் கண்டிப்புள்ள அரசனால் தான் கூடும் என்கிறான்.

இதற்குச் சரித்திரத்திலிருந்து ஹானிபாலின் உதாரணத்தைத் தருகிறான். ஹானிபாலுடைய மற்ற திறமைகளுடன் மிருகத்தனமாக் குரூர குணமும் சேர்ந்திருந்ததால் தான், அவன் தன் போர் வீரர்களுடைய மதிப்பையும் வணக்கத்தையும் பெற்றான். அதற்கு மாறாக ஸிபியோ மஹா வீரனானாலும் தன் வீரர்களைக் கட்டுப் பாட்டில் வைக்காமல் அவர்களுடைய அன்பையே பெரிதும் நம்பியிருந்தான். அவன் ஒரு அரசனாயிருந்திருந்தால், இந்தத் தாக்ஷண்யகுணம் அவனைக் கவிழ்த்திருக்கும் என்கிறான்.

**பக்கம்—97.** வர்ஜில்—ரோம கவி.

**பக்கம்—99.** ஹானிபால் — ஹாமில்காரின் புதல்வனான ஹானிபால் கி. மு. 221-ல் கார்த்தஜீனியர்களுடைய தலைவனானான். அவன் இளமை முதற் கொண்டே ரோமை வெறுத்துச் சத்ருவாக மதித்தான். ரோமைத் தோற்கடித்து அடக்கவேண்டுமென்பது அவனுடைய பேரவா. தரை வழியாக இத்தாலிக்குள் தன் படைகளை நடத்திச் சென்று, ரோம் தடுக்க முயல்வதற்குள், திடீரென்று தாக்கி, ரோம சைனியத்தின் ராணுவ கௌரவத்தையும் திடத்தையும் அழித்து விட வேண்டுமென்பது அவன் யோசனை. ரோமை அடக்கி விட்ட பிறகு இத்தாலியர்களுக்குத் திரும்பவும் சுதந்திரமளிப்பதாய்க் கூறிச் சமாதானப் படுத்தி விடலாமென்றெண்ணினான். இருபதினாயிரத்தை விடக் குறைந்த தொகையுள்ள போர் வீரர்களுடன் அவன் இத்தாலிக்குள் பிரவேசித்தான். அவனுக்கு எதிர்ப்பு மிகவும் பலமாயிருந்தது. ஆயினும் அவன் கிட்டத்தட்ட தன் நோக்கத்தை நிறைவேற்றும் நிலையிலிருந்தான். ரோமர்களைப் பல பெரிய யுத்தங்களில் ஜயித்து முறியடித்தான். ஆயினும் ரோமை அசைக்க முடியவில்லை. ரோம் எந்தக் கஷ்டத்தையும் பொருட்படுத்தவில்லை. எதற்கும் அஞ்சவில்லை. ரோமாபுரியின் குடியானவர்களும், நகர வாசிகளும், கூடத் தங்கள் சொந்த நாட்டுக்காகப் போர் புரிய ஆவேசத்துடன் முன் வந்தனர். ஹானிபாலின் சைனியமோ ஏழு வித அன்னிய ஜாதியினரைக் கொண்டது. (ஹிட்லருடைய மாஸ்கோ தாக்குதலை

ஒப்பிடவும்) இந்த எதிர்ப்பைத் தாங்க முடியாமல் ஹானிபால் ரோமை ஜயிக்கும் எண்ணத்தைக் கை விட்டு ஆப்பிரிக்காவுக்குத் திரும்பியதும், அங்கே ஸிபியோவால் தோற்கடிக்கப்பட்டு ரோமர்களுடைய கையில் அகப்பட்டுக் கொள்ள விரும்பாமல் விஷத்தை யுண்டு மாண்டான்.

மறுக்க முடியாத ஆதாரங்களின் மேல், ஹானிபால் சரித்திரத்தில் நாம் அறிந்துள்ள மிகச் சிறந்த மேதாவிகளில் ஒருவன் என்று கருதப்படுகிறான். தந்திரம், யுக்தி, மனிதர்களுக்குப் பயிற்சி யளித்தல், முதலியவற்றில் அவன் மஹா அலெக்ஸாண்டர், ஜூலியஸ் ஸீஸர், நெப்போலியன், முதலியவர்களுக்கு நிகரானவன் என்பதை அவன் வீரச் செயல்கள் நிரூபிக்கின்றன.

**பக்கம்—100.** பேபியஸ் மாக்ஸிமஸ்—ரோம சரித்திரத்தின் முதலாவது சர்வாதிகாரி (டிக்டேடர்.)

**பக்கம்—106.** நபிஸ்—ஸ்பார்த்தா அரசன்.

**பக்கம்—108.** பேன்டிவோக்லி—போப் ஜூலியஸால் ஜாதிப் பிரஷ்டம் செய்யப்பட்ட அரசவம்சம். ஜியோவானி ஸாலோனாவை ஆண்டவர்களுக்குள் மிகத் திறமை வாய்ந்தவன். போப் ஜூலியஸ் அவனைத் துரத்திவிட்டுப் பெர்லோனாவைத் தன் ராஜ்யத்துடன் சேர்த்துக்கொண்டான்.

**பக்கம்—110.** மார்க்கஸ்—தத்துவ ஞானி மார்க்கஸ் அவுரீலியஸ் கி. பி. 161-ல் ரோமச் சக்கிரவர்த்தியானான். கி. பி. 180-ல் இறந்தான். அவன் மிகவும் சாமர்த்தியசாலி, பருவநிலையின் சீர்கேடு, பலவருஷகாலம் வெள்ளம், பஞ்சம், சாலைகளின் வசதியின்மை, இவ்வளவு தடங்கல்களிலிருந்தும் அவன் மக்களை ஒழுங்காகப் பரிபாலித்து வந்தான். நாட்டிற்கு நலம் தரும் செய்கைகள் பல செய்தான். அரசாங்கத்தின் செலவைக் குறைத்தான். குரூரமான விளையாட்டுக்களைத் தடுத்தான். ரஸ்தாக்களைத் திருத்திப் போக்கு வரத்துச் சாதனங்களை விருத்தி செய்தான். அவனுடைய தேக சௌக்கியத்தை விடக் கடமையையே பெரிதெனக் கொண்டு குடிகளுக்குத் தொண்டுபுரிந்தான். அவன்

"மெடிடேஷன்ஸ்" (சிந்தனைகள்) என்ற பெருமை வாய்ந்த நூலின் ஆசிரியன். ரோம சக்கிரவர்த்திகளுக்குள் அவனே தலை சிறந்தவன். அவனுக்குப் பின் வந்த மக்கியவெல்லியால் குறிப்பிடப்பட்ட சக்கிரவர்த்திகள் தகைக்குதவாதவர்கள். மார்க்கஸின் உத்தம குணமும் கூரிய அறிவும் ஒருவருக்கராவது கிடையாது. அவர்கள், ராஜ்யாதிகாரத்தை உண்மையில் வகித்த ப்ரேடோரியன் கார்ட் என்கிற சைனிகர்களுடைய கைப் பொம்மைகளாக விருந்தனர். மார்க்கஸின் மகன் கி. பி. 193-ல் கொல்லப் பட்டான். பெர்டினுக்ஸ் ப்ரேடோரியன் கார்டால் கொலை செய்யப்பட்டான். ஜூலியானஸ் ப்ரேடோரியன் கார்டின் சகாயத்தால் சக்கிரவர்த்தியாகி 2 மாதங்களுக்குள் கொல்லப்பட்டான். அதன்பின் ப்ரேடோரியன் தலைவனான ஸெவரஸ் சக்கிரவர்த்தியானான்.

**பக்கம்—110.** ஸெவரஸ்—மக்கியவெல்லி ஸெவரஸிடம் நரி, சிங்கம் இவற்றின் தன்மைகளைக் கண்டு குடிகள் மனதில் பயத்தை விளைத்து அடக்கி யாளுவதில் அவன் ஆதர்சமான மன்னன் என்கிறான். மற்ற சக்ரவர்த்திகளுக்கு ஸெவரஸின் சாமார்த்தியமோ அல்லது மார்க்கஸின் பரம்பரைச் சொந்தமோ இல்லாததால் வெற்றி கிடைக்கவில்லை.

**பக்கம்—113.** ப்ரேடோரியன் கார்ட்—மார்க்கஸ் இறந்தபின் ப்ரேடோரியன் கார்ட் என்ற போர் வீரர் கூட்டம் அரசர்களை ஆக்கவும், அழிக்கவும் வல்ல ஆற்றலுடையதாயிற்று. அவனுக்குப் பின் வந்த சக்ரவர்த்திகளை அக்கூட்டம் இஷ்டம்போல் ஆட்டி வைத்தது.

**பக்கம்—117.** துருக்க அரசன்—ஆட்டோமன் சக்ரவர்த்தி.

**பக்கம்—124.** போர்லி சீமாட்டியாகிய—காடரினா ஸ்போர்ஸா தன் கணவனான ஜிரோலா மோரியாரியோ இறந்தபின் போர்லியைக் கடுமையுடன் ஆண்டுவந்தாள். ஸீஸர் போர்ஜியா போர்லியை முற்றுகையிட்ட போது மக்கள், அவள் கடவுளால் தங்களைக் கொடுங் கோன்மையினின்றும் காப்பதற்காக அனுப்பப்பட்ட தூதுப்பெண் என்று மதித்தார்கள். போர்லி

கி. பி. 1500-ல் ஸீஸர்போர்ஜியாவுக்குப் பணிந்தது. போர்லி சீமாட்டி ரோமுக்கு அனுப்பப்பட்டுக் கௌரவத்துடன் நடத்தப்பட்டாள்.

பக்கம்—125. க்ரானடா—ஸ்பெயினில் மகம்மதியர் வசமிருந்த ராஜ்யம். பார்டினண்ட் காஸ்டில் ராஜ்யத்துக்கு வாரிசான இஸபெல்லாவை மணந்தபின் இருவருமாகச் சேர்ந்து பதினோரு வருஷங்கள் யுத்தம் நடத்தி க்ரானடாவை ஜயித்து மேற்கு ஐரோப்பாவை மகம்மதியர் ஆட்சியினின்றும் மீட்டனர்.

பக்கம்—127. ஆரடர்கள்—பேச்சு வன்மை மிக்க பண்டிதர்கள்.

பக்கம்—142. இருபத்தாறுவது அத்தியாயம் :—ராஜாவுக்கு அரசாளும வழிகளையும் சாதனங்களையும் விளக்கிக் கூறியபின், மக்கியவெல்லி இத்தாலியின் அப்போதைய நிலைமைக்கு ஒரு பலசாலியான அரசனுடைய ஆட்சி தேவையல்லவா என்று கேட்கிறான். மோஸஸ், ஸைரஸ், திஸியஸ் முதலியவர்கள் காலத்தில் முறையே எகிப்து, பாரசீகம், ஏதென்ஸ் ஆகிய நாடுகள் இருந்த ஸ்திதிக்கும் (45-ம் பக்கக் குறிப்புகள்) தற்காலத்தில் இத்தாலியிருக்கும் நிலைமைக்கும் ஒற்றுமை காண்கிறான். எகிப்திய மன்னர்களின் கொடுங்கோன்மைதான் மோஸஸ் இஸ்ரவேலின் ஜனங்களை ஒற்றுமைப்படுத்தி, ஜெருசலேமுக்கு அழைத்துப் போவதற்குச் சாதகமாகவிருந்தது. பாரசீகர்களை மேதியர்கள் துன்புறுத்தியிராவிடில், ஸைரஸ் அவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தை நிறுவியிருக்க முடியாது; திஸியஸுக்கு முன்னால் ஆதனியர்கள் ஐக்கியமின்றி க்ரீட் நகரவாசிகளின் கொடுமைக்காளாயிருந்தார்கள். திஸியஸ் ஆதனியர்களை ஒன்றுசேர்த்து க்ரீட்டின் பிடிப்பிலிருந்து விடுவித்தான்.

இத்தாலி அன்னியரால் பாழாக்கப்பட்டும், அதன் மக்கள் ஒடுக்கப்பட்டு ஒற்றுமை யிழந்து சுதந்திர உணர்ச்சியற்றவர்களாயுமிருப்பதைக் கண்டு மக்கியவெல்லி ஒரு வலிமை மிக்க புதிய அரசன் வருவதற்கு இதுதான் தக்க சமயம் என்கிறான்.

**பக்கம்–142.** நன் முயற்சியின் சிகரத்திலிருந்து etc—இங்கே ம்க்கிய வெல்லி குறிப்பிடுவது ஸீஸர் போர்ஜியாவை யாயிருக்கலாம்; அல்லது இத்தாலியில் ஒற்றுமையை ஏற்படுத்த முயன்று அது கைகூடுமுன் இறந்த லொரென்ஸோ டி மெடிஸியையாயிருக்கலாம்.

**பக்கம்–147.** பெட்ரார்க்—பிரசித்திபெற்ற பிளாரன்டைன் கவி.

---

Printed at The Indian Express Branch Press, Madras

